# கண்டேன் கைலாசம்

## Kailash: A Journey of Lifetime

டொக்டர் 'லண்டன் அம்பி'



கண்டேன் கைலாசம் • ஆரியர்: டொக்டர் ‘லண்டன் அம்பி’ • © ஆசிரியர் • முதல் பதிப்பு: ஜூலை 2019 • வெளியிடுவோர்: தமிழியல், லண்டன்.

**Kanden Kailasam** • Kailash: A Journey of Lifetime • Author: Dr. London Ambi © Author • Languages: Tamil and English • First Edition: July 2019 • Size: Demy 1 x 8 • Paper: 18.6 kg maplitho • Pages: 300.

Published by Tamiliyal, 27-B, High Street, Plaistow, London E13 0AD, United Kingdom. Phone: + 44 203 842 9417. e-mail: pathmanabhan@gmail.com & aonedoctor@hotmail.com.

Production by Kalachuvadu Publications Pvt. Ltd., 669 K.P. Road, Nagercoil 629001, India • Phone: 91-4652-278525 • e-mail: publications@kalachuvadu.com • Wrapper Printed at Print Specialities, Chennai 600014 • Printed at Mani Offset, Chennai 600077.



டொக்டர் 'லண்டன் அம்பி'

இந்நூலாசிரியர் டொக்டர் அம்பிகாபதி ("லண்டன் அம்பி") இலங்கையில், யாழ். கந்தர்மடம் ஸ்ரீசித்தி விநாயகர் கோவில் ஸ்தாபகர் சிவஸ்ரீ பரமேஸ்வர ஐயர் – சரஸ்வதி அம்மா தம்பதியரின் இளைய புத்திரனாக உதித்தார்.

யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியில் இளமைக் கல்வி பயின்ற பின்னர், பேராதனைப் பல்கலைக்கழகத்தில் மருத்துவராகப் பட்டம் பெற்றார். மலையகப் பகுதிகளில் மருத்துவராகக் கடமையாற்றியதைத் தொடர்ந்து, பேராதனை மருத்துவக் கல்லூரியில் உடற்கூற்றுத்துறை (Anatomy) விரிவுரையாளராகப் பணிபுரிந்தார். பின்னர் யாழ்ப்பாண மருத்துவக் கல்லூரி ஆரம்பித்தபோது, உடற்கூற்றுத்துறையை ஸ்தாபிக்கும் பொருட்டு விரிவுரையாளராகவும் தலைவராகவும் நியமிக்கப்பட்டார்.

இலங்கை வாழ்வில் பல்வேறு பத்திரிகைகளில் மருத்துவ சம்பந்தமான கட்டுரைகளை எழுதியும், இலங்கை வானொலியில் மருத்துவக் கருத்துக்களையும்

வழங்கியுமுள்ளார். கவிதைகள் புனைவதிலும் இவருக்கு ஆர்வமுண்டு.

1980 முதல் இங்கிலாந்தை வதிவிடமாக்கிக்கொண்டு, பல்வேறு மருத்துவத்துறைகளில் பணியாற்றினார். இயற்கை வைத்தியத்தில் மெத்த இருக்கக்காணும் இளைப்பாறிய குடும்ப வைத்தியர். சனாதனதர்மத்தில் மிக்க ஆர்வங்கொண்ட இவர், அதில் உள்ள நுட்பங்களை அறிவதில் ஆர்வங்கொண்டு, வியற்நாம், இந்தோனேசியா, கம்போடியா உட்பட பலவிடங்களுக்கும் சுற்றுப் பிரயாணங்கள் மேற்கொண்டார். அவரது அனுபவங்களில் தமது கைலை தரிசனத்தின் அனுபவங்களை இந்நூல்மூலம் பகிர முற்பட்டுள்ளார்.

கைலை தரிசனம் பற்றி முன்னரே பல நூல்கள் வெளிவந்திருப்பினும், ஒவ்வொரு அனுபவமும் சுற்றாடல், காலம், தொழில்நுட்பங்கள் இத்தியாதி வேறுபாடுகளினால் பல்வேறு நூதனங்களைக் கொண்டிருக்கும். இதன்மூலம் உதித்ததே இந்தப் படைப்பு.

# சமர்ப்பணம்



சரஸ்வதி அம்மா



ஸ்வர்க்க ஸ்ரீ
பரமேஸ்வரக் குருக்கள்

எங்கள் குலதெய்வம், யாழ்ப்பாணம் கந்தர்மடம் ஸ்ரீ சித்திவிநாயகப் பெருமான், கருணையால் என்னைப் பெற்று, வளர்த்தெடுத்து, கல்விபுகட்டி ஆளாக்கிய என் தாய் தந்தையர்க்கு இந்நூலைச் சமர்ப்பிக்கிறேன்.



அடியேனை ஆன்மீகப் பாதையில் வழிகாட்டி, பேருதவியாயிருந்த சற்குரு ஜக்கி வாசுதேவ் அவர்களுக்கும் இந்த நூலை ஆழ்ந்த நன்றியுடன் சமர்ப்பிக்கிறேன்.

## உள்ளடக்கம்

# நன்றி

மலைகள் ஏறுதற்கு, தனியானதொரு ஆர்வமும் உடற் திண்மமும் வேண்டும். இதற்கு நீண்ட இடைவிடாப் பயிற்சியும் அவசியம். உலகின் மானுடரால் ஏறக்கூடிய அதிஉயர்ந்த மலையான ஆபிரிக்காவிலுள்ள 'கிலிமஞ்சாரோ', சரித்திரப் பிரசித்திபெற்ற தென் அமெரிக்க நாடான "பெரு" எனும் ஊரிலுள்ள "மாச்சு பிச்சு" மலையும் கால் நடையில் ஏறுதற்கு நல்ல உதவியாயிருந்தன. இவற்றுடன் ஆரம்பமாகி, அருள்மிகு கைலைத் தரிசன பன்னாட் கனவை நனவாக்கிய பெருமை, எனது பால்ய, ஆப்த நண்பர் பேராசிரியர் சுவாமிநாதனையே சாரும். அவருக்கு என்றென்றும் ஆழ்ந்த நன்றியுடனிருக்கக் கடமைப்பட்டுள்ளேன்.



எனது உடல் நிலை, வயது ஆகியவற்றுடன் பல்வேறு நிலைமைகளைக் கருத்திற்கொண்டு எழுந்த பற்பல சந்தேகங்களைத் தீர்த்து, எனது வாழ்நாள் பிரார்த்தனைக்குப் பரிகாரம் சமைத்த கைலை பாலாவிற்குப் பல்கோடி நன்றிகள்.

பலரது கைலை யாத்திரைபற்றி முன்னரும் பல்வேறு வெளியீடுகள் தோன்றியிருப்பினும், எனது நூதன அனுபவங்களை இன்றைய நிலைமைகளுக்கேற்ப எமது சந்ததியினருக்கு எழுத்துவடிவில் தொகுத்து இந்நூலை வெளியிட அனுமதித்தமைக்கும் அன்னாருக்கு நன்றி நவிலக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆன்மீக எண்ணங்களை உருவாக்கி, சிந்திக்கவைத்து, ஊக்குவித்து கைலை யாத்திரைக்கு வித்திட்ட பெருமை அருள்மிகு சற்குரு அவர்களுக்கே. கைலை–மானஸரோவர் யாத்திரைபற்றி சற்குரு பல சந்தர்ப்பங்களில்



எடுத்துரைத்துள்ளார். சற்சங்கங்களில் எடுத்துரைத்து, ஆவலைத்தூண்டி இருதடவைகள் கைலை தரிசனம் செய்யவைத்த பெருமை சற்குருவையே சாரும்; அப்பேரருளாளருக்கு நன்றிகூறி மாளாது என்பது அடியேனது உளப்பாடு.

பிரதிகளை அவ்வப்போது வாசித்து, திருத்தங்கள்/ஆலோசனைகள் வழங்கிய நண்பர்கள் திருவாளர்கள் டாக்டர் தி. ஞானசேகரன் (ஆசிரியர், "ஞானம்"), ஈழம் தந்த பா. இரத்தினசபாபதி ஐயர், லண்டன் "கலசம்" ஆசிரியர் க. ஜெகதீஸ்வரம்பிள்ளை, லண்டன் தமிழ் – ஆன்மீக ஆர்வலர், நண்பர் சிவா பிள்ளை, பேராதனைப் பல்கலைக்கழக விரிவுரையாளர் செல்லத்துரை சுதர்சன், லண்டன் பத்மநாப ஐயர் ஆகியோருக்கு விசேட நன்றிகள்.

பற்பல வேளைகளில் பாரிய பொறுமையுடன் எழுதும்போதெல்லாம் பலவகைகளில் ஊக்கமளித்த அன்புத் துணைவியார் ஜெயலக்ஷ்மிக்கு வாழ்நாள் நன்றிகள் பல.

இந்நூலை, கவர்ச்சிகரமான முறையில் வடிவமைத்துத்தந்த திரு. ராமநாதன் அவர்களுக்கும், அழகான முறையில் பதிப்பித்த காலச்சுவடு பதிப்பகத்தினருக்கும் மனமார்ந்த நன்றிகள்.

**டொக்டர் (கைலை) பரமேஸ்வர ஐயர் அம்பிகாபதி**
**(லண்டன் அம்பி)**

# மதிப்புரை

க. ஜெகதீஸ்வரம்பிள்ளை
(லண்டன் "கலசம்" பத்திராசிரியர்)



மருத்துவர் அம்பிகாபதி அவர்கள் தம்முடைய கைலை யாத்திரையை நிறைவுசெய்தபின், "கண்டேன் கைலாசம்" என்ற நூலை எழுதியுள்ளார். சுமார் *300* பக்கம் கொண்ட இந்த நூலைக் கையில் எடுத்துப் படிக்கத் தொடங்கியதும் ஒரே மூச்சில் படிக்கவேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது; படித்தேன். கவிஞர் கண்ணதாசனின் பாணியில், படித்தேன், சுவைத்தேன், மலைத்தேன் என மலைத்தேன், மகிழ்ந்தேன் என, இந்த நூலை வர்ணிக்கலாம்.

யாத்திரைக்குப் புறப்பட்டு, இலண்டன் விமான நிலையத் திலிருந்து விமானத்தில் ஏறியது முதல், திரும்ப இலண்டன் வந்து இறங்கியதுவரை தம்முடைய கைலைப் பயணத்தை மிக அழகாக, விரிவாக ஆசிரியர் விவரித்துள்ளார். யாத்திரை போவதற்கு முன்னர் செய்த பயண ஏற்பாடுகள்பற்றியும் எழுதியுள்ளார்.

ஒவ்வொருநாள் நிகழ்வுகளையும் ஒவ்வொரு தலைப்பின்கீழ் எழுதியுள்ளமை நூலுக்கு ஓர் ஒழுங்கு வடிவைக் கொடுக்கிறது. மிகத் தெளிவாக, இனிய தமிழில், இலகு தமிழில் ஆசிரியர் எழுதியுள்ளார். அன்றாட நிகழ்வுகளில், ஒவ்வொரு

நிகழ்வையும் விவரமாக, அழகாக, சுவையாக எழுதியிருப்பது பாராட்டுக்குரியது. உணவு, தங்குமிடம், பயணம், கடைத்தெரு அநுபவம், திபெத்து – சீன எல்லை அநுபவம், உடலில் ஏற்பட்ட மாற்றங்கள் என ஒரு விவரமும் தவறாமல் அனைத்தையும் சுவைபடப் பதிவு செய்துள்ளார். ஆரம்பத்தில் அப்பர் சுவாமிகளின் கைலை யாத்திரையைக் குறிப்பிட்டு அதிலிருந்து தன் யாத்திரையைத் தொடங்கிய விதமும் நன்றாக உள்ளது.

யாத்திரைக்கு உகந்த காலம், யாத்திரையில் எதிர் கொள்ளக்கூடிய பிரச்சினைகள், எதிர்பார்க்க வேண்டிய காட்சிகள், எடுக்கவேண்டிய முன்னேற்பாடுகள் என, நூல் முழுவதும் ஓர் அறிவுக்களஞ்சியமாகவே உள்ளது. எதிர்காலத்தில் கைலை செல்ல விரும்புவோருக்கு ஒரு கைநூலாக இது அமையலாம்.

போன இடங்களிலே, சந்தித்தவர்கள், உதவி செய்தவர்கள், கூடவந்தவர்கள், கூலிக்கு வந்தவர்கள் என ஒருவரையும் விடாது பதிவுசெய்துள்ளார். அவர்களின் சுபாவங்களையும் பதிவுசெய்ய ஆசிரியர் தவறவில்லை. எந்தெந்த இடத்தில் என்னென்ன விடயங்கள் அநுகூலமாக இருந்தன என்பதையும், என்னென்ன விடயங்கள் தடையாக அல்லது சுமையாக இருந்தன என்பதையும் ஆங்காங்கே ஆசிரியர் பாயசத்தில் போட்ட முந்திரிபோலப் போட்டுள்ளார்.

போன இடங்களின் விவரம், சரித்திரப் பின்னணி, வரலாறு, பூகோள விவரம் எனப் பல விடயங்கள் மிகவும் பயனுள்ளவை. புராண, இதிகாசக் கதைகளும், ஆங்காங்கே கறிக்குள் இட்ட கறிவேப்பிலை மணம் கொடுப்பதுபோல, கட்டுரைக்கு மெருகூட்டுகின்றன.

சப்தரிஷிகள் குகையில் கூடவந்த ஓரன்பர் சிவபதமடைந்த விவரத்தை அதற்குரிய பக்குவத்துடன் எழுதியிருப்பதும் பாராட்டப்படவேண்டிய விடயம்.

கட்டுரையைப் படிக்கும்போது நாமும் அந்தந்த இடங்களிலே இருப்பதுபோன்ற ஓர் உணர்வு தொடர்ந்து ஏற்பட்ட வண்ணமே இருந்தது. கட்டுரை நிறைவில், நாம் மீண்டும் போகவேண்டும் என ஆவல் வந்ததாக ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். அதைப் படித்தபோது, அப்படி அவர் போனால், அவருடன் நாமும் போகலாமே என்றோர் நினைவும் நமது மனத்தில் எழுந்ததில் வியப்பில்லை.

ஏனெனில், அவ்வளவு விவரமாக, சுவையாகக் கட்டுரை இருப்பதே காரணம். என் ஆவலை ஏக்கமாக்கிவிட்டது அடுத்த கட்டுரை இணைப்பு. ஆசிரியர் இரண்டாவது தடவையும் போய்வந்துவிட்டார் என்ற செய்தியே அந்த ஏக்கத்துக்குக் காரணம்.

2017இல் மீண்டும் கைலை சென்ற விவரங்களை ஆசிரியர் இணைப்பாக எழுதியுள்ளார். முதலே போன அநுபவம் இருந்ததாலும், சற்குரு அமைப்பினரின் ஏற்பாட்டில் சென்றதாலும் இரண்டாவது தடவை போனமை கொஞ்சம் இலகுவாக அமைந்ததுபோலத் தெரிகிறது. அல்லது சில குறிப்புக்களை எழுதாது விட்டிருக்கலாம். இருந்தாலும் இறை அநுபவம் அதேயளவு இருந்ததாகவே எழுதப்பட்டிருக்கிறது. படித்து இன்புறலாம்.

# அணிந்துரை

எழுத்தாளர் பா. இரத்தினசபாபதி ஐயர்



மகிமை தங்கிய புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரையாகச் சென்று, இறைவனை வழிபட்டு, வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொண்டு, யாத்திரையை நிறைவுசெய்வது இன்று நேற்றுத் தொடங்கிய செயல் அல்ல. ஆயினும் பல்லாயிரம் ஆண்டுகளாக இந்த ஸ்தல யாத்திரை நடந்துகொண்டிருக்கிறது.

யாத்திரைகளில் கடினமானதும், நீண்டகாலங்கள் தேவையான உடல், பொருள், ஊக்கம் தேவையுமான யாத்திரை இந்தக் கைலாச யாத்திரை. ஆலயங்களைத் தரிசித்து, பிரதக்ஷணம் செய்கின்ற விதமாக, வலமாகச் சுற்றிவந்து தரிசனம் செய்வது மரபாகும்.

இவ்வாறான யாத்திரைகளில் கைலை தரிசன யாத்திரை, பத்திரிநாத் யாத்திரை, கேதாரிநாத் யாத்திரை, கங்கோத்திரி யாத்திரை, காசி யாத்திரை போன்றவைகள் உடல் வலிமை உள்ளபோதே மன வலிமையும் இறைவன் அருளும் பெற்று இந்த யாத்திரைகளை மேற்கொள்ளவேண்டும்.

ஆதிசங்கரர் தனது காலத்தில் பாரத கண்டத்தை வடக்கிலிருந்து தெற்காலும் கிழக்கிலிருந்து மேற்காலும் யாத்திரை செய்துள்ளார். சென்ற இடமெல்லாம் பௌத்தமதம்

சமணமதம் ஆகியவற்றுடன் தர்க்க வாதங்கள் செய்து தனது அத்வைத சித்தாந்தத்தை நிறுவினார். அன்று அவர் செய்த யாத்திரை நடைபெற்றிராவிட்டால் புத்த, சமண மதங்கள் பரவிச் செழித்திருக்கும். ஆகவே, ஒவ்வோர் காலத்திலும் யாத்திரைகள் செய்து தாங்கள் அடைந்த, அனுபவித்த அந்த அனுபவங்களை மக்களுக்குச் சொல்லியுள்ளனர். 1937ஆம் ஆண்டு சுவாமி சித்பவானந்தர், 1957ஆம் ஆண்டு சுவாமி சச்சிதானந்த யோகேஸ்வரர் ஆகியோர் கைலை சென்று வந்த அனுபவங்களை நூலாக்கித் தந்துள்ளனர்.

அந்த வகையில் திருநிறைச் செல்வர் டொக்டர் அம்பிகாபதி அவர்கள், தான் பெற்ற அனுபவங்களை எழுத்தில் எமக்குத் தந்துள்ளார். கண்ட காட்சிகளை கமெராமூலம் எடுத்தும் சித்தரித்துமுள்ளார். அற்புதமான படங்கள்; அற்புதமான காட்சிகள்!

தான் பெற்ற அனுபவங்களை மக்களிடம் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற சிந்தனையுடன், சிறு குழந்தையைக் கைபிடித்துக்கொண்டு செல்வதுபோன்று கவனமாக அழைத்துச் செல்கிறார்.

யாத்திரைக்கு முன்னர் செய்யவேண்டிய ஏற்பாடுகள், உடல் தகுதி, நடைத்தகுதி, மலை ஏறும் பயிற்சிகள் ஆகியவை பற்றியும் குறிப்பிட்டுள்ளார்.

கைலாச மலையின் நான்கு முகங்கள், கௌரி குண்டம், மானஸரோவர்ஏரி, டோல்மா கடவை எனும் ஆபத்துமிகுந்த இடத்தைக் கடக்கும்போது ஏற்படும் அனுபவங்கள் அவற்றோடு, யாத்திரையில் கலந்துகொண்ட ஓர் அன்பர் கைலாசம் அடைந்ததையும் குறிப்பிட்டுள்ளார்.

கைலாச யாத்திரை மேற்கொள்ள இருப்பவர்கள் கட்டாயம் தெரிந்துகொள்ளவேண்டிய பல குறிப்புகள் இந்த யாத்திரை நூலில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. எனினும் தகுந்த வழிகாட்டி – குரு – கண்டிப்பாக வேண்டும். சற்குரு, "கைலை பாலா" போன்றோரின் வழிகாட்டல் அவசியம் என்பதும் நன்கு புலனாகிறது.

இந்த யாத்திரை நூலைப் படிப்போர் கட்டாயம் கைலாய இன்பத்தை அடைவார்கள் என்பது எனது நிறைந்த நம்பிக்கை.

# மதிப்புரை



**Siva Pillai**

Retired Lecturer, Educational Studies, Goldsmiths College, University of London

Director, Tamil Academy of Language & Arts

Principal Examiner for Edexcel Tamil Language.

எனது பால்ய நண்பர், வைத்திய கலாநிதி அம்பிகாபதி அவர்களது 'கண்டேன் கைலாசம்' பயபக்தியுள்ள ஒரு சிறந்த ஆன்மிக நூல். தனது அனுபவத்தை, புதிதாகக் கைலாசம் போகும் யாத்திரிகர்களுக்கு ஏற்றதாக எழுதியிருப்பமை வரவேற்கப்பட வேண்டியதாகும். மேலும், அவர் நூலில் கூறிய அறிவுரை, கடந்த 2018 ஜூலை மாதத்தில் நான் (துணைவியாருடன்) கைலை போவதற்கு மிகவும் உதவியாக இருந்தது.

கைலாச யாத்திரை போக விரும்புகிறவர்கள் எவ்வாறான ஆயத்தங்களைச் செய்ய வேண்டும் என்றும், எதிர்நோக்கும் கஷ்டங்கள் பற்றியும் விவரமாகக் குறிப்பிட்டுள்ளார். காலநிலை, ஹிமாலயப்பகுதி மக்களின் வாழ்வும் அங்குள்ள வழிகாட்டிகளினது உதவிகளையும் எடுத்துக் கூறியுள்ளார். பிரயாணம் பக்தியுடன் அமையவேண்டும் என்பதையும் தன் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

கைலாசம் போகவேண்டும் என ஆவல், வசதி இருந்தாலும் போவதற்கும் கொடுப்பனவு வேண்டும். ஆண்டவன் அருள், மனத் தைரியம் வேண்டும்.

புத்தகத்தைப் படிக்கும்போது நம்மையும் அவர் கைலாசத்திற்கு அழைத்துச் சென்றார். தான் பிரயாணம் செய்த பூகோள வழிகளை, காலநிலை, கவனத்தில் எடுக்க வேண்டியன என்பனவற்றை இப்புத்தகத்தில் படிப்படியாக விளக்கமாக அவர் எழுதியிருக்கிறார். கைலாசத்திற்குப் போகும் வழிகளில் உள்ள சித்தர்களின் குகை பற்றியும் எழுதியிருப்பது வரவேற்கத்தக்கது. அப்புத்தகத்தில் தான் கண்டனவற்றைப் படம்பிடித்து, அவற்றிற்கு விளக்கம் அளித்தமை அவரது பயணத்தில் பங்கெடுக்கும் தெய்வீக உணர்வு. இது அவரது ஒரு பிரயாணக் கட்டுரை அல்ல. ஒரு தெய்வீக உணர்வைத் தரும் நூல் ஆகும்.

ஐயா அவர்கள் தனது புத்தகத்தின் மூலம் எம்மை எல்லாம் கைலாசத்திற்கே கூட்டிச்சென்றுள்ளார்கள். 'கண்டேன் கைலாசம்' புத்தகத்தை வாசிக்கும்போது கைலாசத்திற்கு நாமும் அவர்கூட அந்தப் புனித யாத்திரையில் கலந்துகொண்ட உணர்வை நாம் உணரக்கூடியதாக உள்ளது. நேசத்திற்குரிய நண்பனுக்கு இவ்வுரையை எழுதுவதில் நான் பூரிப்பு அடைகிறேன்.

எவ்வளவோ கஷ்டங்களைத் தாண்டி, தான் கண்ட கைலாசத்தை ஏனையவர்கள் அனுபவிக்க வேண்டும் என்ற ஆர்வத்தோடு இப்புத்தகத்தை அவர் வெளியிடுவது மிக மகிழ்ச்சிக்குரியது.

கைலாசம் பற்றிய முக்கியத்துவத்தை எமக்குத் தெரியப்படுத்தியமைக்கு நாம் நன்றி உடையவர்களாக இருக்கிறோம். இதைப் படிப்பதன் மூலம், இவர் ஒரு சிறந்த எழுத்தாளன் என்பதையும் 'கண்டேன் கைலாசம்' வழியாக நாம் காணக்கூடியதாக உள்ளது.

# இந்நூல் பற்றி...

அதிமிகு தமிழார்வம் மிக்க டொக்டர் "லண்டன் அம்பி" இலங்கையில் உதித்து, இங்கிலாந்தில் வதிபவர். இயற்கை வைத்தியத்தில் மெத்த இருக்கக் காணும் இளைப்பாறிய குடும்ப வைத்தியர். சனாதன தர்மத்தில் மிக்க ஆர்வங்கொண்ட இவர், அதில் உள்ள நுட்பங்களை அறிவதில் ஆர்வங்கொண்டு, வியற்நாம், இந்தோனேசியா, கம்போடியா உட்பட பல நாடுகளுக்கும் சுற்றுப் பிரயாணங்கள் மேற்கொண்டார். அவரது அனுபவங்களில் தமது கைலை தரிசனத்தின் அனுபவங்களை இந்நூல்மூலம் பகிர முற்பட்டுள்ளார். கைலை தரிசனம் பற்றி முன்னரே பல நூல்கள் வெளிவந்திருப்பினும், ஒவ்வொரு அனுபவமும் சுற்றாடல், காலம், தொழில்நுட்பங்கள் இத்தியாதி வேறுபாடுகளினால் பல்வேறு நூதனங்களைக் கொண்டிருக்கும்.

ஏற்கெனவே, ஈழத்து மாதாந்த கலை, இலக்கிய வெளியீடான "ஞானம்" இதழில் சுருக்கமாக, பதினெட்டுப் பகுதிகளாக வெளிவந்து, வாசகர் பலரின் பாராட்டுதல்களைப் பெற்றுள்ளது. இவ்விதழில் வெளிவந்ததை வாசித்தே உந்தப்பட்டு கைலை யாத்திரை சென்றுவந்தோர் பலர் உளர். இந்நூல் ஒரு முழுமையான படைப்பு.

ஸ்ரீ சித்திவிநாயகர் துணை

# முகவுரை

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்

இப்பூவுலகில் பிறந்த ஒவ்வொருவரும் வாழ்வில் என்றாவது ஒரு நாளாயினும் மலையைக் கண்டு மயங்கி வியக்காதோர் இல்லை. அதிலும் ஆன்மீகச் சிந்தனைகளோடு கலந்த யாத்திரையாயின் சொல்லவும் வேண்டுமோ?

பல்லாயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்னரே போற்றிப் புகழப்பெற்றது திருக்கைலாச தரிசனம். மகாபாரத நாயகர் முதல் நாயன்மார் பலர் மற்றும் ஆன்மீக வழிகாட்டிகள் ஈறாகப் பலரும் அதிமிகு பக்தி சிரத்தையுடன் தரிசித்த ஸ்தலமல்லவா திருக்கைலாசம்!

அத்தகையதொரு வியப்புமிகு ஈசனின் பாதாரவிந்தங்களை நோக்கிப் பயணிக்க பூவுலகில் யான் பெற்ற பாக்கியம் சொல்லிற்கடங்காது.

அனுபவங்கள் பலநிலையோர்க்கும் பலவகையானோர்க்கும் பல்வேறு விதமாக வேறுபடும். பாதைகள், சுவாத்தியம், தங்குமிடம், மற்றும் ஏனைய வசதிகள் காலங்களுக்கேற்ப பலவகைப்படும். அவற்றிற்கேற்ப அனுபவங்கள் வேறுபாடும்.

அருட்பெரும் சுவாமி சித்பவானந்தர், ஈழத்து யோகிராஜ் சுவாமி சச்சிதானந்தர் ஆகியோரும் தத்தமது அனுபவங்களை நூல் வடிவங்களில் மக்களுக்கு அருளினர். இவற்றைவிட, வேறு பலரும் அவ்வப்போது கைலை தரிசனம் பற்றி எழுதியுள்ளனர். அவர்களது அனுபவங்கள் அனைத்துமே பலவகையிலும் சிறப்பு மிக்கவை. நிலைமைகளும் அனுபவங்களும் வெவ்வேறு காலங்களில் பலவகைப்படும்.

எவ்வாறு அருளாளரும் மற்றும் பலரும் அவற்றை எதிர்நோக்கி கைலைத் தரிசனம் சென்றனர் என்பதெல்லாம் அறிய மயிர்க்கூச்செறியும். இன்றோ நிலைமைகள் வேறு. கற்றுக்கொள்ளவேண்டியவையும் வேறு.

இவற்றை எல்லாம் கருத்திற்கொண்டுதான் அடியேனது கைலாச யாத்திரை அனுபவங்களை எழுத்து வடிவில் அமைத்ததனால், அதை இலங்கையிலிருந்து வெளியாகும் மாதாந்த இதழான "ஞானம்" இதழில் அண்மையில் தகுந்தவாறு பதினெட்டுத் திங்கள் தொடராக வெளியிடப்பட்டது.

தொடர்ந்து சஞ்சிகையில் வெளிவந்த பதினெட்டு திருத்தப்பட்ட அத்தியாயங்களை வாசித்துப் பயன்பெற்ற வாசக நண்பர்கள் சிலரின் ஆலோசனைக்கிணங்க இந்நூல் முழுமையாகப் பிரசுரிக்கப்படுகிறது.

கூடவே, பிரதியை வாசித்த நண்பர்களின் ஆலோசனை யின்பேரில் பயனுறு இணைப்புகள் சிலவற்றையும் சேர்த்துள்ளேன்.

இந்நூலைத் தொகுப்பாக்கம் செய்த நண்பர், பதினெட்டு அத்தியாயங்களை மாபெரும் சக்திகளுக்கு ஒப்பிட்டார்... பகவத் கீதை அத்தியாயங்கள் 18, சபரி மலையில் படிகள் 18, சித்தர்கள் 18 என அடுக்கி, அடியேனை ஆச்சரியத்துக்குள்ளாக்கினார். இந்தப் பதினெட்டும் எனது உள்நோக்கம் எதுவுமின்றியே பதிவு பெற்றது இறை அருளன்றி வேறேதும் உண்டோ?

இதன்மூலம் வாசக அன்பர்கள் அவரவர் வாழ்வு நெறிக்கேற்ப நன்கு பயனுறுவர் என்ற நம்பிக்கையுண்டு.

... ஓம் நமசிவாய ....

# அறிமுகம்

மாதர்பிறை கண்ணியானை மலையான் மகளொடும் பாடி
போதொடு நீர்சுமந்தேத்தி, புகுவார் அவர்பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்றபோது
காதல் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன்
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்

சோழவள நாட்டை வலம்வந்த பின்னர், இறைவன்பால் பக்திகொண்டு திருக்கைலாயத்தைத் தேடிச்சென்றார் அப்பர் ஸ்வாமிகள். நடந்தேசென்ற அவரது பாதங்கள் முழுதும் புண்ணாகிவிட்டது, பக்தி மேலீட்டினால், அவர் உடலால் புரண்டுசெல்லலானார். அப்பரின் பக்தியைச் சோதிக்க இறைவன் முனிவர்போலக் காட்சியளித்தார். கைலையை அடையமுடியாது எனக்கூறவும் அப்பர் பக்தி மீட்டினால், தொடரமுயற்சித்தபோது, அவரது பக்தியை மெச்சி, இப் பொய்கையில் (ஆற்றில்) மூழ்கி திருவையாற்றிலேயே எம்மைக் காண்க எனக் கூறி காட்சிகொடுத்தருளினார். அங்கே, அவர் தான் கண்ட காட்சியாக இந்த மனமுருகும் – "மாதர்பிறைக் கண்ணியானை" எனத் தொடங்கும் பதிகத்தைப் பாடினார். இந்தப் பிறவியில், கைலாச தரிசனம் கிடைத்தல் மாபெரும் பாக்கியம்.

**அறிமுகம்:** எல்லாப் பிறவிகளிலும் மனிதப் பிறவியே மகத்தானது என்பது எமது பாரம்பரிய நம்பிக்கை. அதிலும் இந்த மானுடப் பிறவியில் வியப்புறும் செயற்கரிய செய்பவை வாழ்வின் சாதனைகளில் சான்றானது என்பர். கனவிலும் காணக்கிடைக்காத அற்புதங்களில் பெரும் பாக்கியமானது கைலாச தரிசனம்.

அப்பரின் ஆதங்கத்தை மேற்கூறிய தேவாரத்தில் கண்டோம். கூண்டோடு (= ஊனோடு = இந்த உடலோடு)

கைலாசத்தை தரிசிக்க அவன் அருள் வேண்டும் அல்லவா? அருட்திரு சுவாமி சித்பவானந்தர் (1937), அருட்திரு யோகி சச்சிதானந்த யோகீஸ்வரர் (1959) ஆகியோரது அனுபவங்களை வாசித்த பாக்கியம் கிடைத்தது. அவர்களது அனுபவங்களில் அறிந்தவை மிகவும் உருக்கமானவையே.

அக்காலத்தில் தீர்த்தயாத்திரை செய்வது மிகக் கடினம். பிரயாண வசதிகள் அரிது. வழியில் விபத்துகள் அனர்த்தம். அப்படியும் முயற்சித்துச் சென்று திரும்பிவந்தோரும் அரிது. ஆதலால்தானோ என்னவோ கைலாசம் போவது பரகதியோடு ஒப்பிடப்பட்டது. இந்த யாத்திரையை மேற்கொண்டு மடிவதையே ஒரு புண்ணியமெனக் கருதுவோரும் இருந்தனர்.

இன்றோ பாதைகள் செப்பனிடப்பட்டு, திருக்கைலாச யாத்திரை மிக்க வசதியாகவுள்ளது. அறுபது ஆண்டுகட்கு முன்னர் மூன்று மாதங்களுக்கு மேலாக எடுத்த யாத்திரை, இன்று இரு வாரங்களிலேயே இயலுமானதாயுள்ளது. தீர்த்தயாத்திரைகளின் சிகரமாக விளங்கும் கைலாச–மானஸரோவர் யாத்திரையை மேற்கொள்ளும் அரும் வாய்ப்பு நன்கு பெறப்பெற்று – அதை மேற்கொண்டு பூர்த்தியாக்கிய – எனது அனுபவங்கள், அவை தொடர்பாக அறிந்தவை – ஆகியவற்றை இயன்றவரை விளக்கபூர்வமாக எம்மவருடன் பகிர்ந்துகொள்வதில் மட்டற்ற மகிழ்ச்சியும், இவ்வாழ்வில் கிடைத்த பெரும் பாக்கியமும் எனக் கருதுகிறேன். நம்முடைய பல ஜன்மங்களின் புண்ணியங்களின் பலனாகவும், நமது பித்ருக்கள் மகிழ்ந்து செய்யும் ஆசியினாலுமே கடைசி ஜன்மத்தில் மட்டுமே கைலாச தரிசன பிராப்தி கிடைக்கிறது என்பது ஐதீகம். சூரியனைக் கண்டதும் பனி விலகுவதுபோல கைலாசத்தைத் தரிசித்தவுடன் ஒருவருடைய பாவங்களெல்லாம் விலகுகின்றன. எவன் ஒருவன் கைலாசத்தைக் கண்டு தரிசனம் செய்கின்றானோ அவனுடைய இருபத்தியொரு தலைமுறைகள் முக்தி அடைகின்றன.

இறை நம்பிகையற்றோரும் கைலாசத்தைப் பார்த்து அதன் அற்புதத்தை வியப்புடன் இயம்புவர். அவ்வாறான அனுபவம் வேறெங்கிலும் கிடைத்தல் அரிது.

**ஆ**ரம்பம்: கைலாசத்தின் பெருமையை அடியேனுக்கு உருக உணர வைத்தவர் சீரிய பண்புடை ஈஷா யோகா மைய ஸ்தாபகர் சத்குரு (ஜக்கி வாசுதேவ்) அவர்களே.



அதற்குரிய உணர்வையும் ஊக்கத்தையும் அளித்து ஆரம்பிக்கவைத்த பெருமை எனது பால்ய நண்பர் பேராசிரியர் இராமஸ்வாமி ஐயர் சுவாமிநாதன் அவர்களையே சாரும்.

இந்த அரிய தரிசனத்துக்கு இணங்கி நல்லாதரவுடன் உரிய உதவிகளுடன் ஊக்குவித்து இணங்கிய இல்லாளையும், இனிதே ஈன்றெடுத்த குழந்தைகளையும் நினைவுகூரி வானளாவிய நன்றிகளுடன் நிலைத்துள்ள நினைவுகளை பரமனின் கருணையுடன் கருவெடுக்க விழைகிறேன்.

**இறையருள் கொண்ட கைலாசத்தின் பெருமை:** மலைகளில் மயங்காத மானிடரே இல்லை. மலையேறி மதிப்புற்ற மானிடர் பலர். கயிலைத் தரிசனம் மதிப்புறவல்ல, ஆனால் அதற்கு **அர்ப்பணித்தலே...** அதுவே அடியேனது அவா. இது அடியேனது இப்பிறப்பின் அருந்தவப்பயன். கைலாச தரிசனம் சரித்திரகாலத்துக்கு முன்பும் பின்பும் பெருமயுடைத்தது. இந்து, பௌத்தம் முதலான பல சமயத்தவர் சேவிக்கும் பெருமையுடைத்தது கயிலை. ஆதியோகி சிவன் இகபர சுகம் துறந்த கௌதமர் முதலானோரின் மூச்சிலெழுந்த மெச்சத்தகு மேன்மைகளைக் கொண்டது கயிலை.

யாத்திரைகளின் நோக்கமே அவருக்கு அடியாரது இறைமையை ஓரளவாதல் உணர வைப்பதே... தனது இயல்புகளின் தன்மைகளை உணர்ந்து உலக மகா சக்திக்கு அர்ப்பணிப்பதே. இடையூறுகள் பல தோன்றுவது இவ்வாறான யாத்திரைகளின் தனித்தன்மை. அவற்றைத் தாண்டி,

அவரவர்களது புலன்களுக்கு அப்பால் இருப்பனவற்றை உணர்ந்து ஞானம் பெறுதலே பெரும் பேறு. அவ்வாறு எண்ணற்ற அனுபவங்கள்மிகு தியாகங்களின் மூலம் ஞானம் (அனுபூதி) பெற்றோரே ரிஷிகள், நாயன்மார் முனிவர் ஆகியோர்.

ஆதியோகி சிவா, அகஸ்திய முனி முதலான சப்தரிஷிகளுக்கு யோக போதனை வழங்கியது கைலை யிலேயே. சரித்திர காலத்துக்கப்பாற்பட்ட பல்லாயிரம் வருடங்களுக்கு முன் அனுபூதி பெற்று, முக்தியெய்தியோர் தமது அரும்பெரும் சக்திகளை பொதியவைத்ததும் கைலை யிலேயே. எனவேதான், கைலாசம் ஒரு மாபெரும் ஆன்மிகப் பொக்கிஷம் எனக் கருதப்படுகிறது.

வானிலும் மேலான வனப்புடன் வீற்றிருப்பது இறைவனின் உறைவிடம் கைலாசம். சீன நாட்டின் பகுதியான திபெத்தின் தென் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது இமயமலை. இம்மலையின் **மூன்று பிரிவுகளாவன:** சிறிய இமயம், பெரிய இமயம், எல்லை கடந்த இமயம் (Lesser Himalayas, Greater Himalayas and Trans Himalayas).

பல்வேறு புராணங்களிலும் குறிப்பிடப்பட்ட – வேதகாலத்துக்கு முன்னரே அறியப்பட்ட – **திருக்கைலாசம்** எல்லைகடந்த இமயத்திலுள்ளது.

பெரிய இமயம்: என்றும் பனிக்கட்டியால் ஆக்கப்பட்டிருப்பது. (வடபுற இந்தியாவில்). இதன் தென் சாரலில் பத்திரிநாத், கங்கோத்ரி, யமுனோத்ரி, திருக்கேதாரம், பசுபதிநாத் ஆகிய திருத்தலங்களுள.

**ஈசனின் இறைவிடம்:** "கைலாஷ்" என்பது சமஸ்கிருத மொழி. கைலாஸ என்பதன் அர்த்தம் ஸ்படிகம். திபெத்திய மொழியில் "பனிகளாலான உன்னத ஆபரணம்" என்பதாம். கவர்ச்சிகரமான கைலையில் ஏறுவதற்கு முயற்சித்தார் யாருமிலர். ஏறமுடியாத மலை என்பது மலையேறும் விற்பன்னர்களின் முடிபு. இதில் ஆச்சரியப்படுத்தற்கு ஏதுமில்லை.

கைலயங்கிரி உலகின் அச்சாணி என்பது என்னவோ உண்மை. **கைலையின் உயரம்:** *6,714 மீற்றர்* என்பது கணிப்பு.




***மானஸரோவர்:*** *கைலையிலிருந்து 20 கிமீ தொலைவில் கடல் மட்டத்துக்கு 15,015 அடி உயரத்தில் உள்ளது. கல்ப விருக்ஷத்தையும் தன்னுள்ளே கொண்டுள்ள இப்புனித ஆன்மீகம் மிக்க வாவி பல நோய் நீக்கும் தன்மைகளையும் உடைத்து.*

*மானஸரோவரில் நீராடுவதைப் பற்றி இராமாயணத்திலே இவ்வாறு கூறப்பட்டுள்ளது: "மானஸரோவரின் மண்ணானது எவருடைய உடலில் படுகின்றதோ அல்லது யார் மானஸரோவரில் நீராடுகிறார்களோ அவர்கள் பிரம்ம லோகத்தை அடைகின்றார். யார் மானஸரோவரின் தீர்த்தத்தைப் பருகுகின்றனரோ அவர்கள் சிவசாயுஜ் யத்தை அடைவதுடன், நூறுஜென்ம பாவங்களிலிருந்து விடுபடுகின்றனர். அதன் நீர்த்துளிகள் முத்துப் போன்றவை." இவ்வளவு சிறப்புவாய்ந்த, இத்தகைய புனிதங்களுடைய யாத்திரையை யாத்திரைகளுக்குள் எல்லாம் தலைசிறந்தது என்று சொன்னால் அது மிகையாகாது.*

***உரிய தினசரி தேவைகள் – வசதிகள்:*** உணவு தேவையானபடி கொண்டுசெல்ல வேண்டும். அடிப்படை வசதிகள் அருமையிலும் அருமை. யாத்திரை ஒழுங்குசெய்வோர் சமையல் வசதிகளையும் எடுத்துச்செல்வர். இருப்பினும், அவ்வப்போது தேவைப்படக்கூடிய சிற்றுணவுப் பண்டங்களைக் கூடவே கொண்டுசெல்லுதல் அறிவுறுத்தப்பட்டது.

**ஊ**ருக்கு ஊர் உணவுப் பழக்கவழக்கங்கள் மாறுதல் இயல்பு. எனவே, எமது யாத்திரை இலண்டனிலிருந்து ஆரம்பமாகி, அபுதாபி மார்க்கமாக நேபாளம் சென்று, அங்கிருந்து சீனத்தின் எல்லையைக் கடந்து திபெத்துக்குள் செல்லல் வேண்டும்.

இதனை எதிர்பார்த்து அவரவர்க்குத் தேவையானபடி கொண்டு செல்லக்கூடியனவற்றையே எடுத்துச் செல்லவேண்டும்.

**எ**ழில்மிகு கைலையின் சுவாத்தியம் பல்வேறுபடும். குளிர் காலத்தில் அதிமிகு குளிராயும் வேனிற்காலத்தில் சகிக்கவியலா வியர்வை சொட்டவைக்கக்கூடியதுமாம். எனவே, யாத்திரீகர் உகந்தவாறு யாத்திரையை ஒழுங்குசெய்தல் அவசியமாகிறது. அந்நாட்களில் முற்றாகவே கால்நடையாக யாத்திரை செய்தோர் நாயன்மார். ஆனால், இன்றோ மலையின் பரிக்கிரமா (பாத யாத்திரை) ஆரம்பிக்கும் அடிவாரம் வரை வாகனத்திலேயே செல்லக்கூடிய வசதிகளுண்டு.

திபெத் நாட்டினூடாகக் கைலை யாத்திரை உன்னத காட்சிகளையும் பல சிறந்த அனுபவங்களையும் வழங்கும். ஏற்றவாறு உடைகளைக் கொண்டு செல்லுதல் வேண்டற்பாலது.

***ஏற்ற யாத்திரைக்காலம்:*** ஆடி, ஆவணி, புரட்டாதி மாதங்கள், சுவாத்தியத்தைப் பொறுத்து, யாத்திரைக்கு மிகவும் பொருத்தமானது எனக் கருதப்படுகிறது. ஏனைய மாதங்களில் சீதோஷ்ண நிலை யாத்திரைக்கு உகந்ததல்ல.

**ஐம்புலங்களையும்** எமதாட்சிக்குட்படுத்தி, யாத்திரையின்போது தோன்றும் இன்னல்களைக் களைந்து கரையேறுதல் நல்லதொரு அனுபவத்தை அளிக்கும். பல்வகைப்பட்ட சூழல்களை எதிர்பார்ப்பதால் இதனைக் குறிப்பாகக் கருத்திற்

கொள்வது அவசியம். யாத்திரீகருக்கு மன உறுதியும், உரிய மனப்பாங்கும் இன்றியமையாதன.

**ஒருங்கிணைந்த** மனமே இச் சாதனையை நிறைவேற்ற வல்லது. இதனைக் கருத்திற்கொண்டு யாத்திரைசெய்ய எண்ணிய கணந்தொட்டு, எல்லா ஒழுங்குகளையும் செய்தோம். தினசரி பிரார்த்தனை மிகவும் வேண்டற்பாலது.

**ஓ**ங்கி எழுந்து வண்ணமுடன் காட்சிதரும் கைலையின் வனப்பையும் – அந்த யாத்திரை தரும் அனுபவங்களையும் – அருள்மிகு காட்சியைக் காணத் தொடர்ந்து அவாவை நிறைவேற்ற இன்றைய சூழ்நிலைக்கேற்ப மேற்கொண்ட முயற்சிகள் இத்தியாதி, வளரும் பத்திகளில் பார்க்கலாம்.

**ஔ**வை தந்த இலகு தமிழில் இயன்றவரை இலகுவாகப் புரியும்படி – அடியேன் அடைந்த அனுபவங்களை அன்பர்களுக்குச் சுவையுடன் உற்சாகமூட்டும்வண்ணம் – எம் குலதெய்வமாம் ஈழத்து யாழ். கந்தர்மடம் ஸ்ரீ சித்தி விநாயகர், வினைதீர்க்கும் வேழமுகத்தான் திருப்பாதங்களை வணங்கியே அடியேனது நினைவுகளில் பதிந்தவற்றைப் (பயணக்கதையினை) பணிவுடன் எழுத்துவடிவு கொடுக்க அடியேன் அடி எடுத்து வைக்கிறேன்.

## Kailash: A Journey of Lifetime

## INTRODUCTION

The year 2013 was a milestone in my life and the thoughts of Kailash pilgrimage sprouted when I was in Chennai (India). It was Sadhguru Jaggi Vasudev – a mystique of this century, who embedded the seed that inspired me to undertake this spiritual journey to Kailash.

Thanks to my childhood friend Professor Ramaswamy Iyer Swaminathan (former Professor of Chemical Pathology at Guy's and St Thomas' Hospital, London) made this memorable feat possible in this lifetime!

History reveals that, although Great Saints like Thirunavukkarasar, who made attempts to reach for this Spiritual Vision, could not make the extremely difficult journey (during that period) or never returned since leaving for this Holy pilgrimage.

Even in the 19th century, Great Saints like Swami Chithbavananthar (1937) and Swami Sachchithanantha Yogeswar (1959) had undergone utmost difficulties in trekking, to have a Dharshan (or spiritual vision) of Holy Kailash. Modern facilities of transport and other facilities have made this lifetime pilgrimage, a possibility.

It is with great gratitude to my dear wife and daughters I record their encouragement and assistance at every step towards undertaking such a task in my lifetime.

It must be remembered that it is the DEVOTION and not just trekking that is of utmost important in this journey. As a result of this spiritual journey, one feels divinity within

the self and experiences the innate nature of the self in union with the rest of the cosmos. This does take a very elaborate transformation within the self.

It is in Kailash that Adhiyogi – Shiva – transmitted the knowledge of YOGA to the Sapta Rishis (Great Seven Saints) including Agastya Muni who later travelled from Kailash from North to South of India teaching Yoga to the inhabitants. Kailash is in the South & West of Tibet. Mount Himalayas is in three major parts – Lesser Himalayas, Greater Himalayas and Trans Himalayas. Kailash is in the latter. Pasupathinath, Bhadrinath, Kedarnath, Yamunothri and Gangothri are all in the southern part of Greater Himalayas that is eternally snow ridden.

Kailash means "Jewel of Ice" in Tibetan language. Climbing Kailash is an impossible task by any human, as has been proven by many experts who attempted to do so.

Weather conditions vary and do so within a short span of time and hence caution needs to be exercised; one has to be prepared for such changes without warnings. The most suitable period for Kailash Dharshan would be late July, August and early September and it is needless to mention the proper mind set is all vital for such a challenging journey.

# அடிமானம்

## ஆரம்ப கட்டம், திட்டமிடல், மலை ஏற்றப் பயிற்சி, தேவையான உபகரணங்கள்

இப்பகுதியில் கைலை யாத்திரையின் ஆரம்ப கட்டத்தினையும் தேவையான ஒழுங்குகளையும் எவ்வாறு நோக்கினோம் – செயற்படுத்தினோம் – என்பனவற்றைச் சற்றே கவனிப்போம்.

2013ஆம் ஆண்டு தை மாத முற்பகுதியில், நான் சென்னையில் இருந்தபோது, எனது நண்பர் சுவாமி (பேராசிரியர் ராம் சுவாமிநாதன்), கைலாசம் போவதற்கு தமக்கு ஒரு மின்னஞ்சல் வந்துள்ளதாயும், என்னை இதுபற்றி ஆலோசித்து அறியத்தருமாறும் எனக்கு மின்னஞ்சல் அனுப்பியிருந்தார்.

2012 பிப்ரவரி மாதம் இதே நண்பருடன் ஆபிரிக்காவிலுள்ள கிலிமஞ்சாறோ மலை ஏறிய அனுபவம் இந்த தொடர்புக்கு வித்தாக அமைந்தது. *(கிலிமஞ்சாறோ ஆபிரிக்காக் கண்டத்திலுள்ள, உலகில் மனிதரால் ஏறக்கூடிய அதி உயரமான மலையாகும்.)*

என்னே ஆச்சரியம்... அதற்குச் சில நாட்களுக்கு முன்னர்தான் கைலாசம்பற்றி ஊக்குவிக்கும் சம்பாஷனை ஒன்று ஈஷா யோகா* "யூ டியூப்" (youtube) காணொளி தளத்தில் பார்த்தேன். அதில் சற்குரு, கைலாசத்தின் மகிமையைக்

---

* ஈஷா யோக மையம் பேரருளாளர் சற்குரு ஜக்கி வாசுதேவ் அவர்களால் ஜாதி சமய சார்பற்ற ஆன்மீக மையமாக ஸ்தாபிக்கப்பட்டு, தமிழகத்தில் கோயம்புத்தூர் நகரிலிருந்து முப்பது கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. ஈஷாவின் ஆன்மிக முன்னேற்றச் சேவை ஐக்கிய நாடுகள் நிறுவனம் முதல் உலகெங்கணும் விரைவாக ஏற்றுக்கொள்ளப்பட்டுவருவது கண்கூடு.

சற்குருவால் பிரதிஷ்டைசெய்யப்பட்டு இங்கு ஸ்தாபிக்கப்பட்ட தியானலிங்கம் அதிமிகு சக்திவாய்ந்ததாக விளங்குகிறது. ஈஷா நிலையம் தென் கயிலை என அழைக்கப்படும் வெள்ளையங்கிரி மலையடிவாரத்தில் நிறுவப்பட்டுள்ளது.

கூறி, மனித ஜன்மத்தில் ஊனுடலின் இயக்கங்கள் ஒழுங்காக இருக்கும்போது, ஒருதடவையாதல் கைலையைத் தரிசித்தல் மேன்மையுடைத்து என விளக்கினார். ஈஷா யோகாமையத்தின் நற்செயற்பாடுகளும் பேரருளாளர் சற்குருவின் மீதுள்ள நன்நம்பிக்கையும் பெருமதிப்புமே எனது கைலைத் தரிசனத்துக்கு வித்திட்டது. இந்த இறைவடிவாக உதித்த சந்தர்ப்பத் தொடர்பு என்றென்றும் என் மனதில் படிந்திருக்கும்.

**யாத்திரைத் திட்டம்:**

கைலை யாத்திரையை ஆரம்பிக்க முதல், முக்கியமானதொரு சந்தேகத்தைத் தீர்க்க வேண்டியிருந்தது.

எனது அகவை எழுபதைக் கடந்துவிட்டதனால் சீன நாட்டு உட்புகும் அனுமதி கிடைக்குமா என்பதே அச்சந்தேகம். இதை முதல் வருடம் கைலாச யாத்திரை போய்வந்த ஒரு அன்பர் கிளப்பிவிட்டிருந்தார். எனது நண்பர் சுவாமிமூலம் இதனை – அந்தப் பெரும் சந்தேகத்தை – தகர்த்தெறிந்தார் எமது யாத்திரை ஒழுங்கினர் **கைலை பாலசுப்பிரமணியம் (கைலை பாலா,** மலேசியா).

எமது இன்னுமொரு நண்பர் டாக்டர் சாரதா நற்குனராஜாவின் நன்முயற்சியால், இணையத்தளத்தின் மூலம் கிடைக்கப்பெற்ற நற்சான்றுகளின்படியே மலேசியா, கோலாலம்பூரில் வதியும் (கைலாச யாத்திரை ஒழுங்கினர்) கைலை பாலாவின் தொடர்பு ஏற்பட்டது.

மின்னஞ்சல் தொடர்புமூலம், கைலை பாலாவின் யாத்திரைக்குழு படிப்படியாக வளர்ந்துவந்ததை அறிந்தோம்.

நாற்பது சிங்கப்பூர் & மலேசியரும், பதினான்கு லண்டன் யாத்திரீகர்களுமாக 54 யாத்திரீகர் இந்தக் குழுவுடன் சேர விருப்பம் தெரிவித்திருந்தனர். இடப்பட்ட நிபந்தனை யின்படி முற்பணமும் செலுத்தி இந்தப் பதினைந்து நாட்கள் பிரயாணத்தை நிச்சயப்படுத்திக் கொண்டோம்.

பிரயாண ஒழுங்கினருக்குச் செல்லவேண்டிய செலவுகள் (மொத்தமாக ஏறத்தாழ 2,600 அமெரிக்க டொலர்) போக ஏனைய ஒழுங்குகளைத் தொடர ஆரம்பித்தோம். உரியவாறு படிவம் நிரப்பி, கடவுச்சீட்டுப் பிரதியொன்றும் முற்பணமும் கைலை பாலாவுக்கு அனுப்பி எமது கடமைகளை ஆரம்பித்தோம்.

லண்டனிலிருந்து காத்மண்டுவிற்கு (திரிபுவனம் விமான நிலையத்துக்கு) உரிய செலவு நாங்களே பொறுப்பு. நண்பர் சுவாமி "எட்டிஹாட்" விமானம் மூலம் (மின்னஞ்சற் தொடர்பில்) பயணிக்க ஏற்பாடு செய்தார். தொடர்ந்து தேவையான உடுப்பு, மருந்து வகைகள் சேகரித்தல் மற்றும் மலையேற்றப் பயிற்சி உடனேயே ஆரம்பித்தது.

**மலையேற்றப் பயிற்சி:**

கைலாச யாத்திரைக்கு மலையேற்றப் பயிற்சி மிகவும் முக்கியம். அதுவும் பிராணவாயு (கைலையாத்திரையின்போது எதிர்கொள்ளக்கூடிய) செறிவுகுறைந்தபட்சத்தில் நுரையீரல்களை வலுப்படுத்தி நன்கு செயற்படுத்த உகந்த பயிற்சிகள் அத்தியாவசியமானவை.

இங்கிலாந்தின் பல பகுதிகளில் இவ்வாறான பயிற்சிகளைப் பெற வாய்ப்புண்டு.

வடக்கு வேல்ஸிலுள்ள (North Wales) ஸ்நோடோனியா (Snowdonia) மலைப்பகுதி (3,560 அடி உயரம்) நல்லதொரு பயிற்சித்தளமாக எமக்கு அமைந்தது. அநேகமான பயிற்சிக்கு உகந்த தளங்களை மின் இணையத்தளம்மூலம் கிடைக்கப் பெற்றோம். பல்வேறு மலைப்பயிற்சிக்குரிய இடங்களை இணையத்தளம்மூலம், நண்பர் சுவாமி அறுவர் கொண்ட எமது சிறு குழுவிற்குக் கிடைக்கச்செய்தார்.

நெடுந்தூர நடைப் பயிற்சி செய்ய "நோர்டிக்" (Nordic) போன்ற குழுக்களைச் சேர்ந்த விற்பன்னர்களையும் நாடலாம்.

மேலும், யோகாசனம், பிராணாயாமப் பயிற்சிகளையும் தொடர்ந்தேன். இவை எமது கிளிமஞ்சாரோ (Kilimanjaro) மலை ஏற்றத்திற்கு மிகவும் அனுகூலமாயிருந்தது.

**உபகரணங்கள்:**

சுவாத்தியங்களுக்கு ஏற்ற உடைகளை உகந்தவாறு அணியும் வழக்கமும் இந்த ஆரம்பப் பயிற்சிகளின்போது பெருமளவு பழக்கப்பட்டுவிடும். கைலை யாத்திரையின்போது, பொதுவாக எந்த உயரமான மலை ஏறும்போதும் ஏற்படுவதுபோல, அதிமிகு குளிரும் சூடும் மாறிமாறித் தோன்றுதல் எதிர்பார்க்க வேண்டியவை.

மலையேற்றக் கோல்களும் (trekking poles), கை உறைகள் (gloves), மலையேற்றக் காலணி (trekking boots),

சுமை கோணிப்பை (rucksack) முதலியவை அத்தியாவசிய உபகரணங்களாகும்.

இந்த தோளில் சுமக்கும் கோணிப்பையானது சிற்றுணவு வகை, படப்பிடிப்பு உபகரணம், பணம், கடவுச்சீட்டு இத்தியாதி கொள்ளக்கூடியது. கோணியில் அடங்கக்கூடிய நீர்க் குப்பியானது, முதுகில் சுமக்கும் கோணியில் சொகுசாக வைக்ககூடிய – மலை ஏறும்போது கொண்டுசெல்லக்கூடிய ஒரு வசதியான உபகரணம்.

மழை/குளிர் தாங்கக்கூடிய தொப்பி, நடப்பதற்கு உகந்த குளிர் தாங்கக்கூடிய காலுறை இவையெல்லாம் மிக இன்றியமையாதன. பல உபகரணங்கள் பயிற்சிக்காலத்தில் தேவையாயிருந்தபடியால், அவற்றையெல்லாம் முன்னராகவே வாங்கிவைத்துக்கொண்டோம். மேலும் தேவையானவற்றைத் தொடரும் பகுதிகளில் காணலாம்.

**மருந்து வகைகள்:**

சூரிய வெப்பத்தினால் சருமம் பாதிக்கப்படக்கூடுமாகையால், ஏற்றவாறு உரிய களிம்பு எடுத்துச்செல்லவும் ஏற்பாடாகி யிருந்தது. மற்றும் எதிர்பாராதவிதமாக ஏற்படக்கூடிய வயிற்றுப்பிரச்சினை, வாந்தி, தலைவலி இன்னோரன்ன உபாதைகளுக்கேற்ற மாத்திரைகளையும் ஆயத்தமாக வைத்துக்கொண்டோம்.

**குடிநீரைச் சுத்திகரிக்கும் மாத்திரைகள்** கைவசம் இருப்பது நல்லது.

மலை உயரத்தில் ஏற ஏற பிராணவாயுவின் செறிமை குறையுமாதலால் வாந்தி, தலைச்சுற்று (mountain sickness) போன்ற உபாதைகள் ஏற்படல் சாத்தியம். இதனைத் தடுக்கும் பொருட்டு சில வழிமுறைகளுண்டு.

யாத்திரையின்போது அடிக்கடி நீர் அருந்துதல் அத்தியாவசியமானது. மேற்குறிப்பிட்ட நெகிழ் நீர்க்குப்பி (Plastic bottle) மிக்க உதவியாக இருந்தது.

**உணவுப் பதார்த்தங்கள்:**

பேரீந்து, திராட்ஷை போன்ற காய்ந்து உலர்ந்த பழவகைகள், பாதாம் பருப்பு, முந்திரிப்பருப்பு போன்றவை, ஊறுகாய், இனிப்புப் பண்டங்கள் இத்தியாதியும் கொண்டு செல்ல அறிவுறுத்தப்பட்டன.

அத்தியாவசிய தேவையான முக + உடம்பு சுத்திகரிக்க உதவியான (ஈரமாக்கப்பட்ட= wet ones) மெல்லிளைத் தாள்கள் (tissues) இன்னோரன்ன உப பொருட்களையும் சேமித்துக்கொண்டோம்.

**உடுப்புகள்:**

சீதோஷ்ணத்திற்கேற்ப உள்ளாடைகளையும் வெளியாடைகளையும் உரியவாறு தயார்செய்துகொண்டோம். தேவைக் கதிகமாகவே பல யாத்திரீகர் உடைகளை எடுத்துச்செல்லுதல் சகஜம் என ஏற்கெனவே அறிவுறுத்தப்பட்டிருந்தாலும், சற்று மீறியே நடந்துகொண்டதாக பின்னர் உணர்ந்தேன்.

**உடற் சுகம்:**

யாத்திரை சுமுகமாக ஆரம்பித்து முடியும்வரை நல்லாரோக்கியத்தை பேணல் அவசியம். உரியவாறு உணவு உட்கொள்ளல் அவசியம். சாதரணமாக மாமிச உணவு உட்கொள்ளுவோர் யாத்திரை ஆரம்பிக்குமுன் நாற்பது நாட்களுக்காதல் சைவ உணவு ஆரம்பித்து ஆரோக்கியத்தைப் பேணுதல் மிகவும் விரும்பத்தக்கது.

மற்றும் இரத்த அழுத்தம், நீரிழிவு போன்ற உடலாரோக்கியத்தைப் பாதிக்கக்கூடிய உபாதைகளை நன்றாகக் கட்டுப்படுத்திவைத்தல் அவசியம். உரிய இரத்தப் பரிசோதனைகளைச் செய்து முன்னதாகவே வைத்தியருடன் கலந்தாலோசித்து ஆவன செய்தல் வேண்டும். மூட்டு வலி ஏதாவது இருப்பின் முக்கிய கவனமெடுத்தல் பிரதானமானது. என்னைப் பொறுத்தவரை, இறைவன் கிருபையால், உடற்சுகம் ஆரம்பம் முதல் பெருமளவு திருப்தியாகவே இருந்தது.

**பிரயாணக் காப்புறுதி:**

உயர மலையேற்றத்துக்கு உகந்த காப்புறுதி அவசியமானது. ஏறப்போகும் மலையின் அதி உயரத்துக்கேற்ப காப்புறுதிகள் கிடைக்கும். நாம் செல்லவிருக்கும் அதி உயர மலைப் பகுதி டோல்மா பாஸ் (கௌரி குண்டம் இருக்கும் பகுதி) 19,000 அடி உயரமானது. அதற்கேற்றவாறு பத்திரத்தையும் பெற்றுக்கொண்டோம். இந்த மலைப்பகுதியே கைலைப் பரிக்கிரமாவில் மிகக் கடினமான மலையேற்றம். இதிற்றான் பிராணவாயு மிகக் குறைந்த செறிவிலுள்ளது.

வயது முதிர்ந்தோர்க்கென காப்புறுதிகளில் சில விசேஷ சலுகைகள் வழங்கப்படும். சில குறிப்பிட்ட சங்கங்கள் (உதாரணமாக, இங்கிலாந்து நீரிழிவு குழு, Diabetes UK) மூலமும் பிரயாணக் காப்புறுதிச் சலுகைகள் பெற வாய்ப்புண்டு.

**கடவுச்சீட்டு, பணம்:**

கடவுச்சீட்டு தகைமையை உன்னிப்பாக கவனித்துத் தேவையான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டோம்.

நேபாள (காத்மண்டு) நுழைவு அனுமதி, திரிபுவனம் (இருபத்தி ஐந்து அமெரிக்க டொலர் செலுத்தி) விமான நிலையத்திலேயே பெற்றுக்கொள்ளலாம் என அறிந்தோம். திபெத்துக்கு (சீன) உரிய நுழைவுக் கட்டணம் (குழு நுழைவு) யாத்திரை ஒழுங்கினரே பெற்று கொடுப்பதாகவும் அறியத்தந்தார்கள்.

உரிய சீன, திபெத்திய பணமெல்லாம் இங்கிலாந்திலேயே வங்கியில் பெற்றுக்கொண்டோம். எதற்கும், அமெரிக்க டொலர் சற்று அதிகமாகவே கொண்டுசெல்லுதல் விவேகமானது.

மானஸரோவர்தீர்த்தம் சேகரிக்க உகந்த, தடித்த நெகிழிக்குப்பிகள் (பிளாஸ்டிக்) அங்கு கிடைப்பது அரிதென அறிந்தோம்... உரிய தடித்த நெகிழிக் குப்பிகளையும் வைத்துக்கொண்டோம்.

மேலும் விபரங்களுக்கு கைலை பாலாவினால் எமக்கெனத் தயாரித்து அனுப்பபட்ட யாத்திரீகரின் குறுநூல் இந்நூலின் இறுதிப் பாகத்தில் இணைக்கப்பட்டுள்ளது.

## Kailash: A Spiritual Journey

## PREPARATION

The idea of Kailash Yatra was inculcated in my mind just before my trip to India in December, 2012, and also when I visited Sadhguru Jaggi Vasudev's Ashram (Spiritual Centre) in Coimbatore. It was a sheer coincidence, when my friend Prof. Ram Swaminathan, who organised our Kilimanjaro trekking almost an year ago, communicated his intention to go for Kailash Yatra (pilgrimage) in January 2013.

My initial anxiety about trekking to Kailash was the possible limitation of Chinese Visas to people over 70 years of age; but this was soon cleared when the organiser (Kailai Balasubramaniam of Malaysia) reassured me that the limitation was mainly for those coming from India.

Once the initial requirements were satisfied and copies of travel documents with a payment of $2,600 (US) sent to the organiser, we set to move forward preparing for the trekking training. My friend got our travel arrangements to Kathmandu (not included in the payments for Kailash Dharshan by the organiser) for six of us joining the 48 strong Malaysian Group.

Group Visa to enter Tibet (Chinese territory) was the responsibility of the organiser and the charges were included in the initial payments. We had to bear the $25 (US) for Malaysian Visa. Extra 2 or 3 copies of passport size photos were also advised. Cash needed to be carried with us (especially Chinese Yens) which we got prior to our journey. Indian rupees were useful for any purchase in Kathmandu (Nepal). It was advised to carry certain amount of US dollars, as this would be very useful anywhere.

It was advised that every trekker should restrict themselves to vegetarian diet, starting about 40 days prior to the commencement of the journey.

Preparation for Kailash Dharshan included regular physical training (walking, trekking etc), collecting the necessary protective clothing (winter gear: rain coats, caps, trekking boots), daily needs such as snacks (nuts, dates, breakfast bars etc), tissues including wet wipes, water bottle (including water purification tablets), head light, preventive medications (especially against mountain sickness as oxygen concentration at very high altitudes could cause headaches, vomiting, breathlessness etc), sun protection items and photographic equipment (with extra batteries and charger). All necessary were listed by the organiser during the preparatory days.

Our small group of 6 met regularly in trekking various places in the UK, including walks in various parts of England, Snowdonia in North Wales, mountains in Lake District, Bristol etc. The training period gave us an opportunity to get used to wear the necessary winter gears as well.

In order to make trekking as comforting as possible, we had to carry only items required during the trekking, as the luggage during Kailash Dharshan (limited weight to about 15 kg per person) were to be carried by the Yaks (animals specially adapted to live in high altitudes and could carry heavy weights). The limitation of weight to be carried by Yaks was very strictly adhered. One could employ a porter to carry the water bottle and other daily needs during the trek, at a nominal extra cost. There was also facility to employ a pony with a pony guard for those who find difficulty in trekking, also at extra cost.

Yoga practice with Pranayama was of immense help during the Kailash trekking, as I experienced during our Kilimanjaro trekking.

# ஆரம்பம் & ருத்ர ஹோமம்

விமானப் பயணம், காத்மண்டு, ருத்ர ஹோமம்

2013 ஜூலை 13:

இன்று கைலாச யாத்திரை ஆரம்பம். மாலை ஐந்து மணிக்கு முன்னரே லண்டன் விமான நிலைய பயண ஆயத்த சேவை முகப்பை அடைந்தோம். அன்புத் துணைவியார், மக்கள், பேத்தி சூழ யாத்திரைக்கு விடைபெறும் சமயம். இறைவனைச் சிந்தித்தபோது சற்றே மனமுருகத்தான் செய்தது. இதற்கிடையே "எட்டிஹாற்" விமான சேவையாளர் உடனடியாகவே விமானமொன்று சில நிமிடங்களில் கிளம்பவிருப்பதாகவும், அந்தச் சந்தர்ப்பத்தை நழுவினால் தொடர்ந்து (அயர்லாந்து) "டப்ளி"னிலிருந்து தொடர் விமானத்தைப் பிடிக்க முடயாமலிருக்கலாம் எனவும் சந்தேகத்தைக் கிளப்பிவிட்டார். எனது நண்பர் சுவாமிநாதனின் வரவை எதிர்பார்த்திருந்த எனக்கு இது ஒரு அதிர்ச்சியாகத்தான் இருந்தது. நண்பர் ஏற்கெனவே ஒழுங்குசெய்தபடி காத்மண்டு செல்லும் "எட்டிஹாட்" விமானத்தை அடைவார் என்னும் நம்பிக்கையையும் தந்தார். எனினும், அந்தச் செயலாளரின் வற்புறுத்தலின் பேரில், வந்திருப்போருக்கு நம்பிக்கை கூடிய நன்றி செலுத்திவிட்டு – குடியகல்வு கிரமாதிகளை பூரணம் செய்தபின் – விமான ஏறுதுறைக்குச் சென்றேன்.

ஐந்தேகால் மணியளவில் கிளம்பிய விமானம், ஆறேகாலுக்கு டப்ளினை (Dublin) அடைந்தது.

நண்பர் சுவாமிநாதன் வரக்கூடிய – (லண்டனிலிருந்து வரும்) அடுத்த விமானம் வர ஒரு மணி நேரமாதல் செல்லுமெனவும் அறிந்தேன். மனமோ நேரம் போகப்போக சஞ்சலித்தவண்ணமே இருந்தது. விமான நிலையமோ வெறிச்சோடிக்கிடந்தது. நானொருவன் மட்டும் விமான

நிலைய சிற்றுண்டிச்சாலையில் – நேரத்தைக்கடத்தும் பொருட்டு – ஏதோ ஒருவகை ரொட்டியையும் சூடான பானத்துடன் சொட்டுச்சொட்டாக விழுங்கியவண்ணம், ஏக்கத்துடன் கண்களை அங்குமிங்குமாக நோட்டம் விட்டுக்கொண்டேயிருந்தேன். பிரயாண ஆரம்பநிலையில் சில்லறை அயர்லாந்துப் பணமுமில்லை – தொலைபேசியில் யாரையும் தொடர்புகொள்ளக்கூடிய வசதியுமில்லை. இங்கிலாந்துச் சில்லறைக் காசே கைகொடுத்துதவியது.

திடீரென ஏழேகால் மணியளவில் பிரயாணிகள் கூட்டம் விமானமொன்றிலிருந்து வருவதைக் கண்டேன். ஆகா, நண்பர் சுவாமியைக் கண்டதும் இருந்த கலக்கங்களெல்லாம் போய், "எட்டிஹாட்" விமானத்தில் எமது நீண்ட கன்னிப் பயணத்தைப் பற்றிய சிந்தனையில் ஆழ்ந்திருந்தோம்.

எட்டு மணியளவில் புறப்பட்ட விமானம் ஏழு மணி நேர பிரயாணத்தின் பின் அபுதாபி விமான நிலையத்தில் இறங்கியது. நல்ல திருப்தியான இரவு உணவுக்குப் பின் பசியே எடுக்கவில்லை. தூக்கம் கண்நிறைந்திருந்தது. அபுதாபி விமான நிலையமோ மக்கள் கூட்டத்தால் நிரம்பி வழிந்திருந்தது. காத்மண்டு செல்லும் விமானத்துக்கு இன்னும் இரண்டரை மணிநேரத்துக்குமேல் காத்திருக்கவேண்டும். இருக்கவோ இடமில்லை.

இருக்கைகள் இரண்டு கிடைக்கும் நோக்குடன் தேநீர் நிலையத்தில் இரு காப்பி வாங்கி வைத்துவிட்டு சற்றே கண்ணயர்ந்தோம்.

ஒருமணி நேரத்துள் வேறொரு "எமிரேட்ஸ்" விமானத்தில் வந்த (எங்களுடன் கூட மலைப்பயிற்சியில் ஈடுகொண்ட) மூன்று பெண் டாக்டர்களும் ஒன்றுகுழுமினர். அவர்களும் தமது விமானப் பயணத்தில் நிகழ்ந்த சுவையான சம்பவங்களைச் சொல்லிச்சொல்லி எம்மைப் பெரும் சிரிப்பிலாழ்த்தினர். இருந்த தூக்கமும் கலைந்துவிட்டது.

**ஜூலை 14:**

சில்மணி நேரத்தில் தொடர் விமானமும் ஆயத்தமென (அதிகாலை 1:30 மணி) அறிவித்தலைத் தொடர்ந்து விமானம் புறப்படும் இடம் சென்று திரிபுவன பயணத்துக்கு காத்திருந்தோம். குறித்த நேரத்தில் விமானம் கிளம்பியது.

பயணம் வசதியானதாகவே இருந்தது. இப்பயணம் பெருமளவு உறக்கத்திலேயே கழிந்தது. இரவு எட்டு மணியளவில் காத்மண்டு திரிபுவனம் சர்வதேச விமான நிலையத்தில் இறங்கியது. விமான நிலைய அனுபவம் பெரிதும் விமர்சிக்கத்தக்கதா யில்லை. ஏற்கெனவே அறிந்துகொண்டபடி, இருபத்தியைந்து அமெரிக்க டொலர்களைச் செலுத்தி நாட்டின் நுழைவு அனுமதி பெற்று, நிலையத்தைவிட்டு வெளியேறினோம்.

**திரிபுவன சர்வதேச விமான நிலையம்** பார்க்க அவ்வளவு எடுப்பாகவோ பிரமாதமானதாயோ இல்லாவிட்டாலும் அந்தப் பெயர் எனது கவனத்தை ஈர்த்துவிட்டது.

*1955ல் மன்னர் மகேந்திராவால் திறந்துவைக்கப்பட்ட இந்த விமான நிலையம் அவராலேயே, 1964இல் (இந்த நிலையத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்ற அவாக்கொண்ட) அவரது தந்தையாரின் நினைவாக, "திரிபுவன சர்வதேச விமான நிலையம்" என மாற்றப்பட்டதாம்.*



மன்னர் திரிபுவன்



மன்னர் மகேந்திரா




திரிபுவன் விமான நிலையம்

விமான நிலையத்தில் காத்மண்டு விடுதிக்கு கொண்டு செல்ல ஊர்தியொன்று ஆயத்தமாக நின்றது. ஊர்திச் சாரதியும் உதவியாளரும், பஞ்சாக்ஷர மந்திர (ஓம் நமசிவாய) ஒலியுடன் வரவேற்பு நல்கி ஒவ்வொருவருக்கும் ருத்ராக்ஷ மாலையும் அணிவித்தார்கள்.

இந்த மந்திரத்தைக் கேட்டதும் மெய்சிலிர்த்து ஏதோ அபூர்வ உணர்ச்சியும் என்னை உறுத்தியது.

இதை விளக்குதல் பாரியதொரு பொறுப்பு. சிறு குறிப்பு மட்டும் தருகிறேன்:

ஆம், **ந ம சி வா ய** எனும் திருவைந்தெழுத்து, – பஞ்சாட்சரம் – மந்திரங்களிலெல்லாம் மேலானது. ஆன்மிக வழியில் நிற்போரின் உயிர்நாடி. இதற்கு விளக்கங்கள் பலவுள. வேதங்களில், இருக்குவேதத்தில் சிவனின் நாமாவளி ஸ்ரீருத்ரத்தில் பாரியளவில் விபரிக்கப்பட்டுள்ளது. ஐம்பூதங்களையும், ஐந்து சக்கரங்களையும் பிரதிபலிப்பது இந்தப் பஞ்சாட்சரம். சுருக்கமாகக் கூறின் பின்வருமாறு:

**ந** – பிருதுவி (சுவாதிஷ்டானம்), **ம** – அப்பு (மணிப்பூரகம்), **சி** – தேயு (அனாகதம்), **வ** [வா] – வாயு (விசுத்தி), **ய** – ஆகாயம் (ஆக்ஞை).

மேலும் கீழ்க்காணும் தேவாரத் தொடர்களை நினைவூட்டலாம்:

"கற்றுணைப் பூட்டியோர் கடலினுட் பாய்ச்சினும்
நற்றுணையாவது நமசிவாயவே"

"வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம்
நமசிவாயவே"



**ருத்ராக்ஷம்:** பொதுவாக சிவனை வழிபடும் இந்துக்களே ருத்ராக்ஷம் அணிவர். ருத்ராக்ஷத்தை அணிபவர் சிவன் அம்சமாகவே கருதப்படுவர். ஏனென்றால், பல கோடி புண்ணியம் செய்தால் மட்டுமே இந்தப் பிறவியில்

ருத்ராக்ஷம் அணியும் பாக்கியமுடையவர்கள் என்பர். ருத்ராக்ஷம் அணிய வேண்டும் என்ற எண்ணம் வருவதே புண்ணியங்களின் தூண்டுதலே.

சிவ தீக்ஷை பெற்று ருத்ராக்ஷம் அணிவதே சாலச் சிறந்தது. எந்த மந்திரமோ யாகமோ செய்து அறியாதவனுங்கூட, ருத்ராக்ஷ மணியைத் தொடுவதனால் பாவங்கள் அனைத் திலிருந்தும் விடுபடுகிறான்! மரணமடையும்போது ருத்ராக்ஷத்தை அணிபவரது வம்சம் விருத்தியாகும் என்றும் கூறுவர்.

தன்னைச் சுற்றிலும் அபூர்வமான அதிர்வலைகளை உருவாக்குவது ருத்ராக்ஷம். சிவபக்தர்களுக்கு ருத்ராக்ஷ தானம் செய்வது மிகச் சிறப்பான பலன்களை அளிக்கும் என்பர்.

இவ்வாறாக ருத்ராக்ஷ மகிமையை அளப்பரியவாறு விபரிக்கலாம்.

இருபது நிமிடங்களுக்குள் எங்கள் யாத்திரீக அமைப்பாளர்களால் ஒழுங்குசெய்யப்பட்டிருந்த "மல்லா" விடுதியை (ஹோட்டலை) அடைந்தோம்.

இந்த விடுதியின் பெயர் சற்றே கவனத்தை ஈர்த்தது.

12ஆம் நூற்றாண்டில், மல்லர் என்ற அரச பரம்பரை யினரே இந்நாட்டினை ஆண்டுவந்தனர். மல்லா என்ற சொல் மல்லர் என்பதிலிருந்து பெறப்பட்டதாம். தமிழில் மல்லர்கள் என்பது மல்யுத்தக்காரர் என்பது பலரும் அறிவர். இந்த மன்னர்களும் மல்யுத்தவீரர்களே! இத்தருணத்தில் தமிழின் தொன்மை அறிந்து வியப்படைந்தேன். பரம்பரையைப்



மல்லா விடுதி

போற்றிக் காப்பதில் நேபாள அரசபரம்பரைக்கு நிகரானாவர் எவருமுளரோ?



கைலை பாலா

விடுதியை அடைந்ததும், ஆரம்ப ஒழுங்குகளை மரபுப்படி நிறைவுசெய்தபின், எமது அறைகளுக்குள் உடைமைகளை வைத்தோம். இராப் போஜனம் தயார் என்னும் அறிவிப்பைத் தொடர்ந்து உரிய மண்டபத்திற்குள் சென்றோம். எங்கள் ஐவரினது வருகையைக் கண்டதும் அங்கு குழுமியிருந்த ஏனைய யாத்திரீகர் குழு "ஓம் நமசிவாய" என்ற கரகோஷத்துடன் வரவேற்பளித்தனர். இசைக்கலைஞர் ஜேஸுதாஸ் போல தோற்றமளித்த பிரதான யாத்திரை அமைப்பாளர் கைலை பாலாவை முதன்முறையாகக் கண்ணுற்று அகமிக மகிழ்ந்தேன். மிக்க கரிசனையுடன் எமது லண்டனிலிருந்து காத்மண்டு விமானப் பிரயாணத்தை விசாரித்தறிந்த பின்னர் எம்முடன் இராப் போஜனம் அருந்தினார் கைலை பாலா.

எமக்கெனக் கொடுக்கப்பட்ட, திபெத்திய கைலை யாத்திரை ஒழுங்கினர் "ஈகோ ட்ரெக் நேபால்" (Eco Trek Nepal) நிறுவனத்தினர் வழங்கிய, ட சேட், தொப்பி, கோணிப்பை (Duffle bag) யாவற்றையும் பெற்றுக்கொண்டோம். கொண்டுவந்த பெட்டியிலிருந்து தேவையானவற்றை எமக்குதரப்பட "டபிள்" பையிலேயே (duffle bag) கொண்டுவருமாறு கேட்டுக்கொண்டதற்கிணங்க உடைமைகளை அதற்குள் மாற்றிவைத்து ஒழுங்குசெய்தோம்.

அந்த இரவு உணவு எனக்குப் பிடித்தமான பாகற்காய் பிரட்டலுடன், சாம்பார், பருப்பு ரசம், தயிர், ஊறுகாய் இத்தியாதி வகைகளைக் கொண்டிருந்தது. தொடர்ந்து பரிமாறப்பட்ட பழவகைகள் மகுடத்திலொரு வைரம் பதித்தாற் போலிருந்தது. யாத்திரையின் அடுத்தநாள் அதிவிசேஷ முக்கிய ருத்ரஹோமத்தைப் பற்றி சிறிது அளவளாவிய பின்னர் எமது

மிகுதி யாத்திரைக் கட்டணங்களைச் செலுத்திவிட்டு எமக்கு ஒதுக்கப்பட்ட அறைக்குச்சென்று சற்று இளைப்பாறியதோடு கண்ணயர்ந்தோம்.

**ஜூலை** 15:

இட்ட திட்டத்தின்படி, அதிகாலை *5:30* மணிக்கு விழித்தெழுந்து - காலைக்கடன்கள் முடித்து, திருப்தியான ஸ்நானம் செய்து - ஆவலுடன் எதிர்பார்த்திருந்த ருத்ர ஹோமத்திற்கு ஆயத்தமானோம்.

வழமையாக இந்த யக்ஞம் விசேஷ ஸ்தலமான பசுபதிநாத் கோவில் வளாகத்திலேயே நடைபெற்றதாகவும், அந்த வளாகம் புனித ஸ்தலமாக்கப்பட்ட பின்னர் இதுபோன்ற வைபவங்கள் அங்கு அனுமதிக்கப்படுவதில்லையாம். எனவேதான், அண்மையிலுள்ள ஒரு மடத்திலேதான் இந்த ருத்ர ஹோமம் நடைபெற ஏற்பாடாகியிருந்தது

புறப்படுமுன்னர், யாத்திரீகர் எல்லோரையும் ஒன்று கூடவைத்து, கைலை பாலா தேவார பாராயணம் செய்தபின்னர், பொதுவாக எல்லோரையும் அறிமுகஞ்செய்தார். பின்னர் அன்றைய ஸ்ரீ ருத்ர ஹோமம், அதன் பின் பசுபதிநாத் கோவில் தரிசனம்பற்றிச் சிறிது கூறிவைத்தார்.



விடுதியில் கைலை பாலா ருத்ர ஹோமத்திற்கு அறிமுகம்




ஹோமம் நடைபெற்ற மடம்

**ஸ்ரீ ருத்ர ஹோமம்:**

யாஹம் அல்லது வேள்வி (வேட்டல்) என்றும் அழைப்பர். யாகம் அன்பது யஜ் (வழிபாடு) என்ற அடியிலிருந்து தோன்றியது. யாக்ஞும் எனும் சொல்லும் இதன் விரிவேயாம். பக்திபூர்வமான வழிபாடு யாஹம் எனப்படும். எரியோம்பல் என்னும் அக்னி வழிபாடே முதன்மையானது. விசேஷ சந்தர்ப்பங்களில் அக்னி குண்டத்தைச்சுற்றி பல்வேறு தேவர்களுக்கு (ஆவாகனஞ்செய்து) யாஹ மண்டபங்களும் அமைப்பர். ஸ்ரீ ருத்ர ஹோமம் ஆயுள் விருத்தி மற்றும் ஆரோக்கியம் வேண்டி ஸ்ரீ ருத்ரரை வேண்டிச் செய்வதாம்.

யாஹங்கள் இந்துக்களால் மட்டுமன்றி திபெத்திய பௌத்தர்களாலும் ஜப்பானிய வஜ்ராயன பரம்பரை யினராலும் ஜைனர்களாலும் அவரவர் முக்கிய வழிபாடுகளில் சேர்த்துக்கொள்ளப்படுவன.

கைலை யாத்திரைக்கு முன்னர் இந்தப் பிரார்த்தனை, அனைவரினது நன்மைகருதி, யாத்திரை சுமுகமாக நிறைவுற, அதிமுக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படும்.

இந்த ஹோமத்தை நடாத்திவைக்க நேபாள சாஸ்த்திரீய விற்பன்னர்கள் முன்னரே ஒழுங்குசெய்தபடி குறிப்பிட்ட நேரத்துக்கு வந்து, உரிய ஆயத்தங்களைச் செய்தனர். பாரம்பரிய முறைப்படி சங்கல்பம், விநாயகர் பூஜை/ஹோமம், நவக்கிரக ஹோமம் இத்தியாதி நடைபெற்று, ஸ்ரீ ருத்ர ஹோமம் நடைபெற்றது. அதிமுக்கியமான மந்திரங்கள் யாவரும் உணர்ந்து ஓதும்படியாக அந்தணர்கள் சிறப்பாக அவர்களுக்கே உரித்தான உச்சரிப்புடன் ஓதினர்.

**நீண்ட ஆயுள் பெற, மரண பயம்நீங்க ஸ்ரீ ருத்ரம்:**

"நமஸ்தே அஸ்து பகவன் விச்வேஸ்வராய மஹாதேவாய த்ரயம்பகாய – த்ரிபுராந்தகாய த்ரிகாக்னி காலாய காலாக்னீ ருத்ராய நீலகண்டாய ம்ருத்யுஞ்ஜாய ஸர்வேஸ்வராய ஸதா சிவாய ஸ்ரீமன் மஹாதேவாய நம:"

**மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம் (மரண பயம்நீங்க):**

"ஓம் த்ரயம்பகம் யஜாமஹே! ஸுகந்திம் புஷ்டிவர்த்தனம்
உர்வாருகமிவ பந்தனாந் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத்"

**அர்த்தம்:** நறுமணம் கமழ்பவரும், உணவூட்டி வளர்ப்பவரும், முக்கண்ணனுமாகிய சிவபெருமானைப் போற்றி வழிபடுகிறோம். வெள்ளரிப்பழம் காம்பிலிருந்து விடுபடுவதுபோல் மரணத்தின் பிடியிலிருந்து விடுபடுவோமாக. ஆன்மநிலையிலிருந்து விலகாமல் இருப்போமாக.

இந்த மந்திரத்தின் முக்கிய சாராம்சம் என்னவென்றால் நம்முடைய மரணம் துன்பமில்லாமல் இருக்க வேண்டுமென்பதுதான். அதற்கு உதாரணமாகச் சொல்லப்பட்ட விஷயம், வெள்ளரிச் செடியிலிருந்து நன்கு பழுத்த வெள்ளரிப்பழம் எவ்வாறு சிரமமில்லாமல் விடுபடுகிறதோ அப்படி என் ஆத்மாவும் இந்த உடலிலிருந்து விடுபட வேண்டும்.

இவையிரண்டும் எனக்குப் பிடித்த / அந்நேரத்துக்கு உகந்த மந்திரங்கள். யஜூர் வேதத்திலிருந்து பெறப்பெற்ற ஸ்ரீ ருத்ரம் – சமகம் (328), நமகம் (194) என்ற இரு பகுதிகளைக் கொண்டது. சமகம் இறைவனை வேண்டிக்கொள்வது. இதைக் கேட்டாலே போதும், வேண்டிய அனைத்தும் கிடைத்துவிடுமாம். சிவன் கோவில்களில் அபிஷேகத்தின்

போது இதனைப் பாராயணஞ்செய்வர். நமகம் சிவனது நாமாதிகளை ஓதுவது.

இந்த ஹோமத்தில் விசேஷமாக யான் கவனித்தது: குழுமியிருந்த அனைவரையுமே ஈடுபடுத்தி பக்தி சிரத்தையுடன் செயவித்ததே.

சகல சமயாசார கிரியைகள் நிறைவேறியதும் பிராயச்சித்த (கிரியைகளில் நிகழ்ந்திருக்ககூடிய குறைகளை நிவர்த்திசெய்ய)



பூர்ணாஹுதி (நிறைவு)



ரக்ஷாபந்தனம் (காப்புக் கட்டுதல்)

மந்திரங்கள் ஓதப்பட்டு பின்னர் பூரண ஆஹுதி (நிறைவு மந்திரம் ஓதல்) நடைபெற்றது.

**ரக்ஷா பந்தனம்:**

ரக்ஷா (இரட்சித்தல்) என்பது காப்பு. காவலுக்காக கட்டப்பெறுவது. காப்புக்கட்டுதல் எனவும் கூறுவர். எடுத்த கருமம் தடையின்றி நிறைவேறுதற்கும், அக்கருமமன்றி வேறு செயல்களில் ஈடுபடாது தடுப்பதற்கும் காப்பு கட்டப்பெறும்.

எமது கைலாச யாத்திரை எதுவித இடையூறுமின்றி நிறைவுற எந்நேரமும் பாதுகாப்பாக இருக்கும் வண்ணமே இந்த நூல் கட்டுதல் நடைபெறும். இத்துடன், அந்தணர்களுக்கு நன்றி செலுத்தியதோடு ஹோம நிகழ்ச்சிகள் இனிதே முடிவுற்றது. தொடர்ந்து, பேருந்துமூலமே (அண்மையிலுள்ள) உலகப்பிரசித்திபெற்ற பசுபதிநாத் கோவிலை நோக்கிப் பயணமானோம்.

## Kailash: A Spiritual Journey
## LONDON TO KATHMANDU

13th July 2013 was the beginning of our Kailash Yatra with a flight from London Heathrow airport via Dublin and Abu Dhabi to Kathmandu which we reached on the following day around 8pm. Kathmandu airport known as Tribhuvan International Airport was named by King Mahendra in 1964, in memory of his father who initiated this small but beautiful airport.

On our way out, after the routine checks and visa requirements, we were welcomed by two representatives of the tour organisers with the chanting of NAMASHIVAYA (the most celestial five letter word of Lord Shiva) and garlanded with a Rudraksha Mala (a necklace of beads or seeds from a Holy tree unique for Shiva devotees) similar to the rosary.

"Rudraksha meaning Lord Shiva's teardrops", is a seed traditionally used as prayer beads in Hinduism (especially Saivism). The seed is produced by several species of large evergreen broad & leaved tree in the genus Elaeocarpus, with Elaeocarpus ganitrus being the principal species. They are associated with the Hindu deity Lord Shiva and are commonly worn for protection by his devotees. The seeds are primarily used in India and Nepal as beads for organic jewellery and malas, and are valued similarly to semi & precious stones. Various meanings and potencies are attributed to beads with different numbers of segments (faces), and rare or unique beads are highly prized and valuable.

From there, we were taken to the MALLA HOTEL, where we met our chief organiser Kailai Bala and a few other co devotees. At the hotel, they had traditionally prepared Indian style tasty vegetarian dinner.

Interestingly, MALLA was named after the 12th century Kings of Nepal, and the name Malla in Tamil language means warriors, which naturally the kings were.

After the routines on the following morning, we had the prayer meeting followed by a great offering for the specially prepared fire (Homam), towards getting the blessing of Lord Shiva (Rudra) for a safety journey to Kailash. This took place in a nearby traditional hall.

The whole function was done with great devotion by every individual to ensure a perfect offering to the Lord Shiva.

At the end of this special ceremony, every devotee was tied on the wrist, a holy thread (Raksha Bhandan) by the priest, as a mark of ensuring safety during the Holy Yatra to Kailash and back home.

Our group proceeded to the temple of International fame and importance, the Pasupathinath Temple.

# பசுபதிநாத் தரிசனம்

## கோவில் தரிசனம், சரித்திர முக்கியத்துவம், காத்மண்டு கடைத்தெரு காட்சிகள்

**ஜூலை 15 (தொடர்):**

*பசுபதிநாத் கோவிலைச் சுற்றியுள்ள பிரதேசம் (யுனெஸ்கோ) ஐக்கிய நாடுகள் கல்வி, அறிவியல் மற்றும் பண்பாட்டு அமைப்பால் புனித வளாகமாக – நேபாளத்தின் பாரம்பரிய சொத்தாக பிரகடனப்படுத்தபட்டுள்ளது. வனப்புடன் பிரமிக்கத்தக்களவு தூய்மையாகக் காணப்பட்ட இந்தப் புண்ணிய பூமியைக் கண்டு வியப்படையாத கண்களே இருக்காததெனலாம்.*

*அலை அலையாக மக்கள் கூட்டம் அசைந்த வண்ணமே யிருந்தது. பலர் காவியுடையுடன்தான் சென்றனர். ஒவ்வொரு திங்கட்கிழமையும் இக்காட்சியை பசுபதிநாத் கோவிலில் காணலாம். ஏனெனில் சோமவாரம் (சோமன் என்றால் சிவனின் சிரசில் விளங்கும் சந்திரன்) சிவனுக்கு அதிவிசேஷ தினம்.*

*அடியேன் தரிசித்த பல இந்தியக் கோவில்களில் கண்டதைப்போல் பசுபதிநாத் கோவில் வட்டாரத்தில் பிச்சை எடுப்போரையே காணோம்.*

*படைவீரர்போலத் தோற்றமளித்த ஆண், பெண்பாலாரும் நூற்றுக்கணக்கான பாடசாலச் சிறுவர், சிறுமியர் சாரணர் உடையில் பக்தர்களை ஒழுங்காக தரிசனத்துக்குச் செல்ல உதவியமை என்றும் மறக்கமுடியாத ஒரு காட்சியாக என் மனதில் பதிந்துவிட்டன.*

*பாதுகாப்புக் கருதி கோவில் வளாகத்தில் புகைப்படம் பிடிப்பது கட்டுப்படுத்தபட்டிருந்தது.*



பசுபதிநாத் மூலவர் கூடம்

காத்மண்டுவிலுள்ள இந்துக் கோவில்களுள் பசுபதிநாத் கோவில்தான் புராதனமானது. வேதகாலத்தில் உருவாக்கப்பட்டதென அறியப்படும் இத் திருக்கோவில் சிவ ஸ்தலங்களில் வெகு விஷேஷமானதாகக் கருதப்படுகிறது. இக் கோவில் எப்போது ஸ்தாபிக்கப்பட்டது என்பது அறியப்படவில்லை. இது சரித்திரகாலத்துக்கு அப்பாற்பட்டதாகும். இதுபற்றிய அற்புதமான புராணக் கதைகள் பலவுள. பெருமளவு சீர்குலைந்திருந்த கோவிலை,

மன்னர் பூபதிந்திர மல்லா என்பவர் புதுப்பித்து இன்று நாம் காணும் அழகிய மாடிகள் கொண்ட திருக்கோவிலாகக் காட்சியளிக்கிறது. இதன் பின்னர்தான் பல கோவில்கள் சிவன் கோவிலைச்சுற்றி எழுப்பப்பட்டன என அறியக்கிடக்கிறது.



**பசுபதிநாத் கோவிலும் அண்மையிலுள்ள கட்டடங்களும்**

எட்டாம் நூற்றாண்டிலிருந்தே இக்கோவிலுக்கு அருட்திரு ஆதிசங்கரரின் வேண்டுகோளின்படி பட்டர் என அழைக்கப்பட்ட கேரள நம்பூதிரிப் பிராமணர்களே பூஜை செய்தனர். இவர்களில் பெரியவரான மூல பட்டரே நேபாள மன்னருக்கு ஆலோசகராக இருந்தார். அந்நாட்களில், இன்றும் கேரளத்திலுள்ள குருவாயூர் கோவிலிலுள்ளது போல, இந்துக்களைத் தவிர வேறெவரும் கோவிலுள்ளே அனுமதிக்கப்படுவதில்லையாம். ஆனால், பின்னர் ஏற்பட்ட பற்பல அரசியற் கிளர்ச்சிகளில் சிக்குண்ட நேபாளம் இந்த பாரம்பரியத்தை இழந்து, நேபாள அர்ச்சகர்களே கோவிற் பொறுப்பை ஏற்று நடத்துவாராயினர்.

நேபாள இந்துக் கோவில்கள் – நம் நாட்டு ஸ்தூபி கோபுரத்துடன் கூடியதுபோலல்லாது, அந்நாட்டுப் பாரம்பரிய பகோடா (Pagoda) பாணியில் (இரு மாடிகளைக்கொண்டதாக) அமைந்துள்ளன.

ஒரு மீட்டர் உயரமுள்ள மூலவர் லிங்கம் நான்கு முகங்களைக்கொண்டு சதுர்முக லிங்கம் என அழைக்கப்படும். இவை விநாயகர், விஷ்ணு, சூரியன், அம்பாள் ஆகிவற்றைக் குறிப்பிடுவனவாம். ஒழுங்குமிக்க பக்தர்கள் வரிசையில் சேர்ந்து, நெடுநேரத்தின் பின்னர் சிலவினாடிகளே புனித தரிசனம் கிடைத்தது. திருப்பதிப் பக்தர் வரிசை எவ்வளவு விசையாகச் செல்லுமோ அதைவிட விசையாகவே எம்மைத் "தள்ளி" விட்டனர் பரிசாரகர். ஆயினும் எல்லோருக்கும் சிவனின் தீர்த்தத்தை சிரசு முதலாக உடம்பெல்லாம் பரவத்

தெளித்தனர். இந்தப் பரவசத்துடன் படிகளில் விரைவாகவே இறங்கி வந்துவிட்டோம்.

கோவிலின் அதிதடித்த கதவுகளில் கவர்ச்சிகரமான பல வடிவங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

கோவிலின் வட முனையில் காவல் தெய்வமாக வாசுகி (சர்ப்பம்) கோவிலுண்டு. இன்னுமொரு பகுதியில் 108 லிங்ககளைக்கொண்ட, ஆனால் பாழடைந்த நிலையில் பெரியதொரு வளாகம். அத்தனை லிங்கங்களையும் தரிசித்த பின்னரே வெளியேறினோம்.

பிரதான கோவிலின் சுற்றுப்புறமாக அமைந்திருக்கும் கோவில்கள் சிலவற்றில் புரோஹிதர்கள் யாத்திரீகரின் பணத்தில் கண் வைத்தபடி இருப்பர். பக்தி கண்ணை மூடினால் கவனமாகப் பணத்துக்கு பரிவு வந்துவிடும். எனவே, யாத்திரீகர் மிக்க கவனமாகவே இவ்விடங்களில் தரிசனம் செய்வது அறிவானது.

உட்பிரகாரங்களுள் புகைப்படம் பிடித்தல் கண்டிப்பாகத் தடைசெய்யப்பட்டுள்ளது. எங்கு பார்த்தாலும் பாதுகாப்பு அதிகாரிகள் (சீருடையின்றி, சாதாரண பக்தர்போலவும்) மிகவும் கவனமாகக் கடமையில் ஈடுபட்டிருப்பதை அவதானிக்க முடிந்தது.

கோவிலுக்கருகாமையிலே ஓடும் "பாக்மதி" நதி அதி முக்கியத்துவம் வாய்ந்தது. இங்கு பெருமளவு பூதவுடல்கள் தகனஞ் செய்வதைப் பார்த்தபோது – அவர்கள் இறையடி சேர உகந்த ஸ்தலமென ஊகிக்கக்கூடியதாயிருந்தது.

உலகின் பல்வேறு நாட்டு மக்களும் இத் தலத்தில் பக்தி சிரத்தையுடன் வழிபடுவது இறைவனின் தன்மையை எடுத்துக் காட்டுவதாயிருந்ததது. எங்கு பார்த்தாலும் நேபாளம் அல்லது ஹிந்தி மொழியைப் பேசுபவர்களே இருந்ததால், இந்த புனித ஸ்தலத்தை சுற்றிப்பார்த்து, மேலும் விரிவாக அறிந்துகொள்ளும் வாய்ப்பு எமக்குக் கிட்டவில்லை என்ற ஆதங்கத்தில் பேருந்துமூலம் விடுதி நோக்கி வந்துவிட்டோம்.

சிறிது உடலாறுதல் பெற்றோம்.

**இன்னொரு சுவாரசியமான புராணக் கதை:**

விஷ்ணு ஒருசமயம் சௌராஷ்டிரத்திலிருந்து வந்து, புத்தர் அவதாரமாக மந்திகாத்து மலையில்

கடுந்தவம் புரிந்துகொண்டிருந்தார். அச்சமயம் பார்வதி வஜ்ரயோகினி அம்பாளாக அவர்முன் தோற்றினார். அப்போது பார்வதியிடமிருந்து ஒரு வரம் அவருக்குக் கிடைத்தது. அதுவே, பௌத்தர்கள் மட்டுமே நேபாளத்தின் இப்பகுதியில் வதியலாம் என்பதாம். அதற்கியைந்த பார்வதி, சிவனின் அடியார்களும் பௌத்தர்களும் இந்நாட்டில் சுமுகமாக வாழ்வாராக எனக் கூறியருளினார். அத்தோடு, ஒரு லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டும் எனவும் பார்வதி கேட்டுக்கொண்டபடி, அந்தப் பௌத்தர் கருணிகேஸ்வரரை ஸ்தாபித்தார்.

அளப்பரிய விலைமதிப்பற்ற தங்கத்தினாலான ஒளிமிகு பசுபதிநாத் லிங்கத்தை மையத்தே வைத்து பசுபதிபுரியை ஸ்தாபித்தனர். இது துவாபர யுகத்தில் நிகழ்ந்தது. இதன் பின், கலியுகத்தில், லிங்கம் பூமிக்குள் மூழ்கிவிட்டதாம்.

அடுத்த நாள் (ஜூலை 16) அதிகாலை சரியாக 5:30 மணிக்கு பேருந்து புறப்பட வேண்டுமெனவும், அதனால் நாமெல்லாம் அதிகாலை 4 மணிக்கே விழித்தெழுந்து உரிய ஆயத்தங்களைச் செய்து முடித்துவிட வேண்டும் எனவும் தகவல் கிடைத்தது.

இதற்கிடையில் ஒருசில முக்கிய தேவையான பொருட்கள் வாங்கவேண்டியிருப்பதால் எனது நண்பர் கடைத்தெருவுக்குப் போகவிருப்பதாகச் சொன்னார். எனக்கும் நேபாளம் காத்மண்டு கடைத்தெரு ஓரளவாதல் சுற்றிப் பார்க்கலாம் என்ற அவா இருந்தது.

காத்மண்டு என்ற பெயர் "கஸ்தமண்டப்" என்பதிலிருந்து பெறப்பட்டதாம். கஸ்த என்பது சமஸ்கிருதத்தில் மரம் என்பதாம். ஒரே ஒரு மரத்தாலான இந்தக் கோவிலையொட்டியே இப்பெயர் வந்தது. 1596இல் லக்ஷ்மி நரசிம்ம மல்லா என்னும் மன்னரால் இக்கோவில் கட்டப்பட்டது. இதில் உலோகத்தாலான ஆணியோ வேறெதுவுமோ உபயோகிக்கப் படவில்லையாம்.

காத்மண்டு நேபாளத்தின் யாத்திரீகர் தலமாகும். கோப்பை வடிவான பள்ளத்தாக்கில் இருக்கும் காத்மண்டு, கடல் மட்டத்திலிருந்து 4,600 அடி (1,400 மீட்டர்) உயரத்திலுள்ளது. தனித்துவமான நேபாளத்தின் பொருளாதாரம் சுமாரா யிருப்பினும், பெரும்பாலும் இந்தியாவையே நாடியுள்ளதாகத் தென்படுகிறது.

"மல்லா" விடுதி நகருக்குள்ளேயே இருந்ததால், தேவையான பொருட்களை வாங்குதல் மிக்க வசதியாயிருக்குமல்லவா? எனது ஆர்வமும் நிறைவேறும் என்ற எண்ணத்துடன் பிற்பகல் மூன்று மணியளவில் கால்நடையாகவே கிளம்பினோம்.



இயங்கும் மின் கம்பிகள்



தெருவிலொரு திருமண உலா

விடுதியிலிருந்து இறங்கி – எமக்கு வழிகாட்டியபடி– கடைத்தெரு நோக்கி நடந்தோம். சென்னையில் பாண்டி பஜாரில் நடக்கும் நினைவுதான் வந்தது. அத்தனை நெருக்கமான –

ஒழுங்கற்ற – பாதைகள். தலைக்குமேல் தொங்கும் மின்சாரக் கம்பிகள். எம்மை ஆச்சரியத்துக்குள்ளாக்கின.

**"தாமேல்" கடைதெருக் காட்சிகள்**

ஆவலாயிருந்து எதிர்பார்த்த "தாமேல்" வீதி பத்து நிமிட நடையிலேயே இருந்தது.

ஆஹா... எவ்வளவு தூரம் வாழ்க்கை இத்தனை மக்கள் கூட்டத்துக்கிடையே அமைதியாக நடைபெறுகிறது? கல்யாண ஊர்வலம் ஒரு பாதையாலும், அங்காடி வர்த்தகர் ஒருபுறம் – இதற்கிடையே சிறியதொரு கோவில்... எல்லாம் பெருமளவு இந்தியப் பாணியிலேயே இருக்கக் கண்டோம்.



கடைத்தெரு



மனித ரிக்ஷா



மாதுளம்பழ விற்பனை




தாமேல் கடை

காத்மண்டுவில் மிகவும் பரந்த அளவில் அனைவருக்கும் – முக்கியமாக சுற்றுலாப் பயணிகளுக்கு – தெரிந்ததொரு வட்டாரம் தாமேல். இந்த சுறுசுறுப்பான மிகக் குறுகலான கடைத்தெருவில், ஏறத்தாழ ஒரு சுற்றுலாப் பயணிக்குத் தேவையான மலை ஏறுவதற்குரிய பொருட்கள், பூஜைப்பொருட்கள், சுற்றுலா ஒழுங்கினர் ஸ்தாபனங்கள் இத்தியாதி அனைத்துமே இந்த 2 கிலோ மீட்டர் தூரமுள்ள கடைத்தெருவில் பெற்றுக்கொள்ளலாம்.

அநேக வியாபாரிகளுக்கு ஆங்கிலம் நன்கு புரியும். இருந்தும் எங்கு பார்த்தாலும் கணணியைக் கையில் வைத்திருப்பர். ஏதாவதொரு பொருளுக்கு விலை கேட்டதும், கணனியிலேயே விலையை, நேபாள அல்லது இந்திய ரூபாய்களில் அல்லது இரண்டு நாணயங்களிலுமே சொடுக்கிக் காட்டுவர். வியப்புறும் வகையில், தேவையானால் உடனேயே அவர்களுக்கு ஆங்கில அல்லது சீன பணத்திலும் விலையைச் சொடுக்கிக்காட்டும் திறமையுண்டு.

என்னை மிகக் கவர்ந்த முக்கியமானதொன்று, இங்குள்ள ருத்ராக்ஷ விற்பனை நிலையங்கள்.



ருத்ராக்ஷ மரம், ருத்ராக்ஷப் பழம், பூ, பலவித ருத்ராக்ஷங்கள்



ருத்ராக்ஷ விற்பனை நிலையமொன்று

ருத்ராக்ஷம் என்பது சிவனின் கண்ணீர் எனப் பொருள்படும். ஆதி யோகி சிவா பிரபஞ்சப் படைப்புகளின் நன்மை கருதி ஆழ்ந்த த்யானத்திலிருக்கையில் பெருக்கெடுத்ததே இந்த ஆனந்தக் கண்ணீர். சிவனின் அங்கங்களில் அணிந்திருப்பது.

ருத்ராக்ஷம் அணிதல்




பக்தர்கள் ருத்ராக்ஷம் அணிவதற்கும் அதைப் பேணுவதற்கும் குறிப்பிட்ட விதிகளுண்டு. ருத்ராக்ஷங்கள் பலவித தெய்வீகத் தன்மையையும் பாதுகாக்கும் சக்திகளையும் கொண்டதாகக் கருதப்படும். அவற்றின் முகங்களைப் பொறுத்து பலவகைப்படும். ஒன்று முதல் முப்பத்தியெட்டு முகங்கள் வரையுள்ள ருத்ராக்ஷங்களும் உண்டாம். ஆனால், ஒன்று முதல் ஐந்து அல்லது ஆறு முகங்கள் கொண்டவைதாம் கிடைக்கக் கூடியனவாயிருக்கிறது. வெவ்வேறு முகங்களையுடைய ருத்ராக்ஷங்கள் ஒவ்வொன்றும் வெவ்வேறு பயனுள்ளவை. அணியும் நோக்கத்தைப் பொறுத்து தனியாகவோ மாலையாகக் கோர்த்தோ அணியலாம்.

வெள்ளை முதல் சிகப்பு, மண் நிறம், கறுப்பு நிறம் வரை பல வர்ணங்களிலும் ருத்ராக்ஷம் உற்பத்தியாகிறது. தியானத்துக்கு அநேகர் ருத்ராக்ஷத்தைப் பயன்படுத்துவர்.

ருத்ராக்ஷத்தின் நடுவேயுள்ள நூல் கோர்க்கக்கூடிய துவாரம் (பக்தர்கள் அணிவதற்காகவோ?) இயற்கையாகவே உள்ளது.

இந்த மரம் கடல் மட்டத்திலிருந்து இரண்டாயிரம் மீட்டர் உயரத்திலுள்ள வலையங்களில் வளரும். இமயமலைச் சாரலிலும், இந்தோனேசியாவிலும் பெருமளவு வளரும். இதனது தாவரவியற் பெயர் டீலியாசியே (Tiliaceae) என்ற குடும்பத்தைச் சேர்ந்த "ஈலியோகார்பஸ் காநிடஸ் ரொச்ப்" (Elaeocarpus ganitrus Roxb) எனப்படுவது. இதில் *350* இனங்கள் வரை உண்டெனக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

நேபாளம் ருத்ராக்ஷம் விளைவிக்கும் பெரும் நாடு. எனவே, நேபாளத் தலைநகராம் காத்மண்டுவில் இதன் விற்பனை பல்கிப் பெருகியிருப்பது ஆச்சரியப்படுவதற்கில்லையே!

பணமாற்று:

இங்கு ஸ்டேர்லிங் பவுண் ஒன்றுக்கு ஒன்பது சீன யுவான்கள் கிடைக்கும். இந்திய *100* ரூபாய், நேபாள

*160* ரூபாய்க்குச் சமானம். இந்திய ரூபாயில் *100* ரூபாய் நோட்டுகள் மட்டுமே உபயோகமுள்ளது. ஏனையவையை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

புராதன கட்டடங்கள் மட்டுமன்றி, பிரார்த்தனைக்குரிய, இந்து, பௌத்த ஆலயங்கள் கூட காணப்பட்டன.




ஸ்ரீ க்ஹா



சதுக்கத்தில் பௌத்த ஆலயம்



பௌத்த லிங்கமோ?

இந்த இடங்களை ரசித்துவிட்டு – மானஸரோவர் தீர்த்தம் சேகரிக்க ஒரு நெகிழ் புட்டியும், சில தின் பண்டங்கள், மழை அணி, சீனப் பணம் (யென்) முதலானவற்றைப் பெற்றுக் கொண்டு விடுதியை நோக்கினோம்.

"தாமேல்" என்ற பெயருக்கும் தமிழுக்கும் ஏதாவது தொடர்புண்டோ என்ற ஆவல் நிறைவுபெறவுமில்லை!!!

**Kailash: A Spiritual Journey**

# PASUPATHINATH TEMPLE

Although it was only a short distance from where we had the Rudra Homam, because of traffic and pilgrims, it took almost half an hour to reach the famous historic temple, Pasupathinath.

It was a very nice bright weather for this pilgrimage and reasonably easy to get access to the entrance of the temple. However, with the long winding que, after going through the routine security checks, storing foot wears etc, it took another hour to step into the temple compound. Surprisingly, volunteers, including local young students, helped to maintain peace and order – quite a surprising feature in a temple of this nature. The temple and the surroundings are declared a Sacred Area by the UNESCO, and was kept quite clean, with only a very few beggars unlike in most Indian Temples..

The temple is built in the Nepalese Pagoda style with two storeys, with ancient carvings of numerous statues (mostly Shiv Lings) and strong wooden doors. Witnessing the rituals around the temple area and hugely important main Shiv Ling inside the altar were quite unique. The originally established Shiv Ling had connections with the epic Mahabharat and hence its importance today. Photography inside the temple premises was strictly prohibited, and undercover security officers are posted all over.

Having a brief sight at the four faced Shiv Ling, which we were fortunate to do, required quite a strong physical strength as well as mental patience, because of the huge crowd and very long waiting of about two hours (sometimes much more).

On completion of the temple tour, we were taken for a brief shopping; but it was too tiring and most of us could not do too much except having something to drink and return to the hotel for lunch.

It was only in the afternoon some of us proceeded to do some shopping trip prior to the trekking, including getting money exchange for Chinese Yens (only currency necessary if we need to purchase anything in Tibet) – we were advised most items needed for trekking might not be available en route to Kailash, in Tibet!

# திபெத் பிரவேசம்

## பிரயாண ஆயத்தங்கள்,
## நேபாள-திபெத் நெடுஞ்சாலை அனுபவங்கள்

## நேபாள-சீன நட்புப் பாலம்,
## சீனப் பிரதேசம் (திபெத்) நுழைவு

**ஜூலை 16:**

அதிகாலை வழமையான கிரமங்களை விரைவாக நிறைவேற்றிவிட்டு, எமது யாத்திரைக்குரிய பொதிகளை சரி பார்த்தோம். காலைப் பிரார்த்தனையின் பின் பேருந்தில் திபேத் நோக்கிப் புறப்பட்டோம். எமது குழுவிற்கு இரண்டு பேருந்துகள் ஒழுங்கு செய்யப்பட்டிருந்தன. கைலை பாலா வழமையாக தொழிலில் ஈடுபடுத்தும் அனுபவம்மிக்க நேபாள உதவியாளர் (மலையேறும் அனுபவம் மிக்கோர்) எண்மர் வந்து பொதிகளைப் பேருந்தில் ஒழுங்காக அடுக்கிவைத்தனர். அவர்களில் இருவர், எவரெஸ்ட் சிகரம் ஏறிவந்தவர்கள் என, கைலை பாலா அறிமுகஞ்செய்துவைத்தார். எல்லோரும் மிக்க பண்புடன் பணிவானவர்களாகக் காணப்பட்டனர். பெட்டிகளில் குடிக்கும் சுத்தமான குழைமநீர்ப் புட்டிகள் பெருமளவு



பேருந்து புறப்படுவதற்குத் தயார்

ஏற்றப்பட்டன. வழி நெடுகிலும், எல்லோருக்கும் குடிக்கும் நீர் தேவைப்படுமல்லவா? எவ்வளவு முன்யோசனையுடன் எல்லா ஆயத்தங்களையும் – உடனுக்குடன் தேவைப்படும் மருந்துவகைகளுடன்கூட – கைலை பாலா செய்துவைத்தார்! பணம்கொடுத்து ஏற்படுத்தும் ஏனைய உல்லாசப் பயண ஒழுங்கினர்களைவிட பலபடிகள் மேலான பக்குவத்துடன் எல்லா வசதிகளையும் கவனித்த கைலை பாலாவின் திறமை எப்பொழுதும் வியப்பானதாகவே இருந்தது.

கைலை பாலாவின் "ஓம் நமசிவாய" என்ற கரகோஷத்துடன் ஆரம்பித்து எமது யாத்திரை தொடர ஆரம்பித்தது. வழிநெடுகிலும் தேவார பாராயண ஒலி (குறுந்தட்டின் மூலம்) கேட்கும் வசதியாக ஒரு யாத்திரீகர் உபகரணங்களையும் கொண்டுவந்திருந்தார். நல்ல இனிமையாகவும், ஆன்மீக சிந்தனைகளைத் தூண்டுவதாயுமிருந்தது.

காத்மண்டுவிலிருந்து திபெத்தை நோக்கிச் செல்லும் வழி (நெடுஞ்சாலை!) பெருமளவு மிகவும் குறுகியதே. இந்த நெடுஞ் சாலை "அரனிகோ ராஜமார்க" (Araniko Rajamarga) என




காத்மண்டு › லாசா வழி

அழைக்கப்படும். இந்த நெடுஞ்சாலை புகழ் பெற்ற நேபாள கட்டடக் கலைஞர் அரனிகோ என்பவரது நினைவாகப் பெயரிடப்படது.

ஏராளமான குக்கிராமங்களுக்கூடாகச் செல்லும் இந்த நெடுஞ்சாலை பூராவும் கண்ணைக்கவரும் இயற்கைக் காட்சிகள் நிறைந்தது. காத்மண்டு – நியாலம் பிரயாணத்துக்கு 9 மணி நேரமளவில் செல்லலாம். இடையே நேபாள – சீன எல்லையில் சீன நுழைவுரிமை பெற வேண்டும். இது, யாத்திரைக்குழு ஆகையால், யாத்திரை ஒழுங்கினர் எல்லோருக்குமாகச் சேர்த்து இந்த அனுமதியைப் பெறுவர்.

செல்லும் வழியெல்லாம் எமது குழுத் தலைவர் கைலை பாலா, உயர உயரச் செல்லும்போது ஏற்படக்கூடிய உபாதைகளைத் தவிர்க்கும் பொருட்டு, எல்லோரையும் அடிக்கடி நீர் அருந்தும்படி மிக்க கவனமாக வற்புறுத்தினார். இருந்தும் ஓரிரு சக யாத்திரீகர்களுக்கு வாந்தி, தலைச்சுற்று ஏற்படத்தான் செய்தது. எல்லாவற்றிற்கும் கைலை பாலா ஆயத்தமாகவே இருந்தார். மலை ஏறும்போது ஏற்படக்கூடிய உபாதைகளைத் தடுக்கும்பொருட்டு உட்கொள்ளும் மாத்திரைகளான "டயமொக்ஸ்" (Diamox) தினசரி ஒருதடவை கொடுத்த வண்ணமேயிருந்தார், கைலை பாலா.



நீர்வீழ்ச்சி



நதி

அதிர்ஷ்டவசமாக எம்முடன் ஒரு மலேசிய வைத்தியர் பலவித உபகரணங்களையும் மாத்திரைகளையும் தம்முடன் கொண்டுவந்திருந்தார். மிக்க உதவியாயிருந்தது. உரியவாறு அவ்வப்போது யாத்திரீகரின் தேவைகளை அறிந்து உதவிபுரிந்து பக்கபலமாக யாத்திரை செய்தார். அத்தோடு, தினசரி தேவையான பரிசோதனைகளையும் மேற்கொள்ள அவர் நேரம் ஒதுக்கியிருந்தார்.

அடிக்கடி பெய்த மழையினால் பல இடங்களில் மண்சரிவுகள் ஏற்பட்டிருப்பதை அவதானிக்கக்கூடியதா யிருந்தது. தெய்வாதீனமாக எமது பிரயாணத்துக்கு பெரும் இடையூறொன்றும் இருக்கவில்லை.

பெரும்பாலும் அத்தனை கிராமங்களும் வறுமையைச் சித்தரிக்கும் கிராமங்களாகவே தோன்றின. நெருக்கடிகள் மிகுந்த சாலைகளிலும் மக்கள் சந்தோஷமாக, படபடப்பின்றி நடமாடுவது மேற்கத்திய நாகரீகத்தில் பழக்கப்பட்டோருக்கு பெரும் வியப்பாகவே இருந்தது.

பச்சைக் காய்கறிகளை வண்டிகளில் தள்ளிக் கொண்டு விற்பனவு செய்தலும், மற்றும் பொதி வாகனங்கள் அங்குமிங்குமாக, ஆனால் விபத்துகளேதுமின்றி, சுமுகமாகச் சென்றுகொண்டிருந்ததும் வியப்பான காட்சிகள்; கண்களுக்கும் மனத்திற்கும் குதூகலமானதாகவே இருந்தது. இயற்கை அன்னையின் செழுமை மெச்சத்தக்களவு அமோகமாயிருந்தது.

இவ்வாறு ரசித்துக்கொண்டிருக்கையில், காலை பத்தரை மணிக்கே நேபாளத்தின் சீன எல்லை "கோத்தாரி" எனும் கிராமத்தை அடைந்துவிட்டோம்.

அங்கு ஏற்கெனவே கைலை பாலாவினால் ஒழுங்கு செய்யப்பட்டபடி, மதியபோசனம் தயாரான ஒரு உணவு விடுதியுட் சென்றோம். வாழை இலையில் உணவு பரிமாறப்பட்டது. இலையில் உண்ண முடியாதோருக்குத் தட்டு வழங்கப்பட்டது. நல்ல பச்சைக் காய்கறிகள் கிடைக்குமாகையால், மரக்கறி உணவிற்குப் பஞ்சமேயில்லை. மீண்டும் பாகற்காய்க் கறி, சலாட், ரசம், தயிர் இத்தியாதி... திருப்தியான உணவு.

ஆனால், அடுத்து வரப்போவதை யாரறிந்தார்? கடும் மழையால் தெருவுக்கு குறுக்கும் நெடுக்குமாக எங்கும் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. பேருந்துகளோ நூற்றுக்

கணக்காக வரிசையில் நிறுத்தப்பட்டிருந்தன. அறிந்ததில், எல்லாம் சீன பரிசோதனைக்காக / நுழைவுரிமைக்காகக் காத்திருந்தன என அறிந்தோம்.

மக்கள் கூட்டம் பெருமளவு எதிர்பார்க்கப்பட்டதால், நேபாளப் பகுதியின் அந்தக் கடைசி ஒரு மைலை நடந்தே போய் வரிசையில் இடம்பிடிக்க ஆலோசனை கூறப்பட்டது. நாங்கள் நின்ற இடத்திலிருந்து சீன நுழைவு அனுமதி பெறும் இடம் பெரும் உயரத்திலேயே காணக் கூடியதாயிருந்தது. தெரு "U" போல் வளைந்துபோவதால், அந்தக் கட்டடத்தைப் புகைப்படம் பிடிக்கக்கூடியதாயிருந்தது.

கோத்தாரி (Kodari) *(நேபாள எல்லை)*, ஜங்மு (Zanghmu) *(சீன எல்லை)* என்ற இரு வலையங்களையும் இணைக்கும் "நட்புப் பாலம்" பிரயாணிகள் நிற்க இடமளிக்கிறது. "போட்டே கோசி" (Bhote Koshi) எனும் நதி இப் பாலத்தினடியே ஓடுகிறது. சுற்றிவரக் கம்பீரமாக வீற்றிருக்கும் மலைக்கூட்டம் கண்கொள்ளாக் காட்சிதான்!

திபெத்துக்குள் செல்லுமுன் சீன நாட்டு நுழைவு அனுமதி பெற – கடும் வெய்யிலாகட்டும் கொட்டும் மழையாகட்டும் – இந்தப் பாலத்தில்தான் நின்றாக வேண்டும். இந்த



"போட்டே கோசி" நதி – நட்புப் பாலம் –

இடத்தில் படம் பிடிப்பது கடுமையாகத் தடை செய்யப் பட்டுள்ளது. எனவே, முன்னரே இவற்றை எடுத்துகொண்டது மனத்திருப்தியளித்தது. அந்த நுழைவாயிலுக்கண்மையில் எங்கு திரும்பினாலும் சீனப் படைவீரர் (குள்ளமானவர்கள்தான்) சிலைகள்போல, துப்பாக்கி சகிதம் விறைப்பாக நின்றார்கள். எப்போதும் மிக்க கடுகடுப்பாக, கடினமானவர்களாகவே தோற்றமளித்தனர். அது அவர்களது சுபாவம்போலும். எதாவது கண்டபடி திரிந்தாலோ சிறு சந்தேகமிருந்தாலோ இந்தச் சிப்பாய்கள் போடும் பயங்கரச் சத்தம் அதிர வைக்கும்.



காஸா (சீன குடி நுழைவு – அகல்வு)
பரிசோதனை நிலையம்

ஆனால், திபெத்திய பிரஜைகளுக்கு தனியானதொரு அடையாள அட்டை வழங்கப்பட்டிருந்தது. அதனால், அவர்கள் பெரும் சிரமமின்றி நுழைவு அனுமதி பெறக்கூடியதைக் காணக் கூடியதாயிருந்தது.

இவர்கள், உழைத்துப் பணந்திரட்டும் முகமாக இந்த அட்டையை உபயோகிக்கிறார்கள். நாம் சென்ற சமயம் பாடசாலைகள் விடுமுறையாதலால், பெரும்பாலும் பல்வேறு வயதுள்ள பாடசாலைச் சிறார்களே காணப்பட்டனர். அவர்கள் ஆங்கிலத்தில் அழகாகச் சம்பாஷித்தது கேட்கக் கேட்க சுவாரசியமாயிருந்தது.



நேபாளப் பகுதியிலிருந்து சீனநாடு புகும் வழி




சீனாவின் நாடு உட்புகு அனுமதி வழங்குமிடம்

சில சிறுவர், யாத்திரீகர் சுமந்துசெல்லும் பொதிகளைத் தாமே அக்கரைக்கு எடுத்துச்செல்லும்வரை கொண்டுவந்து தருவதற்கு பணம் பெறுவதில் அதி உற்சாகமாயிருந்தனர். சீனாவில் சின்னஞ்சிறு நேபாள சிறார் பணம்பெறுவதற்காக

வேலை செய்வது அனுமதிக்கப்படுகிறது. பல யாத்திரீகர் (பணம் கொடுத்து) இரக்கத்துடன் இவர்களிடமிருந்து உதவிபெறுகின்றனர். இதற்கிடையே, சில வயதுமுதிர்ந்த மாணவரும் வேறுசிலரும் பணமாற்றம் செய்யும் தொழிலில் ஈடுபட்டுகின்றனர். இவ்விடத்தில், பணமாற்ற விகிதம் விலை மதிப்பு அதிகமாகவேயுள்ளது. இவர்களது நடவடிக்கைகள் நம்பிக்கைதரக்கூடயனவாயில்லை. மேலும், இவர்கள் நட்புப் பாலத்தில் நின்று எந்த வியாபாரத்திலும் ஈடுபட அனுமதிக்கப்படுவதில்லை.

சீன அதிகாரிகளின் அறிவுறுத்தலின்பேரில் ஒவ்வொரு நாட்டினரும் வெவ்வேறு வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தனர். அவரவர்க்கு ஒரே பத்திரத்தில் குழுமுறை நுழைவு அனுமதி கொடுப்பதனாலேயே இம்முறை செயற்படுத்தப்படுகிறது. ஆனால், என்ன காரணத்தினாலோ, ஏறத்தாழ இரண்டுமணி நேரம் உச்சி வெயிலில் எம்மை அந்தப் பாலத்தில் நிற்கவைத்து விட்டார்கள். இதில் உடற்சுகவீனமுற்றோர் இருப்பாராகில், அதோகதிதான். நல்லவேளையாக எமது குழுவில் அம்மாதிரி அசம்பாவிதமேதும் நடைபெறவில்லை.



*காஸா (ஜங்மு) வில் சீன பரிசோதனை நிலையம்*

எமக்கு அனுமதி வழங்கும் நேரம் வந்ததும், சற்று உள்ளே அந்த வளாகத்துள் செல்ல அனுமதிகப்பட்டோம். ஆனாலும், சீனக் கட்டடத்துக்குள்ளே உடனே செல்லவிடவில்லை.

மேலும் ஒருமணி நேரம் வரை நின்றபின்னர் எம்மவர் ஒவ்வொருவராக உள்ளே நுழைந்ததும், கடவுச்சீட்டையும் பார்த்து சரிசெய்து, என்னவோ சீன மொழியில் கூறி, திபெத் பகுதிக்குச் செல்ல அனுமதிக்கப்பட்டோம். இதற்கிடையில், ஒரே அல்லோலகல்லோலம். ஒருவர் கையில் கொண்டுசெல்லும் பொதியை ஊடு கதிர் (ஸ்கான்) மூலம் பரிசோதிக்க வேண்டுமென்றார். யாரும் கவனிக்காமலே சில வினாடிகள் நின்றோம். பின்னர் போகும்படி சைகை காட்டினர். ஒருவாறு, இத்தோடு விட்டார்களே என்ற பெருமூச்சுடன், கட்டடத்தை விட்டு திபெத் மண்ணில் கால் வைத்தோம்.

வந்ததுதான் தாமதம், முன்னர்போல, சிறார்கள் பணமாற்றம் செய்வதிலும் பொருட்கள் விற்பதிலும் அதி உற்சாகமாக உலவித் திரிவதைக் கண்டோம். மிக்க களைப்பா யிருந்த எமக்கு ஒரே தொல்லையாகிவிட்டது. சிலர் நூதனப் பொருட்களை வாங்கத்தான் செய்தனர்.

மக்கள் கூட்டத்தில், எமது குழுவினர் ஒவ்வொருவரையும் கண்டுபிடித்து, திபெத்திய பேருந்துக்குள் ஏற்றுவது, எமது நேபாள உதவியாளர் குழுவிற்குப் பெரும்பாடாகிவிட்டது.

## Kailash: A Spiritual Journey

# Tibetan Experience & the initial stage

Our pilgrimage commenced around 5:30 am on 16th July 2013, following the routine check outs etc. We had to leave our big suitcases at the hotel, having packed the necessary trekking items in the red, numbered, duffel bags (only allowed one for each passenger). Each pilgrim was allowed to take one hold all bag just enough essential items for the day needs.

Our tour organiser Bala ensured that all had taken the necessary routine medications and adequate supply of drinking water for the journey, as keeping the hydration levels is vital when travelling high altitudes.

The two coaches with pilgrims started rolling around 6:30 am., after prayers and breakfast, for the 30 km journey to Nyalam (in Tibet).

The drive from the hotel to the Tibetan border (China) was quite tortuous with elevations slowing down the drive with some passengers feeling "travel sickness" already. However, these minor problems did not stop us enjoying the natural beauty of Nepal with high rise mountains, rivers, winding roads and most importantly happy faces of the villagers on our way to the Chinese (Tibetan) border, in spite of their poor economic status.

The weather was quite clear although we were able to witness the huge damages following heavy rain, earthslips, floods and huge fallen trees, a few days before.

We reached the Nepalese border – Kothari – around mid day where there was a long que of coaches and transport lorries waiting for customs clearance. The Friendship Bridge divides the border between Nepal and China. Zanghmu is the other side of the Friendship Bridge in Tibet, the first point of entry to Chinese land.

The Nepalese, especially from nearby high schools, were involved in selling souvenirs and money exchange – surprisingly speaking good English. Conversations about their lives in Nepal kept us engaged and forget the hardships we had at the border.

We were asked, by the Chinese immigration authorities, to que up according to the country of origin (as per passports) because of the group visas obtained by the tour operators. Only those citizens of Nepal (with special employment card) commute for work in Tibet were allowed without waiting in the que. The border is heavily guarded by the patrolling fierce looking Chinese army.

The Chinese immigration officials, as with any Chinese Government officials we saw, appeared quite tough – hardly any welcoming smile for the tourists. It was a long three hours tortuous passage through the border control. It was a great relief to exit from that building and continue our journey to Nyalam.

# நியாலம் & மலையேறும் பயிற்சி

## திபெத் அறிமுகம், நியாலம் புகுதல், மலை ஏற்றப் பயிற்சி, நியாலக்காட்சி

மாலை 2:30 மணியளவில் புறப்பட்டது எமது பேருந்து. நேபாள – சீன நட்புப்பாலத்தைக் கடந்ததும் இயற்கை அன்னையின் எழில் மேலும் எம்மைப் பெருமகிழ்ச்சிக் குள்ளாக்கியது. சீனப் பரிசோதனை நிலையத்திலிருந்து புறப்பட்டுச் சிறிது நேரத்தின் பின்னர், காட்சிகளைக்கண்டு ரசிக்கவும் இளைப்பாறவும் ஒரு இடத்தில் பேருந்து நிறுத்தப்பட்டது.

இந்த ஜங்மு (Zhangmu) என்ற நகரம் சீனப் பரிசோதனை நகரமாகவே கருதப்படுகிறது. இது படிப்படியாக மலை ஏற்றம் கொண்டதாக, நியாலம் என்ற பேரூராட்சியின் வலயத்தினுள்ளேயே உள்ளது. இப்பிரதேசம், திபெத்தின்




இது திபெத்தின் பூகோள நிலை

ஏனைய பிரதேசங்களைவிட குளிர் சற்றுக் குறைவாக, காத்மண்டு சீதோஷ்ன நிலைபோல இருக்கும். திபெத் நாடு சீனப் படையெடுப்பின் பின்னர் சீனக் குடியரசின் பகுதியாக 1951இல் பிரகடனப்படுத்தப்பட்டது. அதற்கு முன் திபெத் தனிச் சுதந்திர நாடாகப் பல நூற்றாண்டுகள் இருந்தது; பல்வேறு அரசர்களின் ராசதானியாக விளங்கியது. அச்சமயம் வணக்கத்துக்குரிய தலாய் லாமா தலைவராக இருந்தார். அவரை கௌதம புத்தரின் அவதாரமாகவே கருதுகின்றனர். அவரது தலைமையில் திபெத் ஒரு இரக்க உணர்வும் அன்பும் மிகுந்த, உலகிலேயே ஒரேயொரு ஆன்மிக நாடாகத் திகழ்ந்தது. இன்றைய சீனாவில் இந்தப் பண்பு எங்கே? திபெத் மீது சீனாவின் கடுமையான தாக்குதல்களால் தலாய் லாமா இந்தியாவில் தஞ்சம் புகுந்துள்ளார். இன்னும் திபெத்தின் சுதந்திரத்துக்காகப் போராடுகிறார். திபெத் பீடபூமி மாபெரும் செல்வம் மிக்க கனிவளம் நிறைந்தது. எனவே, அப்பேற்பட்ட நாடு சீனாவைக் கவர்ந்ததில் என்ன ஆச்சரியம்?

திபெத்திய முக்கிய பாஷை பெரும்பாலும் பர்மிய பாஷையையொத்தே இருக்கிறதாம். எம்மில் எவருக்காதல் அதன் தாத்பரியம் புரிய வாய்ப்பில்லை என்பதில் சந்தேகமே யில்லை.

முதல் நாள் பிரயாணக் களைப்பாலும், நாம் செல்லும்போது தொடர் மழை பெய்ததனாலும் நல்ல அசதியாயிருந்தது; தூங்கிவிட்டேன். எழுந்திருந்து பார்த்தபோது எமது பேருந்து நூற்றுக்கணக்கான வாகனங்களுக்குள் ஒன்றாக ஒடுங்கிய சாலையோரத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. சக யாத்திரீகர் பலர் அண்மையிலுள்ள களிப்பிடத்துகுச் சென்றுவிட்டதாகவும் அறிந்தேன். இரண்டுமணி நேரமாக எமது பேருந்து நிற்கிறதெனவும் சொன்னார்கள். காரணம் கேட்க விளைந்தபோது, யாரோ ஒரு முக்கிய அரசியற் பிரமுகர் அப்பாதை வழியாகச் செல்வாராம்... அதற்கு இடையூறில்லாதிருக்கத்தான் இந்த நடவடிக்கை என அறிந்தேன்.

சீனாவில்கூட, இந்தியாவில் வழமையாக அரசியற் பிரமுகர்களுக்கு "மரியாதை" கொடுக்கும் காட்சிகள்போல, இருக்கும் இந்த நிலை சற்று ஆச்சரியத்துக்குள்ளாக்கியது. ஆனாலும், பிரயாணிகளை இவ்வாறு சிரமதிற்குள்ளாக்குவது கஷ்டமாகத்தானிருந்தது. எமக்கும் வேறு வழியில்லை.




திபெத்தில் ஜங்மு–நியாலம் வழி (நட்புப் பெருஞ் சாலை)




இயற்கை அழகை ரசிக்குமிடம்

கிராமவாசிகள் பலரும் சீனச் சிப்பாய்களுக்கு மிக்க பணிவுள்ளவர்களாகவே காணப்பட்டனர்.

அந்த முப்பது கிலோ மீட்டர் தூரத்தைக் கடக்க நான்கு மணி நேரம் சென்றது. மாலை 6:30 மணியளவில் நியாலத்தை அடைந்தோம்.

நியாலம் சீன ஆதிக்கத்திலுள்ள திபெத்திலுள்ளது. கடல் மட்டத்திலிருந்து 12,300 அடி (3,750 மீட்டர்) உயரத்தில் உள்ளது: குளிர் கொஞ்சம் கடுமையாகத்தானிருந்தது. மழை தூறியவாறே இருந்தது.

திபெத் எல்லையிலிருந்து நியாலம் பாதை முன்பு பெரும் கஷ்டமானதாம். அதனால் நியாலத்தை நரகத்தின் நுழைவாயில் என ஆங்கிலத்தில் (முன்பு) கூறுவர்.

இப்போது, நல்ல வீதிகளையும், சீமேந்துகொண்டு கட்டப்பட்ட கட்டடங்களும் தகரக் கூரைகளும் கொண்ட நியாலத்தின் காட்சி அதன் அபிவிருத்தியின் பிரதிபலிப்பாகவே தோன்றியது. நாங்கள் வந்தடைந்த சுற்றுலாப் பயணிகள் விடுதியும் அண்மையில் புதிப்பிக்கப்பட்டதாயும் அறிந்தோம். அது காத்மண்டு ஐந்து நட்சத்திர "மல்லா" விடுதியிலும் பார்க்க மிகவும் தரத்தில் குறைவாயிருந்தாலும், வசதி ஓரளவு திருப்தியாகத்தானிருந்தது. எமது உறவினருடன் கைத்தொலைபேசி மூலம் பேசும் வாய்ப்பும் கிட்டியது.

போகப்போக இந்த தொலைபேசி வசதி அருகிவிடும் எனவும் அறிந்துவைத்தோம்.

வழமையான கிரமங்கள் பூரணமாகியபின், எமது இருப்பிடங்களுக்குள்சென்று சற்று இளைப்பாறினோம். நாட்பூராவும் பல்வேறு இடையூறுகளைக் கடந்துவந்தபின் நால்லதொரு ஸ்நானம். அதன்பின் மாபெரும் ஆறுதலா யிருந்தது. பக்கத்தேயிருந்த சக யாத்திரீகரொருவர் எமது திருப்தியைக் கேட்டு, போகப்போக இந்நிலை பெரிதும் மாறுபடும். யாத்திரை என்றால் பல்வேறு சந்தர்ப்பங்களையும் வசதிகளையும் எதிர்நோக்கிப் பொறுமையுடன் இறை சித்தனையோடு யாத்திரையை நிறைவுசெய்வதே பிரதானம் என்றும் நினைவுறுத்தினார்! எமக்கு இதன் எதிரொலிப்பு, யாத்திரையின்போது பின்னர் நன்கு தெளிவாகியது.

அதிசயிக்கத்தக்கவாறு சூடான இரவு போசனமும் தயாராகி, யாவரும் திருப்தியுடன் உண்ண ஆரம்பித்தனர். நேபாள உதவியாளரின் செயற் திறன்கள் அதிசயிக்கத் தக்கனவே. ஆனாலும், எனது உண்ணும் ஊக்கம் மிகவும் கட்டுப்படுத்தப்பட்ட மாதிரி உணர்ந்தேன். இருந்தும் ஒருவிதமாக சிறிதளவு உள்ளே தள்ளிக்கொண்டேன். அதன் விளைவு அன்று பின்னிரவே தெரிந்தது. வாந்தியும் வயிற்றோட்டமும்!!!



நியாலம் ஹோட்டல்

ஜூலை 17:

அதிகாலை ஐந்து மணியளவில், உண்ட உணவு அனைத்தும் ஜீரணிக்காது வாந்தியாகவே வெளியே எறியப்பட்டுவிட்டது. பின்னர் சற்று ஆறுதல். இருந்தும், கைவசம் இருந்த மருந்துகளும் நன்கு பயனுள்ளதாகின.

காலையில் உணவே பிடிக்கவில்லை. அன்று காலை மலையேறும் பயிற்சியும் ஒழுங்குசெய்யப்பட்டிருந்தது. எனவே, அதை மனதிற்கொண்டு, இரு ரொட்டித்துண்டுடன், பாலற்ற தேநீரும் தேனும் உட்கொண்டேன். ஒருவாறு இந்தக் கிரியைகளும் நிறைவுற்றன.

ஏற்கெனவே திட்டமிட்டபடி உடம்பைப் புதிய சூழலுக் கேற்ப இணக்குவிற்பதற்கான மலையேற்றப் பயிற்சிக்குத் தயாரானோம். திடீரென, விடுதி முன்றலில் ஒரு மேஜை அலங்கரிக்கப்பட்டவண்ணம் தோன்றியது. தொடர்ந்து மெழுகுவர்த்தி, கேக், பூக்கள் வந்திறங்கின. ஆச்சரியப்படவைக்க இது ஒரு உபாயம். அன்று கைலை பாலாவின் அறுபதாவது பிறந்ததினம் என்பதை அறிய மிக்க மகிழ்ச்சியாயிருந்தது.

எல்லோரும் ஆரவாரத்துடன் பிறந்தநாள் வாழ்த்து இசைக்க, கைலை பாலா கேக்கைத் துண்டித்து அகமகிழ்ந்தார். எல்லோருக்கும் கேக் வழங்கியபின், மலை ஏறுதற்குப் புறப்பட்டோம்.



கைலை பாலாவின் பிறந்த நாள்

நியாலத்தில், 3,700 மீற்றர் உயரத்திலும், எனது உதிரத்திலுள்ள பிராண வாயு, நாடி இயக்கம் எல்லாம் நல்ல நிலையிலிருப்பதாக, சோதனைமூலம் அறிய மிக்க ஆறுதலாயிருந்தது.

நியாலம் ஹோட்டலின் பக்கமாயுள்ள மலையிலேயே இந்தப் பயிற்சி நடைபெற்றது. வெற்றிகரமாக ஏறத்தாழ அறுநூறு மீற்றர் உயரத்துக்கு ஏறி இறங்கினோம்.



நியாலம் மலையேறும் பயிற்சியில் யாத்திரீகர்

திரும்பியதும் இளைப்பாறிவிட்டு மதிய உணவு அருந்தினோம்.

நியாலம் பார்க்கும் ஆவலில், நியாலம் கடைத்தெருவுக்கு நடையிற் சென்றோம். சுமாராக துப்புரவான வீதிகள்.



நியாலம் தெருவில் காட்டு எருமைகள்



"யாக்"கின் யாத்திரை! – நியாலம்

கடைகளில் பலவித பொருட்களும் நியாய விலையில் கிடைக்கக் கூடியதாயிருந்தன.

ஆங்காங்கே ஆடுகள், மாடுகள், ஆங்கிலத்தில் யாக் எனப்படும் காட்டெருமைகள் திரிவதையும் பார்த்தோம். பல்வேறு கடைகள், பெரும் சினிமாக் காட்சிசாலைபோன்ற கட்டடம், சுற்றுலாப் பயணிகளுக்கு உகந்த விடுதிகள் இத்தியாதி கொண்டுள்ள இந் நகரம் உண்மையிலேயே மிக்க வசதியானோர் வதியும் நகரம்போலத் தோற்றமளித்தது.



நியாலதிலுள்ள நதி



நியாலத்தில் மலைக்காட்சி

சுற்றுலாப் பயணிகள், யாத்திரீகர் வருகையால் இதன் செழிப்பு நன்கு பேணப்படுகிறது. எனினும் ஆங்கிலம் ஓரளவுதான் பிரயோசனப்படும். பெரும்பாலும் திபெத்திய மொழிதான் பேசப்படுகிறது. கைப்பாஷையும் கணனியும் எமக்கு நன்றாகவே உதவின. தேவையான சில சில்லறைப் பொருட்களை வாங்கியபின் விடுதிக்குத் திரும்பினோம்.

தொலைபேசித் தொடர்பு திருப்தியாயிருந்தது. எனவே, உறவினருடன் சற்றே அளவளாவியபின் இரவு போசனம். பகல் பூராவும் பட்ட அனுபவங்களைப் பரிமாறிக்கொண்டோம். பின்னர் களைப்பு மிகுதியால் அயர்ந்து துயில் கொண்டோம்.

# NYALAM AND TREKKING TRAINNG

The journey from the Friendship Bridge towards Nyalam was quite enjoyable with miles and miles of natural beauty alternating with town life in places. These range of mountains, rivers and waterfalls are under the Nyalam District of Tibet.

Although Tibet has been under the control of China mainland since 1951, it remains a spiritual centre with monasteries all the way wherever we went. It was an independent country under Dalai Lama, the spiritual leader and revered by Tibetans as incarnation of Lord Buddha. Chinese political strength is quite strong in Tibet as evidenced by numerous check points, armed police and special road blocks for ministers en route.

Structural Developments in Nyalam are quite obvious with number of new cemented buildings and Chinese Communist Flags all over along the main roads and buildings, even on the roof of monasteries. The climate in Nyalam city was colder than that near the Friendship Bridge.

No sooner we reached Nyalam Hotel a hot dinner was ready, even though most of the members of our group were not quite prepared for it with low appetite and feeling of sickness. This point in our pilgrimage was quite important for acclimatisation as we continued our journey uphill.

A brief trekking training was arranged on the following morning after breakfast, and it was quite manageable in spite of the symptoms of high altitude (at 3,700 metres). My blood oxygen concentration was found to be satisfactory on oximetre testing by a fellow member of our group, a professional family physician and I felt reasonably well before we recommenced our journey towards the next stop, Saga.

# நியாலம் & ஸாகா பிரயாணம்

பாரிய மலை ஏற்றப் பிரயாணம், மிலறீப்பா தியான மண்டபம், திபெத்திய வழமை, ஸாகா அடைதல்

**ஜூலை** 18:

*அதிகாலை ஆறு மணிக்கே எழுந்து காலைக்கடன்களை முடித்தபின்னர், ஏழரை மணியளவில் உணவு ஆயத்தமானது. ரொட்டியுடன் தேனைத் தடவி அருந்தினேன். எனது உடல்நிலை முற்றாக நன் நிலைக்குத் திரும்பவில்லை. பிரயாணத்துக்கு ஏது தடையின்றி இருக்க வேண்டி இறைவனைப் பிரார்த்தித்த வண்ணமே இருந்தேன். மாத்திரைகளும் உதவின. எதற்கும் ப்ராப்தம் வேண்டும் – அவன் அருள் வேண்டும். கிடைக்கும் என்ற நம்பிக்கை இருந்தது.*

*பொதிகளை எல்லாம் ஏற்றியபின், பேருந்து கிளம்ப பத்தரை மணியாகிவிட்டது.*

*முதலில் நியாலத்திலிருந்து மேற்கு திபெத் நோக்கிய மிகவும் ஏற்றமான பாதை. கிழக்கே நோக்கிப் போகும் பாதை, திபெத்திய தலைநகர் லாசாவை* (Lhasa) *நோக்கிச் செல்லும். 5,124 மீற்றர் உயரமுள்ள "லா லுங்" என்னுமிடம்வரை அதிமிகு ஏற்றமான பேருந்துப் பிரயாணம். வழியில் "சிஷபங்கம" ("கோசைனாதன்" எனவும் அழைக்கப்படும்) தோற்றமளித்தது. கம்பீரமாகத் தோற்றமளிக்கும் இந்த மலை உலகில் பதினான்காவது உயரமான மலை எனக்கொள்ளப்படுகிறது. தொடர்ந்தும் சுற்றவர எங்கும் அழகிய மலைக்காட்சிகள் கண்களைக் கவர்ந்தவண்ணமே இருந்தன. பிரமபுத்ரா நதியைக் கடந்தபின், இப்பாதை "சாகா"* (Saga) *என்னுமிடத்தை நோக்கிக் கீழே இறங்கும்.*

வழியில் (நியாலத்திலிருந்து பதினொரு கிலோமீற்றர் தொலைவில்) முக்கியமானதொரு தலத்தையும் கண்டோம். அதுதான் உலகப் புகழ்பெற்ற திபெத்திய ஞானி மிலறீப்பா தியானத்திலிருந்த குகை. இந்த யோகியைப் பற்றி ஏற்கெனவே ஓரளவு அறிந்தமையால், இந்த புனித ஸ்தலத்தைப் பார்க்க மேலும் ஆவல் மேலிட்டது.

மிலறீப்பா திபெத்திய கலாசாரத்துள் இரண்டறக் கலக்கப்பட்டவர். அவர் மனிதகுலத்தின் ஆன்மீக முன்னேறத்துக்காக எண்ணற்ற இடையூறுகளைச் சந்திக்க நேரிட்டது. அவரது சரிதம் மிக மிக நீண்டது.

மிலறீப்பா பிறந்த வருடம் *1052*. இவரது இயற் பெயர் "தொபாகா" (இதன் அர்த்தம்: 'கேட்க இனிமையானது'). இவரது குடும்பம் பருத்தி விற்பனையாளர் – இதனாற் போலும், பின்னர் மில–றீப்பா என்ற காரணப் பெயர் கொண்டார். (மில என்றால் பருத்தி உடை அணிந்த). குடும்பப் பிரச்சினைகள் மிகுந்ததால், அவர் வேறிடஞ்சென்று தனது இனிமையான பாட்டுத் திறமையினால் ஊதியம் பெற்று, தனித்து வாழ்ந்தார். பின்னர் லாமா (ஞானி) ஒருவரைச் சந்தித்து ஆன்மீக சக்திகளால் கவரப்பட்டு, தியான மார்க்கத்தில் வாழ்நாளை வகுத்தார். சக்திமிகு வேதாந்தி. ஞானியும் திபெத்திய மொழிபெயர்ப்பாளருமான மார்ப்பா என்பவரின் வழியில் கலந்து, பௌத்த ஆன்மிக சிந்தனைகளைக் கற்று, அனுபவித்து, *1135*இல் ஞானநிலை எய்தினார்.



மிலறீப்பா குகைக்கு மேலே வேல் போன்ற சிலை.



மிலறீப்பா குகைக்கு மேலே சீனக் கோடி



மிலறீப்பா நிஷ்டையிலிருந்த குகை

குகைக்கு வெளியே நின்று பார்த்தால், சுற்றவர அதி உயர்ந்த மலைக்கொத்துக்கள், கீழே ஒரு நதி. பெல்கயே லிங் (Pelgye Ling) எனப் பெயருள்ள விகாரை / மடாலயம் / தியான மண்டபம். உள்ளே, அந்த ஞானி தியானத்திலிருந்த குகை, அவரது அடிச்சுவடு ஆகியவற்றைப் பார்வையிட்டபின், தியான மண்டபத்துக்குப் போய்ச் சிறிது நேரம் தியானத்தில் ஈடுபட்டோம். சுவர்களில் வரையப்பட்ட ஓவியங்கள் பல இந்தியப் பண்பாட்டையே பிரதிபலிப்பன. அம்பாள் (ஸ்ரீதேவி என அந்நாட்டவர் அழைப்பர்) ஒன்றும் காணப்பட்டது. இந்த தெய்வம் காவல் தெய்வமாகக் கருதப்படும். சுவர்களில் வரையப்பட்டிருந்த சித்திரங்களைப் பார்த்து அறிந்துகொள்ள பல மணி நேரமாகலாம். "ஓம் மணிபத்மே ஹூம்" என்னும் மந்திரந்தான் ஜெபம்போல சதா உச்சரிக்கும் மந்திரமாம். இந்தியாமீது திபெத்தியர் கொண்டுள்ள அபிமானத்துக்குக் காரணம் அங்கு எடுத்துச் செல்லப்பட்ட பௌத்தமதமேயாம். பௌத்தமதத்தின் அதிசிறந்த அம்சங்களெல்லாம், சரித்திர காலத்துக்கு முந்திய இந்துமதத்தைச் சார்ந்தவையே என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும்.

வெளியேகூட, கூரையில் வேல்போன்ற உருவச்சிலையும், நந்திகள் போன்ற இரு சிலைகளும் காணப்பட்டன (படத்தைப் பார்க்க). இந்து–பௌத்த உறவுக்கு இதவும் ஒரு உதாரணமோ என்ற சிந்தனை எனது மனதைக் கிளறியது.



திபெத்தியச் சிறுவர் (சாக்லேட் மகிழ்ச்சி)

வெளியே வரும்போது, ஏறும் படிகளில் திபெத்தியச் சிறுவர் புன்னகையுடன் மகிழ்ச்சி ஆரவாரஞ்செய்து எம்மை வரவேற்பதுபோல் காட்சியளித்தனர். அவர்கள் சுற்றுலாப் பயணிகளுக்கு பழக்கப்பட்டவர்கள்போலும். எம்மவர் சிலர் இதனை தெரிந்துவைத்துக்கொண்டு, "லண்டன்" சொக்லேட் கொடுத்து அவர்களைத் திருப்திப்படுத்தினர்.

திரும்பிவரும்போது தென்பட்ட ஒரு காட்சியையும் பகிர்ந்துகொள்ள அவா. எம்மூரில் முன்னர் உபயோகித்தது போன்ற விராட்டிகள் கற்சுவர்கள்மேல் காயவைக்கப்பட்டிருந்தன



மிலறீப்பா குகையின் வழியில் குடிசை
(விராட்டிகள் காய்கின்றன)

(படத்தில் பார்க்கவும்). இவை அங்கு பெருவாரியாக வளர்க்கப்படும் காட்டெருமைகளின் சாணத்திலிருந்து தயாரிக்கப்பட்டவை. வருடம் பூராவும், எரிபொருளாக இது உபயோகிக்கப்படும். காட்டெருமைகளின் பால் குடிக்கவும், தேநீருக்கும், நெய் தயாரிக்கவும், அதனது மாமிசம் உணவாகவும் பயன்படும். உரோமம் மிக நீண்டதாயுள்ளதால், உடைகள் தயாரிக்கவும் உபயோகப்படும்.





காட்டெருமை

ஈழத்து யாழ்வாசிகளுக்கு பனைமரம் எவ்வாறு கற்பகதரு போலப் பயன்படுமோ அவ்வாறே திபெத்தியர்க்குக் காட்டெருமை பயன்படும் போலும். மேலும் இதுபற்றி பின்னொரு பகுதில் கவனிப்போம்.

திபெத்தியக் குடிசைகள் பெரும்பாலும், கல்லாலும் மண்ணாலும் கட்டப்பட்டிருக்கின்றன. கூரைக்கு மரம் குச்சி



நியாலம் – ஸாகா எல்லையில் – பிரார்த்தனைக் கொடிகள்

போட்டு களிமண்ணால் மூடியிருக்கின்றனர். இன்னும் சிலர், மலைச் சாரலில் குகை போன்று குழி வெட்டி வசிப்பர்.

ஆனால், தற்காலத்தில், சீனாவின் ஆட்சியில், பல கற்களாலான சுவர்கள், தகரக்கூரைகள் கூடிய கட்டிடங்கள் எழுந்தவண்ணம் இருப்பதையும் காணக்கூடியதாயிருந்தது.

வழிநெடுகிலும் பிரார்த்தனைக் கொடிகள் பறப்பது சர்வசாதாரணம். தொடர்ந்து பேருந்து ஸாகா (Saga) நோக்கிப் பயணித்து ஆறரை மணியளவில் ஸாகா விடுதியை அடைந்தது.

ஸாகா (திபெத்திய மொழியில் "சந்தோஷ நகர்") யாத்தி ரீகருக்கு முக்கியமானதொரு தரிப்பிடமாகும்.

இது சீனப் போர்ச் சிப்பாய் நகரம் எனவும் குறிக்கப்படும். எங்கு திரும்பினாலும் போர்ச் சிப்பாய்களோ அல்லது அவர்களது அரண்களோ தோற்றமளிக்கும். பிரமபுத்ரா நதி இந்த நகரத்தைச் சுற்றியுள்ளது.

இந்த ஸாகா ஹோட்டலில் நால்வருக்கு ஒரு தங்குமிடம் எனும் பிரமாணத்தில் வசதி தரப்பட்டது. உரியவாறு செய்யவேண்டிய நடைமுறை ஒழுங்குகளை முறைப்படுத்தி, உடைமைகளைச் சரிபார்த்து விட்டு, சற்றே இளைப்பாறினோம்.



ஸாகா நகரம் (பிரமபுத்ரா நதியுடன்)




ஸாகா விடுதி

வரவேற்பு முகப்பில் எனது பெருமதிப்புக்குரிய அருளாளர் சற்குரு ஜக்கி வாசுதேவ் அவர்களின் பதாகை தோற்றமளித்தது ஆச்சரியமாயும் சந்தோஷமாயுமிருந்தது.

பின்னர் நண்பர் சுவாமியுடன் கடைத்தெரு சென்று மேலும் சில முக்கிய பொருட்களை வாங்கினோம்.

இத் தருணம் தொலைபேசித் தொடர்பு அறவே அற்றுப்போய்விட்டது.

கைலையில் அதிஉயரத்தில் செல்லும்போது பிராணவாயு குறைபாட்டால் ஏற்படக்கூடிய சுவாசக் கஷ்டங்களை சமாளிக்கும் பொருட்டு பலரும் பிராணவாயுக்கலன்கள் தேவை எனப் பதற்றப்பட்டனர். கற்கண்டு, வாதாம் பருப்பு போன்ற சில சிறு தின்பண்டங்கள், முன்னேற்பாடாக கையிற் கொண்டுசெல்லக்கூடிய பிராணவாயுக் கலன்கள் ஆகியன கடையில் வாங்கியவற்றில் உள்ளடங்கின.

தெருக்கள் பல திருத்த வேலைகளால் நடப்பதற்கு இடையூறாகவே இருந்தன. மழையுங்கூட இந்த உபாதையைப் பெருக்கின. தொடர்ந்து நடந்துசெல்வது உசிதமானதாகத் தெரியவில்லை. எனவே விடுதிக்குத் திரும்பினோம்.

அன்றைய பொழுது இனிதே பூரணமாகியது.

## Kailash: A Spiritual Journey

# NYALAM – SAGA JOURNEY

July 18, 2013 marked our journey towards Saga, another routine stop for acclimatisation. Breakfast with bread and honey was quite satisfying for my travel sickness.

This journey towards Saga (west) was uphill (4,200 metres) with a distance of 232 km by coach. Hence, the driving was expected to be somewhat difficult even for an experienced driver. The road in its opposite direction (east) was to Lhasa, the capital city of Tibet.

By this time, almost all of the members of the group appeared quite happy with their travel sickness settling down and were able to enjoy the stunningly beautiful part of our journey to Kailash.

I was very fortunate to visit the meditation caves of the great spiritual leader, Mystic Milarepa situated near the main road, about 11 km from Nyalam. This cultural monument had number of relics and pictures on the walls which, I felt, was a good relationship between authentic Indian (Hindu) and Tibetan (Buddhist) cultures.

Yaks, the most indispensable animals in Tibet, made frequent appearance all along our way during the travel from Nyalam to Saga. Yaks are of vital importance for Tibetans as it provides numerous benefits that include their milk, meat,

fuel, shelter etc. including the most important of all – transport vehicle! Yaks have three times more red blood cells than normal cows – a factor that enables Yaks to thrive in very high altitudes. Also, the structure of its haemoglobin is similar to that of foetal haemoglobin & a factor that makes Yaks adaptable to live under low oxygen concentrations in the environment.

The natural surrounding with tall mountains and river Pelgye Ling was astonishing. Adding to this, the village life depicted the ancient Tibetan village culture – akin to that of Indian Villages. We had adequate time to entertain this memorable village on our way to Saga, and to have some communication with the village children – a memorable and very satisfying feature during our pilgrimage to Holy Kailash.

# மானஸரோவர்

## மானஸரோவரை நோக்கி, ஏரியும் சுற்றாடலும், ஆராதனை

**ஜூலை** 19:

அதிகாலை சாதாரணமாகவே விழித்தெழுந்து காலைக் கடன்களெல்லாம் செய்துமுடித்தேன். எனது உடல்நிலை மனத்திடத்தினால் தொடர்ந்து பிரயாணஞ்செய்ய ஊக்கமாயிருந்தாலும், தளர்ந்திருப்பதாகவே உணர்ந்தேன். வாந்தியெடுக்கும் உணர்வும் தீர்ந்தபாடில்லை. உதவியாளரின் துணையுடன் "ஹோர்லிக்ஸ்" தயாரித்துப் பருகினேன். அத்தோடு, உப்பு – "குளுக்கோஸ்" கலந்த பொடியையும் கைவசம் கொண்டுசெல்ல ஆயத்தமானேன்.

மேலும், இன்றுதான் அதிநீண்ட பிரயாணமெனவும் தெரிவித்திருந்தார்கள். கைலைசவாசனின் கருணை கிட்டும் என்ற நம்பிக்கையில் அவனை மனதிற் தொழுதவாறே பிரயாணத்துக்கு ஆரம்பமானோம்.

கைலை பாலாவின் வேண்டுகோளுக்கிணங்க, யாவரும் உரியவாறு "டயமொக்ஸ்" முதலிய மாத்திரைகளை உட்கொண்டோம். போதியளவு குடிக்கும் நீர், புட்டிகளில் சேகரிக்கப்பட்டு ஆயத்தமாயிருந்தன.

பேருந்துகள், சரியாக ஒன்பது மணிக்கு, 4,500 மீற்றர் உயரமுள்ள பர்யாங் நகரை நோக்கி 285 கிலோமீற்றர் பயணத்தை ஆரம்பித்தன.

தொடர்ந்து திபெத்திய மலைகளும் பீடபூமியின் இயற்கை வனப்பினையும் ரசித்தவாறே பர்யாங் (Paryang) என்ற இடத்தில் முக்கியமானதொரு பௌத்த மடலாயத்தை (டாதுன் மடாலயம்) அடைந்தோம்.



டாதுன் மடாலயம் – தெருவிலிருந்து



டாதுன் மடாலயம் – வழி



டாதுன் மடாலயம் – உட்செல்லும்போது

இந்த மடாலயம் பழமை வாய்ந்ததும் பரப்பளவிலும் மிகுந்ததாயுமிருந்தது. திபெத்திய மடாலயங்களில் என்னைக் கவர்ந்த இரண்டு – ஒன்று பிரார்த்தனைக் கொடிகள் மற்றது பிரார்த்தனை உருளைகள்.



டாதுன் மடாலயத்தின் முன்னர் எமது குழு



திபெத்திய பிரார்தனைக் கொடிகள்



பிரார்த்தனை உருளைகள்

இமாலயப் பிரதேசத்துக்கே உரித்தான இப் **பிரார்த்தனைக் கொடிகள்,** அன்பு, ஆன்மிகம், சமாதனம் இவற்றை ஊக்கும் பொருட்டே உபயோகப்படுத்தப்படுகின்றன. பிரர்த்தனைகளும் மந்திரங்களும் பொதிக்கப்பட்ட இக்கொடிகள் வெள்ளை, மஞ்சள், சிகப்பு, பச்சை, நீலம் ஆகிய வர்ணங்களில் செய்யப்படுகின்றன. கொடியின் மத்தியில் பண்டைய திபெத்திய கிராமக் கலாசாரத்தையொட்டிய ஒருவகைக் குதிரையின் படமும், சுற்றி நான்கு மூலைகளிலும் சிங்கம், புலி, கருடன், சீனப் பாரம்பரிய பறக்கும் நாகம் ஆகியவற்றின் படங்களும் வரையப்பட்டிருக்கும். இந்நான்கும் அறிவு, பலம், நம்பிக்கை, களிப்பு ஆகிய நான்கு குணங்களையும் சித்தரிப்பனவாம். குதிரை அன்புக்கும் பரிவுக்குமுரிய சின்னம். வர்ணங்கள் ஐந்தும் பஞ்ச பூதங்களைப் பிரதிபலிப்பன.



**பிரார்த்தனை உருளைகள்** மஹாயான பௌத்தம் எழுச்சியுற்ற காலத்தில் நாகார்ச்சுனன் என்ற யோகியால் உருவாக்கப்பட்டது. கைக்கு அடக்கமானதாக ஒரு வகையும், மற்றது சுவரோரங்களில் மாட்டிவைத்து உருட்டக்கூடிய பெரிய உருளைகளாயும் கிடைக்கும். இவை வலது பக்கமாகச் சுழற்றப்படும். பித்தளை போன்ற உலோகத்தினால் செய்யப்பட்ட இவற்றைச் சுற்றி சக்திமிகு மந்திரங்கள் எழுதப்பட்டிருக்கும். இவை அன்பு, பரிவு, விவேகம் ஆகியவற்றை விரைவாகவும் சுலபமாகவும் மக்களுக்கு ஊட்டக்கூடிய உபாயமாக இருந்தது. இம்மந்திரங்கள் திபெத்திய மணி மந்திரங்கள் எனப்படுவன. எனவே, இந்த உருளைகள் மணிச் சக்கரங்கள் எனவும் அறியப்பட்டன.

டாதுன் (Dhatun) மடாலயத்தைத் தரிசித்தபின், மானஸரோவர் (மானசரோவர் எனவும் அழைப்பர்) வாயிலை நோக்கிப் பயணமானோம்.



மானசரோவர் வாயில்

தொடர்ந்து அழகே உருவான – ஆங்காங்கே பனிபடர்ந்த – மலைத்தொடர்கள். பரந்தவெளிகள். கால்நடைகள் அப்பப்போ தென்பட்டன. தொலைவில், சூரிய ஒளி சக்திவாங்கும்

தட்டைகளால் (solar panels) அடையாளமிடப்பட்ட – குடிசைபோன்ற வதிவிடங்களும் காணப்பட்டன.

இடையில் இரண்டொரு தடவை சிரமபரிகாரம், சாரதி புகைப்பிடித்தல் போன்றவற்றிற்காக பேருந்து நிறுத்தப்பட்டது.

மாலை ஆறு மணியளவில் மானஸரோவருக்கு நுழையும் பரிசோதனை நிலையத்தை அடைந்தோம். ஒரு சுங்கத் திணைக்களம்போலத் தோன்றிய ஒரு சிறு கட்டடத்தில் எல்லா யாத்திரீகர்களும் தங்கவைக்கப் பட்டனர். சீனா *1951*இல் திபெத்தைக் கைப்பற்றிய பின்னர் பல வருடங்களாக வெளிநாட்டவர் எவரையும் இப்பகுதிக்காப்பால் அனுமதிக்கவில்லையாம். சுற்றுலாப் பயணிகளுக்கு சில அறிவித்தல்கள் மஞ்சள்நிறப் பலகையில் சீன மொழியிலேயே பெருமளவு எழுதப்பட்டிருந்தது. இதில் பயணிகளின் அடையாளங்கள் சரிபார்க்கப்படும். எமது குழுவிற்குப் பொறுப்பான கைலை பாலா எல்லோரது கடவுச்சீட்டுகளையும் கொண்டுசென்று விபரங்களைக் கூறி அந்தப் பணியை நிறைவேற்றினார். இதற்கு ஒரு மணி நேரத்துக்கு மேலாகிவிட்டது. உடல்நிலை சற்று பலவீனமாயிருந்ததால் இந்த ஒருமணி நேரம் காத்திருத்தல் மிகக் கொடுமையாகத்தானிருந்தது. உடலும் சோர்ந்து – உயிரும் சோர்ந்திருந்தது. "கடயவனேனை ஆண்ட கருணை உடையவனே! தளர்ந்தேன், என்னைத் தாங்கிக்கொள்" என உளமார வேண்டி நின்றேன்.

இத்தனை இடர்களுக்கிடையே, சீன அரசாங்கத்தின் கட்டளைப்படி, பேருந்துகள் இவ்விடத்தைவிட்டு மானஸரோவர் பகுதிக்குப் போகமுடியாது தடை. சீனப் பேருந்துகளே அனுமதிக்கப்படும் என்பதயும் அறிந்து மேலும் ஆண்டவன் அருள் வேண்டி ஆராதித்தேன். இந்தச் சீனக் கெடுபிடி ஏனோ தெரியவில்லை. அதையும் யாத்திரை ஒழுங்கினர் நேர்த்தியாகச் செய்திருந்தனர். எமது உடைமைகளெல்லாம் உரியவாறு சீனப் பேருந்துகளில் ஏற்றப்பட்டன.

பேருந்து புறபட்டு ஒருமணி நேரத்துள் தொலைவில் பிரார்த்தனைக் கொடிகள் தென்பட்டன. ஒரு தடாகமும் தோன்றியது. ஆஹா அதுதான் மானஸரோவர் – பெருந்தடாகத்தைக் கண்டதும் பெருமளவு மகிழ்ச்சியாயிருந்தது. இருந்த உடற் சோர்வு எங்கு போனதோ தெரியவில்லை. புத்துயிர் பெற்று உற்சாகம் மேலிட்டது.

பேருந்து பெரும்பாதை வழியாகச் சென்று வசதியானதொரு இடத்தில் தரிக்கப்பட்டது. தொடர்ந்து வீசிய காற்றினால், குளிரோ கடுமையாகத்தானிருந்தது, எனினும், மான ஸரோவரைத் தொடும் அவா விட்டுவைக்கவில்லை. மெதுவாக இறங்கி, தீர்த்தத்தைத் தொட்டோம். ஜில்லென்ற ஐஸ் தண்ணிதான். முதலில் குளத்துள் இறங்க யாரையும் கைலை பாலா ஊக்கமளிக்கவில்லை. யார்யாருக்கு குளிர் ஒத்துப்போகுமோ என்ற அச்சம் போலும். இருந்தும் நாங்கள் சிலர் கரையிலிறங்க முயற்சித்தோம். கஷ்டமாகத்தானிருந்தது. எமது வழமையில் எதற்கும் ஒரு விதியுண்டு. குளிக்க





யோகர் சுவாமி பக்திமான் – குருபாதணி பூஜை

இயலாத பட்சத்தில் நீரைத் தலையில் சிறிது தெளிக்கலாம் (ப்ரோக்ஷணம் எனவும் கூறுவர்). இது சில சமயங்களில் குளிப்பதற்குச் சமானம். தீர்த்தத்தைப் பருகி, தலையில் மானசரோவர் தீர்த்தத்தை தெளித்துக் கொண்டேன். ஒருவர் மட்டும் அரையில் காற்சட்டைமட்டும் அணிந்துகொண்டு கைகளில் எதோ ஒன்றை எடுத்துக்கொண்டு தடாகத்தில் இறங்கினார்.

அது அவரது குருவான அமெரிக்கர் சுப்ரமண்யம் சுவாமி அவர்களின் பாதணி என அறிந்தேன். அந்த அமெரிக்கர் யாழ்ப்பாணம் யோகர் ஸ்வாமியின் சீடராவார். அந்த அன்பர், தொடர்ந்து பக்தி மேலிட, பாத பூஜை செய்தார். இக்காட்சி எனது அடிமனத்தில் ஆளப்பதிந்துவிட்டது.

இதைப்பார்த்த சில இளவயதினரும் தீர்த்தத்தில் முண்டுவதற்குக் குதித்தனர். அதிக நேரம் நீருக்குள் நிற்கமுடியவில்லை.



கைலாசத்தை நோக்கி மானஸரோவர் பூஜை

கைலை பாலாவும் இன்னும் சில யாத்திரீகரும் இணைந்து மானஸரோவர் பூஜைக்கு ஆயத்தப் படுத்தினர். விபூதி, கற்பூரம் இத்தியாதி கைவசம் கொண்டுவந்திருந்தனர். சிவபுராணம் படித்து, தேவாரங்கள் பாடி, சிறிய பூஜை சுருக்கமாக நிறைவேற்றப்பட்டது.

மானஸரோவருக்கு சீன/திபெத்திய மொழியில், "மபாம் யும்கோ" (Mapam Yumco) என்பர்.

பக்கத்திலிருந்த இராவணன் ஏரி தாது உப்புக்கள் பலவகை இருப்பதால் அருந்தத் தகாத, உயிரினமெதுவும்




மானஸரோவர்
அறிவித்தற் பலகை

வாழத்தகாத நீரைக் கொண்டுள்ளது எனவும் அறிந்தோம். பிறை வடிவமான "ராக்ஷஸ் டல்" எனப்படும் இராவணன் குளம் மானஸரோவருக்கு எதிரே (மேற்குப்புறமாக) உள்ளது. இதன் பரப்பளவு 250 சதுர கிலோ மீற்றர்.

மானஸரோவர் என்பது மனது எனும் பொய்கை. நல்லோர் மனம் ஸ்தூலமாயிருப்பது மானஸரோவர் என்றும் – தீயோரது மனதின் அமைப்பாயுள்ளது ராக்ஷச குணமெனவும் கொள்ளலாம். மானஸரோவரையும் ராக்ஷஸ் தல் இரண்டையும் இணைக்கும் கணவாய் "கங்கா ச்சு" (Ganga Chchu) எனப்படும்.

இலங்கை மாநகரின் மன்னனாயிருந்த இராவணன், சிவனிடமிருந்து மாபெரும் சக்திகள் பெறும் பொருட்டு கடுந்தவம் புரிந்த இடம் இதுவெனக் கருதப்படுகிறது. அசுர பரம்பரையில் உதித்த இராவணன் மாபெரும் வலிமையோடு உயர்ந்த கீர்த்தியும் நிறைந்து விளங்கினான். ஒருசமயம் தான் பெற்றெடுத்த தவ வலிமையினாலும் தனது உடற்பலத்தாலும் கைலையைப் பெயர்த்தெடுத்து, தனது



இராவணன் ஏரி

நாடாகிய இலங்காபுரிக்கு எடுத்துச்செல்ல முனைந்தான். பீதியால் உமையாளும் தேவர்களும் நடுங்கிட, சிவபிரான் தனது காலால் மெதுவாக கைலை மலையை நசுக்க இராவணன் அதில் சிக்கித் துவண்டழுதான். பின்னர் அவனது சாமகானத்தில் மகிழ்ந்த சிவபிரான் அவனை விடுவித்தார். இது திபெத்தியரின் பாரம்பரிய புராணக் கதை. இராவணன் சிவபக்தியில் அபாரமானவன் – ஆகையால் இராவணன் மீது அவர்களுக்கு மிக்க பிரியமும் மரியாதையும் உண்டு எனவும் அறிந்தேன்.

இந்த இடத்தில் உருவகக் கதையைக் குறிப்பிடுதல் பொருத்தமெனக் கருதுகிறேன்.

இராவணனுக்குப் பத்துத் தலைகளுண்டு என்பதும் நாம் அறிந்ததே. அவனது விபரிப்பு மானிட வாழ்க்கையை ஒத்ததே. அவனது பிறப்பு: பிரம்மாவின் புத்திரர் புலஸ்தியர். அவரது உத்தம புதல்வர் பிரம்மரிஷி விசிர்சவஸ். அந்தண குலத்தின் நெறியில் வளர்ந்த இவரது புத்திரனே இராவணன். உயர்குலத்தில் உதித்த இராவணன் சிறந்த குணமும் சிவபக்தியும் மிகுந்தவனாயிருந்தான். இவனது உடன் பிறந்தோர் கும்பகர்ணனும் விபீஷணனும். இம்மூவரும் மனித மனோதத்துவத்தை விளக்கும் என்பர். இராவணன் ரஜோ குணத்தையும், கும்பகர்ணன் தமோ குணத்தையும் விபீஷணன் சத்வ குணத்தைப் பிரதிபலிப்பதாயுமுள்ளனர்.

பரிணமிக்கும் ஆத்மா ("நான்") பிரம்மா, ஆனந்த மய கோஷம் புலஸ்தியர், விஞ்ஞான மயகோஷம் பிரம்மரிஷியுமாம்.

மனோமயகோஷமான இராவணனுக்கும் பிரம்மாவான ஆத்மாவுக்கும் உள்ள உறவு எவ்வாறு உருவகமாக்கப் பட்டிருக்கிறதென்பது பின்வருமாறு புலனாகும்.

எண்ணும் எண்ணத்தோடு வடிவமெடுக்கிறது மனம்.

**ஐந்து ஞானேந்திரியங்கள்: (ஞானமடைய உதவும் கருவிகள்)**

- காதால் கேட்டல் (ஆகாயம்) = சத்வ குணம்
- சருமத்தின் தொட்டுணர்ச்சி (வாயு) = சத்வ குணம்
- கண்களோடு பார்த்தல் (அக்னி) = சத்வ குணம்
- நாக்கினால் ருசித்தல் (நீர்) = சத்வ குணம்
- மூக்கால் நுகர்தல் (மண்) = சத்வ குணம்

**ஐந்து கர்மேந்திரியங்கள் (செயல்கள்):**

- வாக்: (ரஜோ குணம்) பேச்சு
- கை: வாயுவின் ரஜோ குணம்
- கால்: அக்னியின் ரஜோ குணம்
- பாயுரு: மலசலம் கழித்தல்
- உபஸ்தம்: ஆண்–பெண் குறிகள் (மண்) ரஜோ குணம்

மேற்கண்ட பத்தையும் மனது தொழிற்படுத்தி செய்விப்பதையே இராவணனது பத்துத் தலைகளும் குறிப்பன என்பது உருவகம்.

ஆத்மாவானது செயல்களினால் அணு முதல் அண்டம் வரை தன்வசமாக்கி (உரு மாற்றி, இடம் மாற்றி) ஆள விளையும். ஆணவம், அகங்காரம் பெருகும். இந்த முனைப்பில் சிவ சொருபமாய் விளங்கும் சக்தியையும் ஜடப்பொருள் என நினைத்து உயிருக்குயிராய் அறிவுக்கறிவாய் நிற்கும் பரம்பொருளைத் தன்வசமாக்க முனைந்தால் துன்புற்று அழிந்தொழியும் வாய்ப்புண்டு. மூவுலகையும் ஆண்டு தருக்கடைந்த இராவணன் சிவ (மஹாசக்தி) சொருபமாகிய கைலையைப் பெயர்க்க முயற்சிக்குங்கால் நிகழ்ந்த உபாதையையும், இறைசக்தியைப் போற்றுங்கால் உய்வுபெற்றான் என்னும் உருவகம் புரிகிறல்லவா?

அதேபோல, நாமும் அஹங்காரத்தை நீக்கி எம்மை இறைவனுக்கு (உலக மகாசக்திக்கு) ஒப்படைக்கும் நிலையில் பேரின்பம் அடையலாம் எனும் தத்துவம் வெளிப்படும்.

ராக்ஷஸ் தல்லுக்கு வடமேற்குப் பகுதியிலிருந்தே சர்லெட்ஜ் எனும் நதி ஆரம்பமாகிறது.

இராவணன் ஏரியில் நான்கு சிறு தீவுப் படலங்கள் உள்ளனவாம் – கார்காலத்தில் திபெத்திய காட்டெருமைகள் இங்கு மேய்வதற்கு வருவன எனவும் அறியக்கிடக்கிறது. இராவணன் ஏரியின் நீர் நீல நிறமாயும், மானஸரோவர் நீர் இளம் பச்சை நிறமாகவும் தோன்றின. "ராக்ஷஸ் டல்" கருமைக்கும் மானஸரோவர் வெண்மை (பிரகாசம்) க்கும் ஒப்பிடப்படும். இடையே பிரதான தெரு அமைக்கப்பட்டுள்ளது. இந்த இரு ஏரிகளையும், கங்கா ச்சு (Ganga chchu) எனும் சிற்றாறு இணைக்கிறது.

கைலையில் எண்ணற்ற முனிவர் கடுந்தவம் புரிந்தனர் என்பது ஐதீகம். அப்படிப்பட்ட ஒருவருள் மந்தாத்தா எனும் முனிவர் முக்கியமானவர். இவர் பெயராலேயே கைலை மலையின் எதிர்ப்புறமாக – மானஸரோவரை இரு மலைகளுக்கும் இடையே உள்ளடக்கி, "குர்லா மந்தாதா" (Gurla Mandhata) என்று அழைக்கப்படுகிறது. இது உலகின் அதி உயர்ந்த மலைகளுள் 34ஆவது உயரமுள்ளதாகும். இந்த மலை இமய மலைத்தொடரின் ஒரு பகுதியுமாகும். இதில் ஒரு பெரும் குகை இருக்கிறதாம். இதிற்றான் விநாயகரும் முருகரும் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. மந்தாதா மலையில் ஏராளமான மூலிகைகள் வளர்வதாகத் திபெத்தியர் கருதுகின்றனர்.



குர்லா மந்தாதா மலையின் தோற்றம்

நாங்கள் சென்ற சமயம் மேற்குப் பகுதியில் முகில் கூட்டங்கள் பெரிதளவில் இருந்தமையால் கிளைநாதனின் தோற்றம் முற்றாகத் தென்படவில்லை. அவ்வப்போது பனிபடர்ந்த முக்கோண வடிவமாகத் தோன்றி, பேரழகைக் காட்டி மறைந்தன.

சூரிய வடிவமான (வட்ட) மானஸரோவர் பிரம்மாவின் ஒருமுகப்படுத்திய மனதிலிருந்து உதித்ததென நம்பப்படுகிறது. மானஸ் = மனம், சரோவர் = குளம்/ஏரி.

பௌத்தர்களுக்கும் ஜைனர்களுக்குங்கூட மானஸரோவர் முக்கியத்துவம் வாய்ந்தது.

கடல் மட்டத்திலிருந்து 4,590 மீற்றர் உயரத்திலுள்ளது. மானஸரோவரின் சுற்றளவு 88 கிலோமீற்றர். மேற்பரப்பு 320 மீற்றர். இதன் ஆகக்கூடிய ஆழம் 90 மீற்றர் எனவும் கணக்கிடப்பட்டுள்ளது. ஆனால், சுமார் முப்பது அடி தூரம்வரை அரை அடி ஆழம் மட்டுமே இருந்தது. சில இடங்களில், பத்து அடிக்குள்ளேயே ஐந்து அடி ஆழம் இருக்கும். அன்னப் பறவைகள் கூட்டம்கூட்டமாக நீந்தித் திரிவது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. அவை எழுப்பும் ஓசை "உமா" என்ற ஒலிவடிவாயிருக்குமென அறிந்தோம்.

பிரமபுத்ரா, கங்கை, இந்தஸ், ஸற்லெட்ஜ் ஆகிய நதிகளின் பிறப்பிடம் மானஸரோவரம்.

சிறிது நேரம் மானஸரோவர், ராவண ஏரி (ராக்ஷஸ் டல்) இவற்றின் அழகை ரசித்து, சுற்றிப்பார்த்தபின் எமக்குத் தங்குவதற்கென ஒழுங்குசெய்யப்பட்ட கூடாரங்களை நோக்கிப் பிரயாணமானோம்.

இந்தக் கூடார நிரைகள் அதிக தூரத்திலிருக்கவில்லை. இலங்கையிலுள்ள அன்றைய தேயிலைத் தோட்டத் தொழிலாளர் வதிப்பிடங்கள் (லைன்கள்) போலவே காட்சியளித்தன. எட்டுப் பேர் தங்குவதற்கு அடுக்கடுக்காக எட்டுக் கட்டில்களும் இரு நிரையில் இருந்தன. யன்னல்கள் கிடையா. அங்குள்ள கடும்



எமது தங்குமிடத்திலிருந்து மானஸரோவர்

குளிருக்கு இதுவும் நல்லதென்றே தோன்றியது. இரவில், இரண்டு மணி நேரத்துக்கு மட்டுமே மின்சார விளக்கு எரியும் வாய்ப்புண்டு.

நீர் வசதி, கழிப்பிட வசதி எல்லாம் ஆகாயத்தை நோக்கியதே! ஆனாலும், அரைக் கிலோமீற்றர் தொலைவில் இருந்த கழிப்பிடம் உண்டு. அங்கு சென்றபோது கால் வைக்க முடியாதவாறும் மூச்செடுக்க முடியாதவாறும் இருந்தது. இது இம்மாதிரியான முதல் அனுபவம். சமாளிக்க வேண்டித்தானிருந்தது. இதுதான் எதிர்வரும் நாட்களில் நாம் சந்திக்கவிருக்கும் "வசதிகள்" என்பது புலப்பட அதிக நேரஞ்செல்லவில்லை. கைலாச யாத்திரையில் இவை எதிர்பார்க்காதவையுமல்ல.



**மானஸரோவரில் தங்கிய கூடாரங்கள்**

ஒரு ஐந்து நக்ஷத்திர உல்லாசப் பயணிகள் விடுதியும் தெரிகின்றது. ச்யு மடாலயமும் தெரிகிறது

உற்சாகம் மிக்க எமது நேபாள உதவியாளர், மிக்க சுறுசுறுப்பாக எமது தேவைகளைக் கவனிக்கத் தொடங்கினர். சமையலுக்குள்ள உபகரணங்கள் எல்லாமே அவர்கள் வசம் இருந்தன. சூடான இரவு போசனம் ஒரு மணி நேரத்துள் தயாராகிவிட்டது.

ஆனால்... பசியோ இல்லை. உயரத்தில் செல்லச் செல்ல பசியும் நாளுக்குநாள் குறைந்துகொண்டேபோகும் எனவும் அறிந்தோம். ஜீரண சக்தியும் தளர்வதை உணர்ந்தேன். ஆகாரத்தைப் பார்த்தால் வயிறு குமட்டுவதுபோல இருக்கும். கைலாய பூமி தவத்துக்கும் யோகத்துக்கும் உரியதன்றோ! போகத்துக்கு உரியதன்று என்பது படிப்படியாகப் புரிந்தது.

சக யாத்திரீகருள் ஒருவர் மலேசிய டாக்டர். மிகவும் பவ்யமான சுபாவமுள்ளவர். பக்திமானும் ஆன்மீகவாதியுமான இவர், யாழ். யோகர் சுவாமியின் சீடரான அமெரிக்கர் சுப்பிரமணியம் சுவாமியின் பக்தர். இளைப்பாறிய இருதயநோய் நிபுணர். ஆனால், அவர் அந்தத் துறையை விட்டு, "பெனாரிஸ்" (காசி) பல்கலைக்கழகத்தில் ஆயுர்வேதப் பட்டதாரியானார். மலேசியாவில் இரண்டு துறைகளிலும் பயிற்சி செய்யமுடியாதகையால் ஆயுர்வேத பயிற்சிக்கே தம்மை அர்ப்பணித்துவிட்டார். அதிலும், புற்றுநோய்க்கு கொடுக்கப்படும் பௌதிக சிகிச்சையின்போது ஏற்படக்கூடிய பக்க விழைவுகளை ஆயுர்வேத சிகிச்சையின் மூலம் முற்றாக ஒழிக்கும் விசேஷ சிகிச்சையிலேயே ஈடுபட்டிருந்தார். மலேசியாவில் அதற்கான உயர்ந்த பதவியையும் பெற்றிருந்தார். அரசாங்கமும் அவருக்கு "டத்தோ" எனும் பட்டம் வழங்கிக் கௌரவித்திருந்தது என்றெல்லாம் கூறினார். "டத்தோ" என்பது நாட்டின் சேவையில் பெரிதும் பங்குகொண்டோர்க்கு மலேசிய அரசாங்கத்தால் வழங்கப்படும் கௌரவப் பட்டம்.

அவர் சாமான்யமாக அங்கு சமைக்கப்பட்ட (பழங்கள், ரசத்தை தவிர) வேறெந்த உணவுகளையும் உண்ணமாட்டார். தம்முடன் கொண்டுவந்த ஒருவித சீன அரிசிப் பொடி, பால்மா போன்றவையே அவரது தினசரி உணவு. மிகுந்த கட்டுப்பாடான அவரது உணவுப் பழக்கம் என்னை மிகவும் கவர்ந்துவிட்டது. மேலும் விபரங்களை அவரிடமிருந்து பெறும் வாய்ப்பைத் தொடர்ந்தும் எதிர்பார்க்கலானேன்.

ஓரளவு துணிவுடன், சமைத்த உணவை அருந்திய பின், இளைப்பாற விரைந்தோம்... அவ்வளவு குளிர். எம்மையும் வெளியுலகையும் பிரிக்கத் தகரத்தாலான தடுப்புகள் மட்டுமே. அணிந்த உடுப்புகள் அணிந்தவண்ணமே கம்பளியைச் சுற்றிக்கொண்டு படுக்கைக்குள் சுருங்கிவிட்டோம். பார்த்தால், ஐந்தரை அடி உயரமுள்ளவர்கள் இரண்டரையாகி, சுருண்டு மூட்டைபோலாகிவிட்டனர்!

## Kailash: A Spiritual Journey

## MANASAROVAR

It was nice and fresh in the morning of July 20, 2013 as we got ready for the longest coach travel towards the Holy Manasarovar Lake. Thinking of this and lack of appetite and slight nausea kept me away from having any breakfast, and I was satisfied with malted milk and honey toast to satisfy the minimum required energy and kept some hydration fluid for the day.

The pilgrimage continued with prayers to Lord Shiva with a chorus of NAMASHIVAYA, enjoying the fantastic natural beauty of snow-capped high peaks and hair pin bends all along the way to Paryang. Small residential huts were seen here and there in the valley with sheep and Yaks gracing in the middle of green pastures.

Dratun monastery (at 4,700 metres altitude) was a huge one on our route in the village of Dongba, and like most monasteries in Tibet, Dratun was also dynamited by the Chinese government after their invasion of Tibet and rebuilt later on.

We had a stop over for a tour of this historic spiritual centre, decorated with colourful flags and Buddhist chants. This monastery is one of the oldest in Tibet, and is renowned for its paintings and sculptures.

Pilgrimage continued along the picturesque route to Holy Manasarovar gate.

It was almost 6:30 pm when we reached the check point / gate to Manasarovar where it was almost two hours wait to get clearance and change over to another coach run by Chinese authorities – a strict stipulation by the government.

All pilgrims were extremely delighted to have the very first view of the Holy MANASAROVAR Lake, only a few minutes past this check point. The lake appeared almost like a sea with a mild, but cold breeze. The Brahmaputra, Sultej, Ganges and Indus rivers arise from this lake.

Some took a brief dip in the lake, although the water was ice cold, and there was a mini prayer led by our leader before we proceeded further to our overnight stay camp, a short distance from the lake.

# அகண்ட ஹோமம்

தேவர்கள் தரிசனம், ஏரிக்கரையில் ஹோமம், தர்சன்

**ஜூலை 20:**

**இன்று பௌர்ணமி தினம்.** அதிகாலை மூன்றரை மணிக்கே விழித்தெழுந்து தடித்த உடைகள் கம்பளி சகிதம் மானஸரோவரை நோக்கிப் புறப்பட்டோம். ஐந்தே நிமிட நடையில் ஏரிக்கரையில் இடம் பிடித்து உட்கார்ந்துகொண்டோம். ஏனென்றா யோசிக்கிறீர்கள்? அந்நேரங்களிற்றான் தேவர்கள் பூலோகம் வந்து மானஸரோவரில் ஸ்நானம் செய்வராம். அரை மணி நேரம்வரை கடுங்குளிரில் கண்கொட்டாமல் காத்திருந்து பார்த்தோம். ஒளிப்பிளம்போ விண்மீன்களோ போன்று ஒன்றும் புலப்படுவதாய்த் தோன்றவில்லை. எழுந்து கூடாரங்களுக்குத் திரும்பலாம் என்று சிந்திக்கும்போது சில ஒளிப்பிளம்புகள் துள்ளித்துள்ளி தூரவிருந்த ஏரிப்பக்கம் ஓடுவதை அவதானிக்க முடிந்தது. அதுதான் தேவர்களாயிருக்கும் – உள்ளார்ந்த தரிசனம் செய்த திருப்தியுடன் கூடாரத்துக்குத் திரும்பினோம்.

மேலும் சிறிது துயில்கொண்டு, ஆறு மணியளவில் எழுந்து காலைக்கடன்கள் முடித்து அன்று ஒழுங்குசெய்யப்படும் அகண்ட ஹோமத்தில் பங்குகொள்ளப் புறப்பட்டோம். எமது நேபாள உதவியாளர் ஏற்கெனவே ஏரிக் கரைக்குச் சென்று உகந்ததொரு ஸ்தலத்தில் ஹோமத்துக்குரியவாறு பள்ளம் ஒன்று தோண்டி, கூடாரம் அமைத்துமிருந்தனர். குளித்து, உடை மாற்றுதற்கு தனியாக இரண்டு சிறு கூடங்களும் அமைத்திருந்தனர். எரிவாயுமூலம் சூடாக்கப்பட்ட நீரும் தயாராகியிருந்தது.

வந்திருந்த பலரும் மானஸரோவரில் நீராடி, வெந்நீரிலும் திருப்தியாக நீராடி அகண்ட ஹோமத்திற் பங்கெடுக்கத் தயாராகினர்.



யாத்திரீகர் மானஸரோவரில் ஸ்நானம்



ஹோமம் தயாராகிறது

எமது கைலாச யாத்திரை எவ்வித இடையூறுமின்றி யாத்திரீகர் யாவரும் நல்லாரோக்கியத்துடன் பரிக்கிரமா (வலம் வந்து) நிறைவுறும் வண்ணம் இறைவனைப் பிரார்த்தித்தே, இந்த அகண்ட ஹோமம் செய்விக்க ஒழுங்குசெய்யப்பட்டது.

ஹோமம் என்பது அக்கினியில், ஊற்றும் பாத்திரத்தினூடாக நெய்யிட்டு, தியானித்து, ஆவாகனஞ் செய்து (அதாவது, மனதை ஒன்றுபடுத்தி உள்ளுணர்வில் உலக மஹாசக்தியை

வரவழைத்து) இறைவனுக்கு – அந்த மஹாசக்திக்கு எமது ஆராதனைகளையும் அர்ப்பணிப்புகளையும்) வழங்கி ஆராதிப்பது.

ஆரம்பகாலங்களில் மிகவும் எளிமையாகச் செய்யப்பட்ட ஹோமம் இன்று பெருமளவு சடங்காக வளர்ந்துவிட்டது. ஹோமத்தின் பிரதான முறைகளாவன: தூய்மையாக எழுப்பப்பட்ட மண்ணில் குறிப்பிட்ட சமித்துக்களை (கிரமப்படி இயம்பப்பட்ட மரக் குச்சிகள்) அடுக்கி நெய் இட்டு, அக்கினி மூட்டி, உரிய மந்திரங்களை ஓதி, பிரார்த்தித்து, இறுதியில் பூர்ணாஹுதி (பிரார்த்தனையின் இறுதியில் இறைவனுக்குஅர்ப்பணம்) = வஸ்திரம், வெற்றிலை தேங்காய், மலர்கள், பொரி, பொன் போன்றவையை) நெய்யுடன் சேர்த்து அர்ப்பணித்தல், பூரணமாகிய பின்னர் பஸ்பத்தை (சாம்பர்) நெய்யிற் கலந்து புருவ மத்தியிலிடல்.

ஆரம்ப முதல் இதுவரையில் உட்கார்ந்துசெய்த ஹோமத்தின் இறுதியில் பூர்ணாஹுதி – உரிய மந்திரத்துடன் – நின்றே செய்தல் வேண்டும்.

மேற்கண்ட முறைப்படி, ஒன்பது மணியளவில் விநாயகர் பூஜையுடன் ஆரம்பித்து இஷ்ட தெய்வங்கள் யாவற்றையும் ஆவாகனம் செய்தார் கைலை பாலாவின் மைத்துனரான சக யாத்திரீகர் பரந்தாமன். அவர் தமிழிலேயே (சமஸ்க்ருத) மந்திரங்களெல்லாம் அச்சடித்துக் கொண்டுவந்திருந்தார். பயபக்தியுடன் மந்திரங்களை – உச்சரிப்புகள் சற்றே விலகி யிருந்தாலும் – அவர் ஆத்ம உணர்வுடன் பூஜிக்கும் முறையே அலாதியானது. இது என்னை மிகவும் கவர்ந்துவிட்டது.

பஞ்சாட்சாரத்துடன் மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம் 1,008 தடவை ஓதினோம். யாத்திரீகர் அனைவரும் இயன்றவரை மிகவும் உற்சாகத்துடனும் பக்தி சிரத்தையுடனும் எமது கைலாச யாத்திரை இனிதே நிறைவுற வேண்டி, இதிற் கலந்து ஹோமத்தை சிறப்பித்தமை மிகவும் பாராட்டுதற்குரியதே.

**மஹா ம்ருத்யுஞ்ஜய மந்திரம்:**

த்ரியம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டி வர்தனம்
உர்வாருகமிவ பந்தனாத் ம்ருத்யோர் முக்ஷிய மாம்ருதாத்

இதன் சாராம்சம்: மூன்று கண்களை உடையவரும் – (ஆன்மீக) நறுமணத்தையும் போஷாக்கையும் தருபவருமாகிய

(இறைவனை) வெள்ளரிப்பழம் எப்படிப் பழுத்தவுடன் தானாகவே செடியை விட்டு நீங்கிவிடுகிறதோ அதேபோல - இந்த உலக வாழ்வின் பந்தங்களிலிருந்து நீக்கி, மரண பயத்திலிருந்து அகற்றி, பிறவித்துன்பத்திலிருந்து விடுதலை அடையும் பொருட்டு மிகு பணிவன்புடன் வணங்குகிறேன்.



அகண்ட ஹோமம் ஆரம்பம்



அகண்ட ஹோமம் நடைபெறுகின்றது



பூர்ணாஹுதி



பூர்ணாஹுதியில் வஸ்திரம் தொட்டு கலந்துகொள்ளும் யாத்திரீகர்

யாத்திரை ஆரம்பிக்கு முன்னரே அனைவரையும் தத்தமது வேண்டுதல்களை பத்திரங்களில் எழுதி, வேறெவரும் பார்க்கமுடியாதவண்ணம் மூடிவைத்துக்கொள்ளும்படி கைலை பாலா கேட்டிருந்தார். அவை யாவும், ஹோமத்தின்போது மந்திரங்களோடு அக்கினியில் இடப்பட்டன.

பூர்ணாஹுதியில் யாத்திரீகர் அனைவரும் உணர்வுபூர்வமாகப் பங்களிக்கும்வண்ணம் பட்டு வஸ்திரங்கள்

பல ஒன்றாக முடிக்கப்பட்டு நெய்யோடு அக்கினியிலிடப்பட்ட காட்சி, என்றென்றும் மனதை நெகிழவத்து உருக்கும் வண்ணம் அமைந்திருந்தது.



இறுதி பூஜை, சிவபுராணம்



பிரதான ஹோம ஆச்சாரியருக்கு தெக்ஷணை வழங்கல்

யாத்திரீகரின் ஒருமித்த ஓசையுடன் ஓதிய சிவபுராணத்துடன் கிரியைகள் யாவும், பிரதம ஆசாரியராக அனைத்துக்

கிரியைகளையும் முன்னின்று நடாத்திய பரந்தாமனுக்கு நன்றிகலந்த தெக்ஷணை (காணிக்கை) வழங்கலுடன், இனிதே பூரணமாயின.

யாத்திரீகர் அனைவருக்கும் பிரசாதங்கள் வழங்கி ஒவ்வொருவருக்கும் பூஜையில் வைத்து பிரார்த்திக்கப்பட்ட ருத்ராக்ஷமும் அணிவித்து வாழ்த்தினார் கைலை பாலா.

மதிய உணவின் பின்னர் சற்றே இளைப்பாறினோம். தொடர்ந்து பேருந்துமூலம், ஆறரை மணியளவில், அடுத்த தரிப்பிடமான தர்சன் (Dharchan) நகரத்தை அடைந்தோம். இது கடல் மட்டத்திலிருந்து 17,500 அடி உயரம். அதற்கேற்ப குளிரும் அதிகரிக்கும்.

ஒரு பள்ளத்தாக்கில் அமைந்த நகரமாதலால், சுற்றிவர மலைகளின் தோற்றந்தான். தெருக்களெல்லாம் மேடும் பள்ளமும், சேறும் சகதியும் மலிந்திருந்தன.

தர்சன் நகரம் தோற்றத்தில் சிறியதே. நாங்கள் தங்கும் விடுதி சீமெந்தாலான பெரிய கட்டடம். எங்களுக்கு ஒதுக்கப்பட்ட அறையில் மூவர் தங்கலாம். கழிப்பிடமும் நீர் வசதியுமுண்டு. ஆனாலும், அறையின் சாவி வழங்குதற்கென சாவி ஒன்றிற்கு ஐம்பது யுவான்கள் அறவிட்டார்கள். தங்கும் வாடகைப் பணத்தைவிட இது தனி. யாத்திரீகரிடமிருந்து பணத்தைச் சேமிப்பதற்கு இந்த யுக்தி எதிலும் சளைத்ததல்ல!

மின்விளக்குகளுக்குரிய மின்சாரம் வழங்கல் இரவு எட்டு மணிவரைதான் கிடைக்கும். எனவே, எம்முடன் கொண்டுவந்த சிரசில் மாட்டும் மின்விளக்கு எமக்குப் பெரிதும் உதவியது.

விடுதிக்குள் குளிக்கும் வசதி கிடையாது. வெளியே சென்று, நகரிலுள்ள பணம் கொடுத்துக் குளிக்குமிடத்திற்றான் குளிக்க வேண்டும். ஆளுக்குப் பதினைந்து யுவான்கள் என இருந்தது யாத்திரீகர் ஒவ்வொருவராக வரவரக் கட்டணம் இருபத்தியைந்துக்கு ஏறிவிட்டது. பணம் பெறும் யுக்தி எப்படிப் பல்கிப் பெருகும் என்பதற்கு இதுவும் ஒரு உதாரணம்!

அருகாமையில் கணணி, தொலைபேசி வசதிகளுள்ள தொழிலகமும் இருந்தது. பாஷை சிரமத்தாலும், பணம் உறிஞ்சும் உத்திகள் மிகையாயிருந்ததாலும் இவ்விடத்தை அணுகுவதில் தயக்கம் மேலிட்டது.

ஆடுகளும், காட்டெருமைகளும் அங்குமிங்குமாய்த் திரிந்தன. எப்போதும் மழைக்குக் குறைவில்லை.

திபெத்தியர் தோற்றத்தில் சாதாரணமாக உடற் பருமனுள்ளவராயினும், கடுந்தொழில் செய்வதில் மிக்க வல்லவர்கள். இதை ஏற்கெனவே எமது யாத்திரையில் தெரிந்துகொண்டோம்.

உடலைச் சுத்திகரிப்பது ஏதோ நூதனமாய்த்தான் இருக்கவேண்டுமெனத் தோன்றியது. அவர்களது வாழ்க்கைமுறையே மிக வித்தியாசமானது. எதையும் பெரிதும் பொருட்படுத்தார்போலத் தோன்றியது. தெருவோரங்களில் "பில்லியாட்ஸ்" (Billiards) போல ஒரு விளையாடும் வசதியிருப்பதைக் காணமுடிந்தது.



கட்டணம் வசூலிக்கும் குளியலறை


தெருவோர பில்லியார்ட்ஸ்

திபெத்திய அல்லது சீன மொழியின்றி உள்ளூர் மக்களுடன் எண்ணப் பரிமாற்றங்கள் செய்தல் கடினம். ஊமைப்பாஷையும் கணணியும் கைகண்ட கருவிகளாயின.



தர்சன் நகர்ப்புறம்



தர்சன் விடுதி

அடுத்தநாள் அதிகாலை நாலு மணிக்கே கைலையின் தென்முக தரிசனத்துக்காகக் கிளம்ப வேண்டும் என அறிவித்திருந்தனர். அவரவர்க்குத் தேவையான சுமை கொண்டுசெல்ல உதவியாளர் தேவைப்பட்டோர் முற்பணம் கட்டியே பதிவுசெய்ய வேண்டும் பாதுகாப்பின்பொருட்டு நானும் உதவியாளர் ஒருவரைப் பதிவுசெய்துகொண்டேன்.

ஆளுக்கொரு முதுகிற் சுமக்கும் கோணி மட்டுமே கொண்டுசெல்லலாம். மலை ஏறிச் செல்வதற்கான குளிருடைகள் ஆயத்தமாயின. மலை மேலே சென்றால் பெரிதும் சூடா யிருக்கவும் வாய்ப்புண்டு. அதற்கும் மாற்று உடைகளையும், சரும பாதுகாப்புக் கழிம்பு இத்தியாதி எடுத்துவைத்துக் கொண்டோம். வழியில், தேவைப்படும் சிற்றுணவுப் பதார்த்தங்களும் கொண்டுசெல்லும் சுமை கோணியுள் அடங்கின. அதிர்ஷ்டவசமாக, எமக்குத் தேவையான ஏனைய வசதிகளெல்லாம் கைவசம் இருந்தன. சூடான இராப் போசனம் தயாரானதும், பரிமாறினர். எனது உடல்நிலையும் திருப்தியானதாயிருந்தது. பின்னர், குளிர் கடுமையால் மூட்டைபோன்று மூடிக்கட்டிக்கொண்டு உறங்கச் சென்றோம்

## Kailash: A Spiritual Journey

## MAJOR FIRE RITUAL AT MANASAROVAR

Extra-terrestrial or aliens are believed to visit Holy Lake Manasarovar during very early mornings or auspicious time of the day. A small group of us were waiting at the shore around 3:30 am on the day (July 20, 2013), but finding no sparks of light (as these supposedly celestial bodies appear) we started to get back to our tents. But suddenly I saw a few bright (bulbs like) bodies at a furthest distant shore of the lake and I assumed that they were those celestial bodies (Devas) visiting MANASAROVAR!

Later on that morning we got ready for an extra special prayers (Major Yagna) with specially prepared fires on the shores of Manasarovar. The seasoned Nepalese Sherpas very efficiently got everything ready (including warm water for bathing!). The three hours long chanting 1,001 Mrithunjaya Mantras (especially arranged chants in Sanskrit, for Lord Shiva) was very mesmerising. This procedure was to ensure safe pilgrimage to Holy Kailash and return.

After a brief rest, our pilgrimage resumed at about 6:30 pm towards Darchen a small village, 15,010 feet above sea level, adjoining mount Kailash. The uphill drive, rain and strong wind made the coach journey quite irksome but the natural beauty of the tall mountains and valleys with waterfalls in between attracted my eyes all the way to our destination.

Darchen village was quite small, poorly developed with few happy looking people around the pavements where there were some billiards table in the open! Sheep and yaks were roaming around the narrow untarred wet roads.

The hotel we stayed was with minimal facilities only, with no shower facilities. We had to share the rent for a room key 50 Yuans – not included in the cost of the pilgrimage.

The community shower just a few yards from the hotel charged 15 yuans per person per shower, but it rose to 25 Yuans when the owners saw our big group of pilgrims!

In view of the request made by the organiser, for us to be ready by 4:30 am the following day for the trek to south face of Kailash. I rolled into my bed early, after a light dinner as the appetite for food almost disappeared.

# கைலாச [தென்முக] தரிசனம்

## கைலையின் தென்முகம் நோக்கி, "தக்ஷணாமூர்த்தி" தரிசனம்

**ஜூலை 21:**

*அதிகாலை 4 மணி. கும்மிருட்டு. கைவசமிருக்கும் மின்விளக்கின் உதவியோடு காலைக்கடன்கள் கழித்து, சூடாக ஒரு பானம் – "காப்பி" என்றனர்! அந்தக் குளிரில் எந்தச் சூடும் அமிர்தமாகவே இருந்தது. காலை 4:30 மணிக்கெல்லாம் மலை ஏறத் தயார். சுமக்கும் உதவியாளரும் வந்து சேர்ந்தார். அனேகமாக அனைத்து யாத்திரீகரும் கைலாச தரிசனத்துக்கு மிக்க ஆவலுடன் தயாராகியிருந்தனர்.*

*எனது நடை மிக்க மந்தமானதால் முதலிலேயே செல்லும் குழுவுடன் நடக்க ஆரம்பித்தேன். நடக்கும் கைத்தடிகள் மிக உதவியாயிருந்தன. மலையில் ஏறும்போதெல்லாம் மெதுவாக நடத்தலே உத்தமம் எனவும் அறிவுறுத்தப்பட்டிருந்தோம். ஏனெனில், மலையில் ஏற ஏற பிராணவாயுவின் செறிமம் குறைவாகுமாகையால், உடம்பு அதற்கு ஈடுகொடுக்கும் வகையில் இணங்கி இயங்க அவகாசம் வேண்டுமல்லவா? அடிக்கடி நீர் அருந்தும்படியும் சொல்லியிருந்தார்கள். கைலைநாதன் கிருபையால் ஏறி இறங்கும்வரை உடல்நிலை நன்கே உதவியது.*

*எமது உதவியாளருக்கோ திபெத்திய மொழியைத்தவிர வேறெந்த மொழியும் தெரியாது. ஆங்கிலம் சூனியம். கைப்பாஷையோ கஷ்டமுடன்தான் புரியவைக்க முடிந்தது. மேலும், அப் பையனது வேகமோ என்னைவிட மிக்க அதிகம்.*

எனதும் என்னுடன் வந்த சக யாத்திரீகரினது வேகமும் அவனை ஏமாற்றிவிட்டதுபோலத்தான் தெரிந்தது. வேக வேகமாய்ப் போய் எங்கோ இருந்துவிடுவான். தண்ணீர் வேண்டுமென்றால், ஏறிய களைப்பில் எமக்கோ உரத்த தொனியில் கேட்கவும் சக்தியில்லை. சலிப்புடனேதான் சைகையுடன் பரிந்து தருவதுபோல எமது கோணியிலுள்ள நீரைப் பருகக் கொடுப்பான். எமது தரிசனம் நல்லபடியாய் நிறைவேற வேண்டும். யாத்திரையில் பொறுமையும் எதையும் தாங்கும் சக்தியும் மிக மிக அவசியம். உயிருக்கு ஆபத்து என்று ஏதும் ஏற்படின், இதுபோன்ற உதவியாளர் இருந்தென்ன இல்லவிட்டாலென்ன என்ற சலிப்பும் உண்டாகலாம்.

இருந்தாலும், இவற்றை மனத்திற்கொண்டு, திடப்படுத்திக்கொண்டு, இறைவன் தந்த உற்சாகம் + ஊக்கம் கூடி மெல்லமெல்ல நடந்து நான்குமணி நேரத்தில் ஓரளவு பெரும் ஏற்றமானதொரு உச்சியைத் தொட்டோம். ஆஹா!... பனிபடர்ந்த மலைத்தொடர்களை வருடியவாறே ஊர்ந்துசென்றன பஞ்சௌனப் பரந்த முகிற்கூட்டங்கள். நடுநடுவே நீலவானம். அந்த அழகைக் காணக் கண்கோடி



**எனது ஊனக் கண்களுக்கு கைலாசத்தின் முதற் தோற்றம்**

வேண்டும்! "அம்பிகாபதி" சினிமாவில், சிவாஜி கணேசன் இறுதிப் பாட்டை பாடி முடிக்குமுன் திரையை விலக்கி பானுமதி பார்த்தபோது, ஆவல் மேலீட்டினால் வதனத்தை விவரிக்க விரைந்த காட்சியையொத்த தருணம் போன்றது. முகிற்கூட்டம் விலக, கைலாசம் தோன்றியது. இப்பிறப்பின் பயனை எய்திவிட்ட பிரமை. உடல் பூராவும் புல்லரிப்பு, இப் புண்ணியஞ்செய்த கண்களுக்கு. அந்த நேரம் உணர்ந்த களிப்பு விவரிக்கவொண்ணாதது.

கண்களில் நீர் மல்க கைலாசபதிக்கோர் மிகப் பணிவான வணக்கம் செலுத்திவிட்டு மேலும் தொடர்ந்தோம்.

ஏற்றம் போகப்போக மிகவும் செங்குத்தானதாகவே இருந்தது. நடையின் வேகம் குறைவாகவும், அதிக சக்திதேவைப்படுவதையும் உணர்ந்தேன். வெய்யோன் தன் வேகத்தையும் விட்டுவைக்கவில்லை. சமயங்களில் தனித்தே நடத்தல் அவசியமாயிற்று. கைலைநாதனைக் காணப்போகிறோம் என்ற களிப்பு சிரமங்களையெல்லாம் சுக்குநூறாக்கியதுபோலும்.

எதுவரை போகலாம் – போகமுடியும் – இதெல்லாம் தெரிவதற்கு ஒரு சந்தர்ப்பமே கிடைக்கவில்லை. நடந்தோம்... நடந்தோம்... அல்ல... அல்ல... ஏறினோம்... ஏறினோம்... வழிவழியே சிறு பௌத்த கோவில்களையும் கடந்து சென்றோம். இங்கெல்லாம் பௌத்த துறவிகள் தியானித்திருப்பார்களாம். அவர்கள் ஊக்கந்தான் என்னே!

படிப்படியாக ஏறும்போது சிறு கட்டடங்கள் தென்பட்டன. அதுதான் செர்லுங் (Serlung) மடாலயமும் அதற்கண்மித்த பிரார்த்தனைக்குரிய ஓய்விடமும். செர்லுங் மடாலயம் மிகப் பழமை வாய்ந்தது. சீனப் படையெடுப்பால் அழிந்துபட்ட இந்த மடாலயம், படையெடுப்பின் பின்னர் புனரமைப்புச் செய்யப்பட்டது. ஜீப் வாகனங்கள் இந்த மடாலயம்வரை வரக்கூடும். ஆனால், நாங்கள் சென்ற சமயம் எமது கண்களுக்கு எந்த வாகனமும் புலப்படவில்லை. இந்த பௌத்த கோவிலைக் கடந்து இரண்டு கிலோமீற்றர்வரை சென்றால் அண்மிப்பது எமது இடது பக்கம் எழுந்திருக்கும் அஷ்டபத் மலை. எதிரே தோன்றுவது கம்பீரமாக மனமுருக மாட்சிமையுடன் மிளிர்வதுதான் கைலாசநாதர் கோவில்கொண்ட கைலை மலை. வலுதுபக்கம் ஓங்கி வீரமுடன் விளங்குவது நந்திதேவர் மலை.



கைலாசம் (தென் முகம்) – நந்தி பர்வத் (வலது பக்கம்)

எமக்கு அண்மித்த பெரு மலைத்தொடர் அஷ்டபத் என்னும் முக்கியமானதொரு தெய்வீக மலை. ஜைனர்களுக்கு அஷ்டபத் அதிமுக்கியமானது. அஷ்டபத் தரிசனம் என்பதும் தென்முக கயிலாய தரிசனம் என்று அழைக்கப்படுகிறது. தக்ஷணாமூர்த்தி திருக்கோலம் என்றும் கூறுகிறார்கள். இது முக்கியமான இடமாகும். இங்கு மகாசிவராத்திரி தினம் ஜைன மதத்தின் முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதர் முக்தி பெற்றார் என்று கூறப்படுகிறது. இதில் எட்டு வகையான குகைகள் உள்ளனவாம்.



அஷ்டபத் மலை

ஆதியோகி (சிவன்) சிவராத்திரி தினத்திலேதான் கைலையில் தெற்குத் திசை நோக்கி தியானத்திலமர்ந்திருந்த தருணத்திலேயே (தக்ஷிணாமூர்த்தி) சப்தரிஷிகளுக்குப் பேரருள்புரிந்தார் என்பது பலரும் அறிந்ததே. கங்கை உற்பத்தியாவதும் இங்குதான்.

இந்தப் புனித ஸ்தலத்திலே நின்று அப்பேரருளாளனைத் தியானித்து நிற்பதும் இப்பிறவியின் புண்ணியமே.



**கற் குவியல்– நினைவுச்சின்னங்கள்**

எதிரே தோன்றும் கைலையின் வலப்புறம் நந்தி பர்வதமும், இடப்பக்கம் மகாகாள மலையும் இருக்கின்றன. மகாகாள மலை சிவபெருமானின் கோட்டை என்று அழைக்கப்படுகிறது. நந்தி பர்வதத்தின் தலை, காளை மாட்டின் தலையை ஒத்திருக்கிறது. நந்தி பர்வதத்தின் வலப்பக்கம் பல குகைகள் உள்ளன. இதனுள் கற்பக விருட்சம் உள்ளதாகக் கூறப்படுகிறது.

மேகம் சூழ்ந்த கைலையின் கம்பீரம் மிக்க தோற்றமும் பொன்போன்ற அழகும் பார்க்கும் எவர்க்கும் புல்லரிக்கும். கைலாசம் எந்நேரமும் – வெய்யிலோ மழையோ – எந்த நேரமாகிலும் பனிபடர்ந்தே (வெள்ளிப்பனிமலை) காணப்படும். அங்கிருந்தே எமது பிரார்த்தனைகளைச் செய்து தியானித்தோம்.



அஷ்டபத் மலை – கைலாசம் (தென் முகம்) – நந்தி பர்வத் (எமது சிறு குழு)

இத்தருணம், நாவுக்கரசரின் பாடல் மீண்டும் நினைவில் வந்தது:

மாதர்பிறை கண்ணியானை மலையான் மகளொடும் பாடி
போதொடு நீர்சுமந்தேத்தி, புகுவார் அவர்பின் புகுவேன்
யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்றபோது
காதல் மடப்பிடியோடு களிறு வருவன கண்டேன்.
கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்.

பதிகத்தின் முதல் பாடல்:
(நான்காம் திருமுறை, திருநாவுக்கரசர் தேவாரம் பதிகம் 3)

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கைலாயத்தை நோக்கிச் சென்றபோது, பூலோக கைலாயமெனத் திருவையாறைக் காண்பிக்க, அவர் (அகக் கண்களால்) கண்ட காட்சியாகப் பாடினார்.

அதன் பொருள்:

• இதோ, வீதியில் செல்லும் அடியார்கள் அழகான பிறைமதியை தன் தலையணியாக அணிந்த சிவபெருமான் மற்றும் உமாதேவியை பாடிச் செல்கிறார்கள்.

• அவர்கள் புதியதாகப் பறிக்கப்பட்ட பூவோடு நீரையும் எடுத்துக்கொண்டும் துதித்துக்கொண்டும் போகிறார்கள்.

• அவர்கள் பின்னாலேயே போனால் நானும் கோயிலைச் சென்றடைவேனே.

• கால்கள் சிறிதும் நிலத்தின் மேல் படாமல் திருவையாறு தலத்தை அடைந்தேனே. (திருக்கயிலாயம் செல்ல எடுத்துக்கொண்ட முயற்சியினால் என் உடல் உறுப்புகளில் ஏற்பட்ட அழிவுகள் எல்லாம் சுவடே இல்லாமல் மறைந்து போனதுவே, திருவையாற்றினை அடைந்ததுமே!)

அங்கே ஆண்யானையும், பெண்யானையும் ஜோடியாக காதல் களிப்புடன் வரக் கண்டு,

அக் காட்சியில் சிவபெருமானின் திருவடிகளைக் கண்டு தரிசித்தேன். (அன்பே சிவம்!)

• இதுவரை கண்டு அறியாத காட்சிகளை (திருப்பாதம், சிவானந்தம்) எல்லாம் கண்டேன்

என்று பாடுகிறார் அப்பர் பெருமான்.

(இந்தப் பாடலில் யானைகள் ஜோடியாக வருவதைக் குறிக்கும் அவர், இந்தப் பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு விலங்கு அல்லது பறவை தன் துணைக்கு வருவதாக குறிக்கிறார்.)

எங்கள் முயற்சி அப்பரின் முயற்சிக்கு எள்ளளவும் ஒப்பிடமுடியுமா?

இப் பூவுலகில், இந்த யாத்திரையை இவ்வளவு தூரம் மேற்கொள்ள எத்தனை புண்ணியம் செய்தோமோ!

கைலை மலை ஏறமுடியாததொன்று என்பது யாவரும் அறிந்ததே. அண்மையில் சென்று தரிசனம் செய்யலாம்.

இதுவரை கைலாய மலையை யாரும் ஏறியது அறியப்படாதது. பல மதங்களின் புனித்தத் தளமாகக் கருதப்படுவதால் இம்மலையில் ஏற அனுமதி கிடையாது. 1926ஆம் ஆண்டு Hugh Ruttledge என்பவர் கைலாயத்தின் வடமுகமாக ஏற முனைந்தபோது அதன் உயரம் 6,000 அடிக்குச் செங்குத்தாக இருப்பதால் முயற்சியை கைவிட்டார். 1936ஆம் ஆண்டு Herbert Tichy என்பவர் Gurla Mandhata ஏற முனைந்தபோது, அங்கிருந்த மலைவாழ் மக்களின் தலைவரிடம் கைலாய மலையை ஏறுவதுபற்றி கேட்டபோது, பாவங்களற்ற மனிதரால் மட்டுமே ஏறுவதுபற்றி நினைக்க முடியும் என்றார்கள். எனவே, அதுவும் நிறைவேறவில்லை (ஆதாரம்: விக்கிபீடியா)

எமக்கு முன்னர் சென்ற சக யாத்திரீகர் பதிநான்கு பேர் எமக்கு முன்னரே மலையில் தொடர்ந்து ஏறிச் சென்றுவிட்டனர்.

அஷ்டபத் மலையருகில், இளைப்பாறிய வேளையில், கொண்டுவந்த பழங்கள், பருப்பு வகைகள், பேரீந்து போன்ற பழங்கள் இத்தியாதி யாத்திரீகர் குழு தமக்கிடையே பரிமாறினர். அச் சமயம் எமது அனுபவம் மிகு நேபாள உதவியாளர் இருவரும் எம்முடன் கலந்துகொண்டமை மனதுக்கு ஊக்கமளித்தது. இந்தத் தலத்தில் இருந்து பலவித கோணங்களில் கைலாசநாதனின் அபூர்வமான, அருமையிலும் அருமையான – தரிசனத்தை உள்ளூர ரசித்தவாறே உலக மக்களின் நன்மையை வேண்டி பலவாறு பிரார்த்தித்துக்கொண்டேன்.

தொடர்ந்து மலையில் ஏறுவது எமது சிறு யாத்திரீகர் குழுவிற்கு உகந்ததாகத் தெரியவில்லை என அபிப்பிராயப்பட்டனர். நேபாள மலையேறும் உதவியாளரது அறிவுரையின்பேரில், இரண்டு மணியளவில் தர்சன் நகரை நோக்கிப் புறப்படலானோம். திரும்பிச்செல்லும் பாதை மிக்க இறக்கமானதே. இறங்கும்போதுள்ள சிரமமும் ஏறும்போதுள்ளதைவிடச் சளைத்ததல்ல.



தர்சன் காட்சிகள்

காலையில் இருள் மூழ்கியிருந்தமையாலும் கைலையைப் காணும் ஆவல் மேலீட்டாலும் சுற்றாடல்களைப் பற்றிய சிந்தனைகளே இருந்திருக்கவில்லை. திரும்பிவரும்போது கண்ட காட்சி அபாரமாயிருந்தது. சுற்றிவரப் படர்த்திருந்த முகில்கள் படிந்த மலைக்கூட்டம் ... அப்பப்பா .... வியத்தகு காட்சிகள் பற்பல. இயற்கை அன்னையின் படைப்புகளின் விந்தைகள்தான் என்னே!



திபெத்தில் அங்காங்கே காணப்படும் சிறு (பிரார்த்தனைக் கோபுரங்கள்)

எல்லாவற்றையும் ரசித்தவாறே மெல்லமெல்ல இறங்கிவந்து, மாலை ஆறரை மணியளவில் தர்சன் விடுதியை அடைந்தோம். விடுதியோ வெறிச்சோடி இருந்தது.

"உதவியாக" வந்த திபெத்திய இளைஞனுக்கு உரிய 360 யுவான்களும் நன்கொடையாக 30 யுவான்களும் அவனது திருப்திப்படி கொடுத்து அனுப்பியபின்னர் சற்றே இளைப்பாறினோம்.

உடல் நலமின்மையால், ஒருசிலர் மலை ஏற்றத்தில் கலந்து கொள்ளவில்லை. யாத்திரீகள் பலர் மீண்டும் வந்துசேரவில்லை.

நாமே எவ்வளவு மெதுவாகத் திரும்பினோம். ஏனையோர் பற்றிய ஆவல் மேலிட்டது. விசாரித்ததில் எம்மவர் ஒருவருக்கு உடற் கோளாறு ஏற்பட்டுவிட்டதாயும், கைலை பாலாவும் வேறு பலரும் உதவிக்காகப் பின் தங்கியுள்ளார்களெனவும் அறிந்தோம். எனினும், மாலைநேரம் செல்லச்செல்ல, பலரும் திரும்பாததையிட்டு ஆவலுடன் கவலையும் தொடர்ந்தது.

பின்னர் எங்களுக்கு முன்னரே மலைக்கு மேற்சென்றோர் ஒவ்வொருவராகத் தோன்ற ஆரம்பித்தனர். விசாரித்ததில் மாபெரும் அதிர்ச்சியும், ஏமாற்றமும் கவலையும் ஒன்றிணைந்த என்றுமே கேட்டிராத திடுக்கிடும் செய்தி காத்திருந்தது.

## Kailash: A Spiritual Journey

## KAILASH – SOUTH FACE – DHARSHAN

It was quite dark and cold about 4.30 am on the morning of July 21, 2013 when we got ready for the trek towards south face of Kailash. A young boy about 16 years of age was provided as my porter to carry my backpack. Although the cost was separate, I got this extra help to avoid any embarrassment during this precious pilgrimage to view Kailash for the first time in my life!

The initial walk itself started with an uphill trek through tortuous foot paths and rocky climbs through the village. I was in the first group of pilgrims to leave for the south face – because of my doubtful ability to walk uphill. My deep intention to view Kailash helped me to keep pace with the young porter who was quite energetic for such treks but completely lacked any verbal communication in English. This was quite disappointing for me but another co-pilgrim who joined for the trek, was encouraging.

The slow trek brought us to a point as the sun rose clearing the view for a clear view of Kailash, (although it was the tip) when I almost cried with joy of life with my eyes filled with tears! I was enjoying this very first view of Kailash without realising how much further I had to trek to reach near the base of Kailash – as I realised that the porter was well ahead of us (and almost disappeared)!

It took a further two hours with uphill - almost vertical - trek – when we reached a point near Serlung monastery (which was destroyed during the Chinese invasion but resurrected later

on). The huge mountain on our left was the Ashtapath (Ashta = eight) mountain range of eight peaks – an important place of worship for Jains.

Straight on was the gigantic scintillating South face of Kailash and we stayed here for almost an hour for a break, along with few more of our group, although few of efficient trekkers went ahead for the inner Parikrama. The Nandhi Parvath was on the right of south face.

Trekking further from that point of this trek was not advised by the Nepalese Sherpa. So, we all enjoyed this most wonderful view of Kailash and adjoining gigantic mountains for over an hour before we commenced our return to the hotel.

# மலையேற்றம்

# கைலை பாலாவின் அனுபவங்கள்

## சப்தரிஷி குகைகள், ஆத்மலிங்கம், அடியாரொருவர் அரனடி சேரல்

**ஜூலை 21 (தொடர்):**

எங்களுடன் வந்த சக யாத்திரீகருள் சிறு குழுவினர் எமக்கு முன்னரே கைலை யாத்திரை அமைப்பாளர் கைலை பாலாவுடன் அஷ்டபத் மலைக்கு மேலே சென்றிருந்தார்கள் எனக் குறிப்பிட்டிருந்தேன்.

யாத்திரையைப் பூரணமாக அறிதற்பொருட்டு, கைலை பாலாவின் குழுவிடமிருந்து பெற்ற அவர்களது அனுபவங்களை கைலை பாலாவின் அனுமதியுடன் அவரது இணையத் தளத்திலிருந்தும் கிடைத்த தகவல்களுடன் தேர்ந்தெடுத்து வழங்குகிறேன்.

செர்லுங் மடாலயத்திலிருந்து புத்த விகாரையில் இருந்து அஷ்டபத் மலை செல்லும் போது சுற்றிவரக் கண்ட மலைக்காட்சிகள் பீடபூமி வலையம், காட்சிகள் அனைத்தும் மறக்கமுடியாதன.



பர்க்ஹா சமவெளி– மானஸரோவர்

கிழேநோக்கின் மானஸரோவர் மற்றும் இராக்ஷஸ் தால் என்னும் இரண்டு ஏரிகளையும் தன்னகத்தே கொண்டுள்ள பர்க்ஹா சமவெளி ஆகும்.



இராவணன் ஏரி தோற்றம் –
கற்கள் மலிந்த கரடுமுரடான ஏற்றம்



தர்சன் நகரம் – (அஷ்டபத் மலை உச்சியிலிருந்து)

ஏற ஏற கற்கள் மலிந்த பாதை. வழி வழியே எங்கும் திபெத்திய யாத்திரீகர் பதித்த கற் குவியல்களையும் காணலாம். ஒற்றுமையையும் பேரின்பத்தையும் நல்கும் அடையாளங்களாம். இவற்றைக் கலைத்தால் கேடு விளையும் என்ற நம்பிக்கை திபெத்தியர்களிடையே நிலவுகிறது.

தொடர்ந்து செல்லும் பாதையிலிருந்து தர்சனை நோக்கின் பரந்த சமவெளி தோன்றும் – இதுவே பர்க்ஹா

சமவெளி. அதன் அழகு – இயற்கை அன்னையின் நீர், நிலம், மலை, மடு, தாவரங்கள் முதலானவற்றைக்கொண்டுள்ள கண்கொள்ளாக் காட்சி பார்த்தே அனுபவிக்கவேண்டும்.

கைலை வாசனின் அருகிற் செல்லச்செல்ல அப்படி ஒரு ஆனந்த பரவசம் மனதிற் தோன்றும் – புதியதோர் சக்தி பிறக்கும் உணர்வு. அன்புடை யாரையும் மிக அருகில் சென்று தரிசனம் செய்தால் அது மிகப் பெரிய ஆனந்தம் தானே. இந்த உலக மகா சக்தியின் அடியிற் சென்று தரி சித்தல் வாழ்வில் பெரும் அருமையிலும் அருமையான பாக்கியமன்றோ!



யாத்திரீகர் கைத்தடிகளுடன் ஆத்மலிங்கத்தை நோக்கி



பாதை முழுதும் சின்னங்கள்,
புத்தர் அடி, மில்லரீப்பா அடி, குதிரை அடி இத்தியாதி

அஷ்டபத்திலிருந்து கைலாய கங்கை மற்றும் சிலுங் நதிகளின் சங்கமத்திற்குச் செல்லவுள்ள தூரம் ஒன்றரை கிலோமீற்றார்வரை இருக்கும். கைலா பாலா குழுவினர் இந்தத் தூரத்தை சுமார் அரைமணி நேரத்தில் "ஓம் நமசிவாய" என்ற மந்திரத்துடன் ஏறிக் கடந்தனர். இந்த அற்புத தளத்தில் சிறு பிரார்த்தனை செய்தபின்னர் - தயாராகி மீண்டும் யாத்திரை தொடர்ந்தது.

சில யாத்திரீகர் தொடர்ந்து ஏற முடியாதுபோகவே, இந்தச் சிறு குழுவும், "தர்சன்" விடுதியை நோக்கித் திரும்பினர். அத்தனை கடினமானது இந்த மலை ஏற்றம். நந்தி மலை வலம் வருதலே கைலை யாத்திரையின் அதிமிக கஷ்டமான மலை ஏற்றமாகும்.



சப்தரிஷி குகையை அண்மிக்கையில் கற் குவியல்கள்



கைலாசம் - நந்தி பர்வத்திற்குப் பக்கத்திலிருந்து

பாறைகள், கற்கள், மேடு, பள்ளம் இத்தியாதி பல கடந்து செங்குத்தான மலை ஏற்றங்கள் ஏறி சப்தரிஷிகள் குகைகளைக் காண ஏறத்தாழ நாலரை மணி நேரமாகலாம். கடக்க வேண்டிய உயரம் *750* மீற்றர். செங்குத்தானதாகையால் ஏறும் முயற்சி மிக்க கடுமையானது என்றே "ஷேர்ப்பா"க்கள் முன்னர் எச்சரிக்கை செய்திருந்தனர்.

இவ்விடத்திலிருந்து கைலைநாதர் முடியிலிருந்து பிறக்கும் இரு நதிகளையும் காணலாம். இவையிரண்டும் சேர்ந்து ஒன்றாகி **ஆகாச கங்கா** என ஒன்றாகிக் கீழ்நோக்கிப் பாயும். இந்த நதிகள் அஷ்டபத் மலையிலிருந்து ஒன்றரை கிலோமீற்றர் தொலைவிலுள்ளது.

மேலும் அருள்மிகு **த்சோ கவாலா, த்சோ கவாலி** எனும் இரு ஏரிகளும் நந்தி மலைக்கு மேல்நோக்கிச் செல்லும்போது காணலாம்.

தொடர்ந்து ஏறுகையில் கைலைநாதனின் உட்செல்லும் "கோபுர வாயிலைக்" காணலாம். **கணேஷா குன்று** பிரமிப்புடன் அதன் மேலே தெரியும். சிவனாரின் மூன்றாவது – அதாவது நெற்றிக்கண் எனக் கருதப்படுவதும் தெளிவாக அந்த மலை உச்சியில் தோன்றும்.

பனிபடர்ந்த கைலையின் அடிவாரத்தில் காணப்படுவது ஆத்மலிங்கம். சிவனாரின் உச்சியிலிருந்து படிப்படியாக விழும் பனி – நீர்ப் படலங்கள் ஆத்மலிங்கத்தின் மீது அபிஷேகமாவதைக் காணலாம்.

இடப்பக்கமாக யாத்திரையைத் தொடர்கையில் நந்தியின் பின்புறமாக **சப்தரிஷி** குகைகளைக் காணக்கூடியதாயிருந்தது. இந்தச் செங்குத்தான ஏற்றத்துக்கு உதவியாக இப்பொழுது கயிறுகள் இணைத்துள்ளனர். பனிப்படலத்தினால் இந்தச் செங்குத்தான ஏற்றம் மேலும் கடினமாகிறது.



**ஆத்ம லிங்கம்**

ஏற ஆரம்பித்து சுமார் எட்டரை மணி நேரத்தின் பின்தான் ஆத்மலிங்க தரிசனம் கிட்டியது. இவ்விடத்தில் பிராண வாயுச் செறிமை மிக்க குறைவானதென உணரக்கூடியதாயிருந்தது. ஏற்கெனவே பிராணவாயு அடைக்கப்பட்ட குமிழிகள் உதவியாளர்கள் வசம் இருந்தன.



கைலாசநாதனின் கிழக்கு முகம்



உட் பிரகாரம் பூரணம்

**ஆத்மலிங்கம்:**

ஆத்மலிங்கம் பற்றிய குறிப்புகள் பல. எல்லாவற்றிலும் பொதுவானது இதுவே: சிவபக்தனான இலங்கை வேந்தன்

இராவணனின் கடுந்தவத்தால் நெகிழ்ந்த சிவனார் அவனது வேண்டுதற்கு இணங்கி இராவணனுக்கு ஆயுள் பலமும் லங்காபுரிக்கு அதிமிகுந்த பாதுகாப்பும் அருளித்தார். இந்த மிக்க பலம் வாய்ந்த தவப்பேறினால் ஏற்படக்கூடிய பின்விளைவுகளை ஊகித்த தேவர்களின் முயற்சியால் ஆத்மலிங்கத்தை லங்காபுரிக்கு எடுத்துச்செல்வது தடைப்பட்டது.

ஆத்மலிங்கத்தை தரிசிப்போர்க்கு ஆயுள் பலமாகும் – விருத்தியுண்டு – என்பது நம்பிக்கை.

**ஸப்தரிஷிகள்:**

யோக கலாசாரத்தில் சிவன் ஆதியோகி (கடவுளாக அல்ல) எனக் கருதப்படுவார். பல்வேறு ஆதாரங்களின் வாயிலாக ஏறத்தாழ 15,000 – 40,000 ஆண்டுகளுக்கு முன்னர் சிவன் ஆனந்தத் தாண்டவமாடி மெய்மறந்த – இனம்புரியாத – பெரும் பரவச நிலையில் இருக்கையில், அவரது என்றும் கண்டிராத – கேள்விப்பட்டிராத – இந்தச் சந்தர்ப்பத்தை அனைவரும் உன்னிப்பாகக் கவனித்தனர். பல்வேறு வகையில் முயற்சித்தும் இந்த பரவச நிலையின் சூட்சுமத்தை அறியமுடியாது இடம்விட்டகன்றனர். ஆனால், பன்னெடுங்காலம் பொறுமையுடன் தியானிதிருந்த எழுவர் – அதாவது, அவரது ஏழு சிஷ்யர்கள் மட்டும் தொடர்ந்து ஆவலுடன் காத்திருந்தனர். முதலில் இவர்களைப் பன்முறை உதாசீனஞ்செய்த சிவன் அவர்களது எண்பத்து நான்கு வருட (அதாவது, ஆயிரத்தெட்டு பௌர்ணமிகள்) தொடர்ந்த கடும் யோக சாதனையின் பயனாகச் சிவன் கண் திறந்தார்! அந்த எழுவரும் தாம் வழங்கவிருக்கும் கலையை ஏற்பதற்குப் பக்குவமடைந்துள்ளார்கள் என்றும் உணர்ந்தார். சூரியன் வடக்கிலிருந்து (உத்தராயனம்) தெற்குக்கு (தக்ஷணாயனம்) நகர்ந்த வேளையில் – பௌர்ணமி நாளில் – அதிநுட்பமான மானிட விஞ்ஞானக் கலைகளை அந்த எழுவருக்கும் அனைத்து உலகுக்கும் வழங்கும் முகமாக, அருளிச்செய்தார். இத்தினமே குரு பூர்ணிமா என வழக்கிலுள்ளது (சிவராத்திரி › பௌர்ணமி)

இங்கு **யோகா** என்பது இன்றைய உலகில் பலரும் கருதுவதுபோல, திரிபுற்றிருப்பதுபோல, வினோதமானதொரு உடற் பயிற்சியோ (ஆசனங்கள்) அல்லது மூச்சுப் பயிற்சியோ

(பிராணாயாமம்) மட்டுமல்ல. ஆன்மீக வாழ்வின் அதிநுட்பமான விஞ்ஞானரீதியிலான அதி சூட்சுமம் மிக்கதோர் கலையாம்.

அந்த எழுவரையும் (ஸப்த ரிஷிகள்/உலகின் ஏழு திக்குகளுக்கும் சென்று அந்த அதிநுட்பமான கலையை கற்பிக்கும்வண்ணம் அனுப்பிவைத்தார். இதிலோருவர்தான் அகஸ்திய முனிவர். ("ஸப்த" என்றால் ஏழு) அகஸ்தியர் பாரதம் முழுதும் மூலைமுடுக்குகளுக்கெல்லாம் சென்று இக் கலைகளைக் கற்பித்து இறுதியில் தென் முனையை அடைந்தார். இம்மகா முனியின் முயற்சினாலேயே இன்று பாரதம் முழுவதிலுமே ஒவ்வொருவரும் இம்மியளவாதல் யோகா (உதாரணமாக: உட்கார்ந்து உண்ணல், நமஸ்காரம் செய்தல், பிராணாயாமம் இத்தியாதி) வாழ்க்கையிலேயே பின்னிப்பிணைக்கப்பட்டுள்ளது. (இப்பகுதி அருள்மிகு ஞானி ஸற்குரு ஜக்கி வாசுதேவ் அவர்களின் உரையிலிருந்து பெறப்பெற்றது.)

சப்தரிஷிகள் குகைகளை அணுகுமுன்னர் உள்ள மலை ஏற்றம் மிக்க கடுகையானது. கற்கள், பனிப்படலம், பனிக்கற்கள்



சப்தரிஷிகள் குகையை அண்மிக்கும் யாத்திரீகர்



சப்தரிஷி குகை

நிறைந்தது. அத்தோடு வெயிலும் பனிப்படலமும் ஒன்றுசேர்ந்து யாத்திரீகர்களை கடும் சோதனைக்குள்ளாக்கின.



ஸப்தரிஷி குகைக்குள் கைலை பாலா



சப்தரிஷி குகைக்குள்

பனிக்கற்கள்கூட தலைமீது விழும் அபாயம் உண்டெனவும் நேபாள உதவியாளர் எச்சரித்தனர்.

இத்தனை சவால்களையும் எதிர்கொண்டு மெல்லமெல்ல ஸப்தரிஷிகள் குகைகளை நோக்கி முன்னேறினோம். எம்முடன் கூடவந்த திபெத்திய உதவியாளர் ("ஷேர்ப்பா"க்கள்)

அபார உடல் வலிமையையும் மிக்க கடுங்குளிரைத் தாங்கக் கூடியவராயுமிருந்தனர். கடமையே கண்ணியமான இந்த உதவியாளர் எமக்கு இயலுமானவரை உதவினர்.

எல்லோரையும் ஆச்சரியத்துகுள்ளாக்கிச் சடுதியாக அதிதீவிரமாக முன்னேறிச் சென்று ஸப்தரிஷி குகையை அடைந்த சக யாத்திரீகர் ஒருவருக்கு எப்படித்தான் அத்தனை சக்தி உருவாக்கிற்றோ – ஆச்சரியத்திலும் ஆச்சரியந்தான். அவரது அபார சக்தியைப் புரிய நெடுநேரம் இருக்கவில்லை.

அவர் குகைக்குள் சென்றதும் பத்மாசனதில் (யோக சாதனையில் உட்காரும் ஒரு நிலை) அமர்ந்துகொண்டார். தியானம் செய்ய ஆரம்பித்த சில வினாடிகளுக்குள் ஒரு பெரு மூச்சுடன் பக்கத்திலிருந்த சக யாத்திரீகரின்மீது சாய்ந்தது. அவரது உடல் பூதவுடலானது!

உடலை விட்டுப் பிரிந்தது அவரது ஆத்மா!!

அன்னாரது ஆத்மா பிரிந்ததும் திகிலடைந்த சக யாத்திரீகர் எதிபாராத இந் நிகழ்வினால் இன்னது செய்வதெனக் கலங்கினர். கைலை பாலா மிகத் திடத்துடன் செயலாற்ற ஆரம்பித்தார். உடனடியாக ஏனைய யாத்திரீகர் அனைவரையும் திரும்பி "தர்சன்" விடுதியை நோக்கி ஏகுமாறு வேண்டிக்கொண்டார். அவ்வாறே யாவரும், இன்னதென அறியாது மலையிலிருந்து கீழ்நோக்கி இறங்கத்தொடங்கினர்.

"ஷேர்ப்பா"க்களில் ஒருவர் "சிர்லுங்" மடாலயத்தருகே சென்று "அம்புலன்ஸ்" வாகனம் முதலிய ஒழுங்குகளைச் செய்ய விரைந்தார்.

தாமதமாயினும், உரியவாறு வண்டி வந்து அந்தப் பூதவுடலை தர்சனுக்கு கொண்டுசென்றனர். கைலை பாலாவும் மேற்கொண்டு செய்யவேண்டிய ஒழுங்குகளில் விரைந்து செயற்பட ஆரம்பித்தார்.

தர்சன் விடுதியிலிருந்த யாத்திரீகர் குழுவுக்கு தாமதமாகவே செய்தி கிடைத்து, பெரும் ஆச்சரியத்திலும் – அன்னாரைப் பிரிந்த துக்கத்திலும்– முகவாட்டத்துடன் அமைதியே உருவாகினர். இதற்கிடையே எமது "ஷேர்பா"க்களினால் தயாரித்தளிக்கப்பட்ட "சூப்" தயாரானது. உடற் களைப்பால் யாவரும் அசந்திருந்தனர். ரொட்டியுடன் "சூப்" அருந்தியபின் இளைப்பாறச் சென்றோம்.

## Kailash: A Spiritual Journey

## EXPERIENCES FORM KAILAI BALA

A small group of about 12 continued the spiritual journey to the inner circle or inner Parikrama before our group and this section of our pilgrimage, obtained from our organiser Kailai Bala, is included for completeness.

Further trekking from the Ashtapath mountain range, we saw numerous sets of stone collections in the form of a mountain – an indication of union and spiritual fulfilment. Nature's beauty of the huge area surrounding Kailash could not be described in words. The group had mini prayers prior to the acute vertical trekking to reach the caves of seven sages (Saptha Rishi Caves) where the first seven sages including Agastya, meditated for years in the vicinity of Shiva.

The slippery ice filled mountain was an extremely difficult trek and some of the members of the group had to stop and return while the rest continued with the help of the experienced Nepalese Sherpas.

The two huge rivers formed from the mount Kailash joined to form the Akash Ganga – about 2 km from the Ashtapath Mountain.

More huge rivers branched off from this point. Dharshan of Athmalinga – at the base of ice filled Kailash - was a very rare achievement for those undertaking this most strenuous trek. The view of the Ice avalanche from the top of Kailash falling on to the Athmalinga was only visible at times depending of the weather conditions.

This point of the trek is devoid of usual oxygen concentration and the Sherpas had a good supply of oxygen cylinders –although breathing for many had already become heavily laboured. Also, ice rocks falling from the top of the mountain made the trek slow down. Well anchored ropes were available to climb up to the Sapta Rishi caves.

A rather strange but shocking instant was the demise of one of the members of the group – most dedicated Shiva devotee – on reaching the caves. That was apparently a wilful cessation of life by a devotee. Sherpas were extremely equipped with the necessary information and contacts for the procedures that followed.

This is a gift for any devotee trekking to this point of Kailash Yatra.

# கைலை வலம்
# [வெளி வீதி வலம்] & ஆரம்பம்

யமத்வார், ஆயத்தங்கள், யாத்திரை

**ஜூலை 22:**

முதல் நாளைய நினைவுகள், கனவுகளை ஒத்த நிகழ்வுகள்தாம் – வாழ்வின் கன்னிக் கைலைத் தரிசனமும் அன்றே அதிசயிக்கத்தகு யாத்திரீகர் ஒருவரின் ஆத்மசாந்தியும் என்றும் என் வாழ்வில் நினைவலைகளினின்றும் அகலாதென்பது திண்ணம்.

காலை உண்டி அதிமிதமான சுவையாயிருந்தது, இட்லி சாம்பார் சகிதம் போஷாக்குள்ள நல்ல போஜனம். அருமையா யிருந்தது. அதோடு காப்பி சேர்ந்தால் சொல்லவா வேண்டும் (இந்தக் காப்பி உடன் தயாரிப்புதான். என்றாலும் பரவா யில்லை). பல நாட்களின் பின், அதுவும் திபெத்தில் – நம்நாட்டு உணவு சுவையுடன் கிடைத்தது வரப்பிரசாதமே. இத்தனைக்கும் இரகசியமாக உற்சாகமுடன் முனைந்தவர் எமது குழுவைச் சேர்ந்த மலேசிய அம்மையார் மகேஸ்வரி அவர்களே. நன்றி. அவரது முயற்சியாலேயே அன்று வெண்டைக் காய் கறி பருப்பு ரசம் சகிதம் மதிய உணவு. அதுவும் பிரமாதமாயிருந்தது. கைலை யாத்திரையில் என்றென்றும் நினைவில் நிற்கக்கூடிய இன்னொரு தினம்.

தொடர்ந்து – முதல் நாள் உடற்களைப்பும் மனச் சோர்வும்கூடி உறக்கம் கண்களைச் சொருகியது. பின்னர் சொல்லவா வேண்டும்!

கைலை பாலா யாத்திரீகர்களின் உள்மனம் புரிந்ததுபோலும், எவ்வித கடும் முயற்சியிலும் யாரையும் ஈடுபடுத்தவில்லை, இன்றைய தினம் யாவருக்கும் இளைப்பாறும் நாள் போல.

அவரவர் தத்தமது தேவைகளைக் கவனித்துக்கொள்ள அவகாசம் கிடைத்தது.

அடுத்த நாள் முதல் நான்கு நாட்களுக்குரிய சில முக்கியமான அறிவிறுத்தல்கள் கொடுக்கப்பட்டன.

கைலாசம் வெளி பரிக்கிரமாவுக்கு (வீதி வலம்) "யாக்" எனும் காட்டெருமைகள் (கவரி மாடுகள்) பெரும் சுமைகளைக் கொண்டுசெல்லும் பொருட்டு ஒழுங்குசெய்யப்படும். அவை எல்லா நேரங்களிலும் ஒழுங்காகச் செல்லமாட்டா. திடீரென திக்கு மாறி ஓடுமாம். அவற்றின் சுபாவம் அது. அவற்றின் பாதுகாவலர் இந்த குணாதிசயத்தை அறிந்து, இந்த மிருகங்களை அவற்றின் வழியிற் சென்று வழிக்குக் கொண்டுவருவராம். ஒரு காட்டெருமை இரு டபிள் (duffle) சுமைகளைக் கொண்டுசெல்லும். இரண்டு அல்லது மூன்று யாத்திரீகர் ஒரு டபிள் சுமையிலேயே தமது உடைமைகளை அடக்க வேண்டும் என அறிவுறுத்தப்பட்டது. அதற்கும் மேலாகவும் பொதிகளைச் சுமக்கக்கூடியன இந்த பிரமிக்கத்தகு சுமை தூக்கும் "யாக்". உதவியாளருடன் கூட அறுபதுக்கு மேற்பட்ட எமது குழுவின் சுமைகளை - குடிக்கும் நீர், சமையலுக்குரிய அனைத்து உபகரணங்கள் மூலப்பொருட்கள் எல்லாச் சுமைகளையும் கொண்டுசெல்ல இந்தக் காட்டெருமைகள்தான் கதி. என்னே இந்த பிரமிக்கத்தகு பொதி கொண்டுசெல்லும் சாதனம்.

இன்றுவரை எல்லாச் சுமைகளையும் கொண்டுவந்த பொதிவாகனங்கள் "தர்சன்" விடுதியிலேயே விடப்பட்டு, யாத்திரை ஆரம்பமாகும் இடமான "தர்போச்சே"க்கு தனியானதொரு சிறு ஊர்திதான் செல்லுமெனவும் அறிந்தேன்.

என்னுடன் நண்பர் சுவாமியின் உடைமைகளை ஒரு சுமையில் ஒழுங்குசெய்வதே பெரும்பாடாகிவிட்டது. ஒருவழியாகத் தேவையான மிகச் சொற்பமான உடைமைகளை மட்டும் எடுத்துக்கொண்டோம். வெளி வலம் சுற்றும் நான்கு நாட்களிலும் இரவு தங்குமிடங்களில் மின்சார வசதி அற்பமே - அல்லது அதுவும் இருக்காது. எனவே, எமது புகைப்படக் கருவிகளுக்கான உபகரணங்கள் அனைத்தையும் சரிசெய்து பார்ப்பது நல்லதொரு அனுபவம். ஏனெனில், சிலரது கருவிகளின் மின்கலங்களுக்கு மின்னூட்டிகள் போதாமையாயும், அளவற்றதாயும் இருக்கக் காண வெகு

வியப்பாயிருந்தது. அவரவர்க்குத் தேவையானவற்றை தேடித் திரிதலும் அவற்றையொட்டிய செயல்களையும் பார்த்து "ரசிக்கவே" தோன்றியது – உண்மையில் பெரும் பரிதாபமானதுதான்.

இதற்கிடையில், பணம் செலுத்தித் தெருவுக்கருகாமையிலுள்ள குளிக்கும் தலத்திலும்கூட எங்கள் குழுவினர் வரிசைக் கிரமப்படியே செல்ல வேண்டியிருந்தது – அத்தனை பேருக்கும் இரண்டு குளியலறைகளே "தர்சன்" நகர்புறத்தில் இருந்தன. திபெத்தில் குளித்தலுக்குள்ள மகிமை அதிசயிக்கத் தக்கதல்லவா?

எமது விடுதிக்கு அண்மையில் தொலைபேசி – இணையத்தள வசதியுள்ள ஒரு இடம் இருந்தது. அங்கு சென்று வரிசைக் கிரமப்படி நின்றபின்னர் ஒரு கருவி கிடைத்தது. ஆனால், எல்லாம் சீன மொழியிலேயே எழுதப்பட்டிருந்தது. ஒருவாறு "கூகிள்" (Google) மூலம் இணையத்தள இடத்தைக் கண்டுபிடித்தால், எமக்குரிய மின்நகல் அனுப்பும் வழி கிடைக்கவில்லை – நேரத்துக்குரிய பணமும் வீண்!

மதியத்தின் பின்னர் – தொடர்ந்தது பண மாற்றப் பிரச்சினை.

முதல் நாள் திபெத்திய உதவியாளனின் அனுபவங்களை மனதிற்கொண்டு – கைலாசநாதன் தரிசனத்தையே ஒவ்வொரு கணப்போழுதும் எண்ணியவாறு – அடுத்து வரும் நான்கு நாள் யாத்திரைக்கும் உரிய ஆயத்தங்களுடன் செல்ல வேண்டும் என உறுதிகொண்டேன். எனவே, உதவியாளருடன் மட்டக்குதிரையொன்றையும் (Pony) அமர்த்துவதற்கு விசாரித்ததில், இதற்குப் பொறுப்பானவர் சீன யுவான்களிலேயே பணம் தரவேண்டுமென வற்புறுத்தினார். இந்த விடயம் முன்னரே அறியாததால் போதிய யுவான்களை மாற்றிக் கொண்டுவரவில்லை. இங்கிலாந்து பவுன் ஒன்றுக்கு ஆறு யுவான்களைப் பெற்றுக்கொண்ட எமக்கு, திபெத்தில் நாலரை யுவான்களே கிடைக்கும் என்றனர். அந்தச் சமயத்தில் கதி ஏதும் இல்லாததால், இருந்த அமெரிக்க டொலர்களையே இந்த விலைக்கு விற்று 1,260 யுவான்களுக்கு மட்டக்குதிரை, குதிரைக்காரன் சக சுமை கொண்டுசெல்லும் உதவியாளர் அமர்த்த ஒழுங்குசெய்தேன். கைலாசம் வெளி வீதி வரும்போது அதி உயரமான "டொலாமா லா பாஸ்" எனும் கௌரி

(குண்டம்) ஏறிச் செல்வதற்கு குளிருடைகளுடன், கூட மழை பெய்யும் சாத்தியக்கூறுகள் வலுவாக இருப்பதாலும் உரிய உடைகளை எம்முடனேயே எடுத்துச்செல்வது உகந்தது என்றனர். அவையெல்லாம் எம்மோடு கொண்டுசெல்ல வேண்டியவை. காட்டெருமைகள் அச்சமயங்களில் கண்ணிலும் தென்படா.

உடுத்திருக்கும் உடுப்புகளைத் தவிர, அப்பப்போ தேவைப்படக்கூடிய சிற்றுணவுவகை (பேரீந்து, கடலை வகை, குளுக்கோஸ்), குடிக்கும் நீர், தொப்பி, சூரிய வெப்பத்தினின்றும் காக்கும் கண்ணாடி, கழிம்பு இத்தியாதியும் எம்முடன் கூடவே இருத்தல் அவசியம். புகைப்படக்கருவி தனி. எல்லாமும் அடுத்த நான்கு நாட்களிலும் கூடவே இருத்தல் வேண்டும். அதற்காய ஆயத்தங்களுடன் புறப்படத் தயாரானோம். இரவில் மின்சாரம் அருமை– எட்டரை மணிக்குப் பின்னர் மின்சார வெளிச்சம் கிடைக்காது. எனவே, அதற்கமைய எல்லா ஆயத்தங்களும் முடிந்தபின்னர் தொலைபேசியை முடிக்கினோம். அதிசயிக்கத் தக்கவாறு, கைத்தொலைபேசியில் லண்டனுக்குத் தொடர்பு கொள்ளக்கூடியதாயிருந்தது. திபெத்தில் இரவு பத்தரை மணி – இங்கிலாந்தில் மாலை மூன்றரை மணி – நிம்மதியான தொடர்பு. சுகங்கள் விசாரித்ததன் பின்னர் இளைப்பாறினோம்.

அதிகாலை ஆறுமணியளவில் விழித்தெழுந்து காலைக்கடன்களைப் பூர்த்திசெய்ததும் "தர்போச்சே" (Tarboche) எனும் இடத்துக்கு வாகனம்மூலம் செல்வதற்குத் தயாரானோம். குறைந்தளவு தூரமாகையால், ஒருசிலர் நடந்தே சென்றார்கள். தர்போச்சே ஸ்தலம் தர்சன் சிற்றூரிலிருந்து 85 கிலோமீற்றர் தொலைவிலுள்ளது. வாகனத்தில் செல்வதற்கு அரை மணி நேரமாகலாம்.

"தர்போச்சே" திபெத்திய ஆன்மீக வாழ்க்கைக்கு அதிமுக்கியத்துவம் வாய்ந்த தலம். வருடாவருடம் இங்கு நடைபெறும் "ஸாகா தாவா" (Saga Dawa) திருவிழாவன்று ஆயிரக்கணக்கான கொடிகளைத் தாங்கும் கொடிஸ்தம்பம் புதிதாக்கப்படும். ஸ்தம்பத்தின் உயரம் சுமார் எண்பது அடி இருக்கும். திபெத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் யாத்திரீகர் இத்தினத்தில் இங்கு ஒன்றுகூடுவர்.

திபெத்திய பஞ்சாங்கத்தின்படி நாலாவது மாத பௌர்ணமியன்றுதான் இத்தினம் கொண்டாடப்படும்.

இத் தினத்திலேதான் சாக்கிய முனிவர் (புத்தர்) ஞானம் பெற்றார்.

அன்றைய தினம் புதிய கொடிஸ்தம்பம் காயந்த்ரக் (Gyangdrak) மடாலயத்தை (கிழக்கே) நோக்கி நிறுத்தி வைக்கப்படும். இந்த வைபவத்துக்கு, அந்த மடாலயத்தைச் சேர்ந்த லாமாக்கள் (குருமார்) விசேஷ பூஜைகள் செய்வர். பிரதான லாமாதான் கொடி ஏறுவதை நிதானமாகக் கவனித்து வழிநடத்துவார். சங்கு முதலாக பல்வேறு இன்னிசைக்கருவிகள்– முக்கியமாக கொடிஸ்தம்பம் நிறுத்திவைக்க ஏறும்போது – முழங்கப்படும். இது மிகவும் ஆன்மீக உணர்ச்சிவசமான வைபவமாக நடைபெறும். பக்தர்கள் கொடிகளைக் கட்டி ஸ்தம்பத்தை உயர்த்துவதற்கு அனுகூலமாயிருப்பர். ஏறியதும், கொடிஸ்தம்பம் சரியாக நேராக இருத்தல் மிக மிக முக்கியம். எப்பக்கமாவது சரிந்திருந்தால், அது சகுனப்பிழையாகக் கருதப்படும் – நாட்டுக்கு பெரும் கேடு விளையும் எனவும் நம்பப்படுகிறது.

இந்தக் கொடிஸ்தம்பம் அண்மையிலுள்ள "த்ரகோம் நகையே துர்த்ரோ" (Drachom Ngagye Durtro) எனும் மயானத்துக் குரிய புண்ணிய ஸ்தலமாகக் கருதப்படுகிறது.

திபெத்திய பஞ்சாங்கம் ஹிந்து முறைப்படி அறுபது வருட சுற்றுக் கொண்டது. பகலவனின் நிலையைப் பொறுத்துத்தான் பஞ்சாங்கம் கணிக்கப்படுகிறது.

இவ்விடத்திலிருந்துதான் கைலாச வெளிப்பிரகார வலம் (பரிக்ரமா) ஆரம்பமாகும்.

இந்தக் கொடிஸ்தம்பத்திற்கு அருகேயுள்ளது 84 சித்தர்களை அடக்கஞ்செய்த கம்பீரமான மலையாகும்.

"யம த்வார்" அமைந்திருக்கும் இடமும் இதுவே. (த்வார் என்றால் கதவு எனலாம்) காலனின் கதவுகள் கடந்தே கைலை யாத்திரை ஆரம்பமாக வேண்டும்.

தர்போச்சே தலத்திலேதான் பொதிகள் சுமக்கும் காட்டெருமைகளும் (Yak), குதிரைக்காரருடன்கூடிய மட்டக் குதிரைகளும் (Pony), உதவியாளரும் (Porter) தெரிவுசெய்யப்படுவர். இந்த மிருகங்களெல்லாம் நாம் தர்போச்சேயை அடைந்தபோது வந்து சேரவில்லை. இதில் தரகர் ஒன்றிரண்டல்ல – பலர் – நீண்ட பேரம் பேசுவர்.



யமத்வார் – கைலாசநாதனின் தரிசனத்துடன்

எமது யாத்திரை திபெத்திய ஒழுங்கினருக்கும் அவர்களுக்குமிடையே பல்வேறு வாக்குவாதங்கள் நடைபெற்றன. இந்த வாக்குவாதத்தின் இறுதியில் சீட்டுக்குலுக்கள் மூலந்தான் உதவியாளரும் மட்டக்குதிரைகளும் தேர்ந்தெடுக்கப்படும்.

இந்தச் சர்ச்சைகள் நிறைவுற ஏறக்குறைய இரண்டு மணி நேரமாகிவிட்டது.



காத்துக்கிடக்கும் யாத்திரீகர்



மட்டக் குதிரை + உதவியாளர்க்கான சீட்டுக் குலுக்கல்

சீட்டுக்குலுக்கள்மூலம் எனக்குக் கிடைத்த மட்டக் குதிரைக்காரர் நிம்மா – Nimma (ஆண்). பொதிசுமக்கும் உதவியாளர் டெறி டோன்னா – Terry Donna (பெண்மணி).

மட்டக்குதிரைகள் திபெத்திய கலாச்சாரத்தில் பின்னிப் பிணைக்கப்பட்டவை. "குயிங்ஹாய்" (Quinghai) எனும்



மட்டக் குதிரைகள் ஆயத்தம்



உதவிக்குரிய மட்டக்குதிரையுடன்

திபெத்திய சமவெளிப்பகுதியில் ஏறத்தாழ நாலாயிரம் வருடங்களுக்குமுன்னரே இருந்ததாக அறியக்கிடக்கிறது. இவை சீன – மொங்கோலியக் குதிரை இனங்களின் கலப்பு எனவும் அறிந்தேன்.

இந்தக் குதிரைகள் ஏனைய உலகிலுள்ள குதிரை இனங்களைவிட உயரத்தில் குறைந்தவை. ஆனால் உறுதியான இடுப்புப் பகுதி எலும்புகள் மூட்டுகள் கொண்ட மிக்க பலம் வாய்ந்தவை. வெள்ளை முதல் கருமையான நிறம்வரை உரோமங்களைக் கொண்டன.

திபெத்திய அரசர் – ஞானி தலாய் லாமா முதற்கொண்டு திபெத்தியர் அனைவர்க்கும் இந்த மட்டக்குதிரைகள் அவர்களது நாளாந்த வாழ்க்கைக்கும் அதிபிரயோசனமானவை. புராதன

காலத்திலிருந்தே இவர்களது கலாசாரத்தில் இணைந்திருக்கும் இக்குதிரைகள் இப்பகுதி திபெத்தியருக்கு வாழ்வாதாரம் (வருமானம்) கொடுக்கும் அன்புப் பிராணிகள். சீன அரசாங்கம் அதனது படையெடுப்புக்குபின் கிழக்கு அண்மையிலுள்ள பாதைகளைத் திருத்த முற்பட்டபோது – அவர்களது வருவாயைக் கெடுக்குமாதலால் – இக்கிராமத்தவரின் வேண்டுகோளுக்கிணங்க, யாத்திரைப்பாதை தொடரப்படவில்லையாம். இன்றும் இதே நிலைதான். ஏனைய திபெத்தியப் பாதைகள் பெருமளவு உன்னதமாக அமைக்கப்பட்டிருப்பதைப் பார்த்தபோது இது நம்பக்கூடியதாயிருந்தது.

**காட்டெருமைகள்:**

இந்தக் காட்டெருமைகளும் திபெத்திய சமூக கலாசாரத்துடன் பின்னிப்பிணைக்கப்பட்டவை. மட்டக் குதிரைகளின் சரித்திரமும் இவைகளின் சரித்திரமும் ஓரளவு சமமானவை. ஆனால் காட்டெருமைகள் திபெத்திய பௌத்த மதத்துடன் பெருமளவு இணைக்கப்பட்டவை. சமயாசார நிகழ்வுகளில் பலி கொடுப்பதற்கும் இவை பயன்படுவன.

திபெத்திய வருமானமும் பெருமளவு இந்தப் பிராணிகளில் தங்கியிருப்பதால் காட்டெருமை வளர்ப்பு பலவாறு ஊக்கப்படுத்தப்படுகிறது.



*சுமையுடன் காட்டெருமைகள்*

இவற்றின் எடை ஆயிரம் கிலோகிராம் வரையும், நீளம் இரண்டரை முதல் மூன்றரை மீற்றர் வரையும் உள்ளன. அடர்ந்த ஜடைகள் போன்ற உரோமத்தின் நிறம் வெள்ளை முதல் கருமைவரை வேறுபடும். சிறிய காதுகளும் அகன்ற நெற்றியையும் உடையவை. ஐம்பது முதல் நூறு சென்றிமீற்றர் வரை கொம்புகள் கம்பீரமாக ஓங்கி வளர்ந்திருக்கும். குறைந்த பெறுமானமுள்ள, ஆனால், பெருமளவு அளவில் உண்ணக்கூடிய சக்தியிருப்பதால், அவற்றின் இரைப்பைகள் பெரிதாக அமைந்துள்ளன. உழுவதற்கு பெரிதும் உபயோகிக்க இவற்றின் உடல் நன்றாக இடங்கொடுக்கும்.

இவற்றின் நுரையீரலும் இருதயமும் பெரிதானவை. பிராணவாயுவைப் பெருமளவு உபயோகிக்கக்கூடிய தன்மையை உடைய மனித சிசுக்களின் ஹீமொக்லோபினை (Foetal haemoglobin) ஒத்த இரத்த அமைப்பு உள்ளதால், இந்தக் காட்டெருமைகள் அதிஉயரமான வலையங்களில் வசிக்கும் சக்தி பெற்றுள்ளன. எனவே தாழ்ந்த பிரதேசங்களில் இவை உயிர் பிழைப்பது கடினம்.

காட்டெருமைகளின் இரத்தம் அதிமிக ஊட்டச் சத்துள்ளதால், பலவீனமான மனிதருக்கு தேவையானபோது ஊட்டப்படும். உண்பதற்குமட்டும் அல்லாது இந்த எருமையின் இறைச்சி சமயாசார வழக்கப்படி ஆன்மீக வளர்ச்சிக்கும் பல விதங்களில் உபயோகிப்பர். காட்டெருமைகளின் பால் – விசேஷமான திபெத்திய தேநீர் கலப்பது உட்பட – திபெத்தியரால் பெருமளவு உபயோகிக்கப்படுகிறது. இதன் கொழுப்பு பல்வேறு விதமான உபயோகங்களுள்ளது. குளிர் மிகுந்த திபெத்தில் அவர்களது சருமங்களுக்கு சக்திகொடுக்கும் வண்ணம் உடம்பில் பூசப்படும். திபெத்தியரின் ஒருவித வாசனைக்கும் இது காரணமாகலாம்.

ஹிந்துக்கள் ஹோமத்துக்கு நெய் உபயோகிப்பதுபோல, இந்த எருமைகளின் நெய்யும் திபெத்திய பௌத்த சமயக் கிரியைகளில் உபயோகப்படுத்தப்படும்.

இவற்றின் கொம்புகள் ஆபரணம் தயாரிக்கவும், முக்கிய இடங்களில் தீய சக்திகளை விரட்டியடிப்பதன் நோக்கமாக வைக்கவும் உபயோகிப்பர். காட்டெருமையின் சாணம் – இந்திய கலாசாரம்போல – விராட்டி இட்டு – எரிபொருளாகவும் உபயோகிக்கப்படும்.

கைலை தென்முக தரிசன அனுபவத்தைக்கொண்டு பதட்டத்துடனிருந்த எனக்கு இந்த உதவியாளரும் குதிரைப் பாகனும் எப்படியோ என்ற பீதியும் உள்ளூர உறுத்திக்கொண்டே இருந்தது. முக்கியமாக, வலம்வருதல் நான்கு நாள் – அதுவும் அதிமிகக் கடுமையான ஏற்றங்கள் பல கடந்து செல்லவேண்டும். அதிமிக உயரமான "டோலமா லா பாஸ்" (Dolama La Pass) எனும் பிராணவாயுச் செறிவு அதிமிகக் குறைவான உயர்ந்த மலையூடாக ஏற வேண்டும்.

சீதோஷ்ண நிலவரமும் பலவாறாக – அதிமிக நடுக்கம் கொண்ட குளிர் முதல் பெருஞ்சூட்டுடன் கூடிய வெய்யில் – இவ்வாறாக வேறுபடும். இவற்றிற்கெல்லாம் தகுந்தாற்போல எம்மைத் தயார்படுத்துவது மட்டுமன்றி அவ்வப்போது தேவைகளை ஏற்றவாறு நிவர்த்திசெய்யவும் வேண்டுமல்லவா? இவை எல்லாம் நலமே நிறைவுற, கண்கண்ட தெய்வமாம் கைலாசநாதன் கருணையை வேண்டி நிற்பதைத் தவிர வேறெதுவும் தோன்றவில்லை.



**சமயக்கிரியைக்குரிய எருமைக்கொம்பினூடாகக் கைலை**



கைலை வெளிப் பிரகார வலம் ஆரம்பம்.
பின்னே தெரிவது கொடிஸ்தம்பமும் யமத்வாரும்

ஏறக்குறைய இரண்டரை மணி நேரத்தின் பின்னர் எல்லா உதவியாளரும், மட்டக்குதிரைகளும், ஷேர்ப்பாக்களும், சுமைகளுடன் கூடிய காட்டெருமைகளும் சரியென திடமாக நிச்சயஞ்செய்ததும் கைலை பாலா பிரார்த்தனைகளை ஆரம்பித்தார். தொடர்ந்து, எமது குழு அறுபதுக்கு மேற்பட்டோரதும் "ஓம் நமசிவாய" என்ற கோஷம் வானைப் பிளக்க கைலாசநாதனின் வெளி வீதி யாத்திரை ஆரம்பமாகியது.

## Kailash: A Spiritual Journey

## OUTER PARIKRAMA BEGINS

With the memory of my maiden Dharshan of Holy Kailash and the spiritual demise of a good member and friend of our group, we began the following day with preparations for the next and longest and hardest trek. A day with no trekking was well appreciated. Rearranging our needs for the circumambulation into one duffle bag for two of us, for this trek was an effort, as almost everyone was wondering what more to leave at the hotel in Dharchan and get all the needs for two including the weather related dresses and other essential items for the following three nights of the circumambulation of the outer circle.

Getting into our routines, at this point of our pilgrimage, was a nightmare. Cold wind and rain added to our plight. However, having our purpose of this pilgrimage in mind, we worked together to get the best way to organise ourselves. Also, these had to be organised before the lights go off at about 8pm (a daily limit for electricity supply). There was one small studio with computer and telephone facilities but all were in Chinese language and they did not mean anything to me. However, with my little experience with computer I managed to log on to my e-mails. Fortunately, the telephone connection too was available at times, and I manged to communicate with my family in London!

The Sherpas helped to arrange porter and pony for the long circumambulation with payment of 1,260 Yuans – only

currency accepted. It was also strongly advised to carry necessary outfits suitable for all weather conditions, especially rain and sleet at the highest point of the trek, Dolama Pass.

The slow walkers, including myself, commenced their coach journey to Taboche (the base meeting centre for all pilgrims for the 16 km circumambulation) about 6am on the following morning. Some active walkers chose to walk to Tarboche.

Tarboche is a spiritual centre especially for Tibetan Buddhists who celebrate the unique festival called Saga Dawa, when thousands of spiritual flags decorate this area. This was where sage Sakya attained enlightenment.

Yama Dwar (Gates of Lord of Death) is situated here. Yama is the deity who brings mortal souls to their onward journey.

# கைலாசம் வலம்

## முதல் நாள்

## லாதூ பள்ளத்தாக்கு காட்சிகள், ஹயக்ரீவா கல், வடமுகம்

**ஜூலை 23:**

"தர்போச்சே" (Tarboche) கொடிஸ்தம்பத்துக்கு அருகாமையிலிருப்பதே யமத்வார். கைலை யாத்திரை செல்லுமுன்னர் காலனின் தரிசனம்பெற்று விடைபெற வேண்டும். அவ்வாறே இந்தக் கிரியையைப் பக்தியுடன் யமத்வாரில் மணியடித்து நிறைவுசெய்த பின்னர் புத்துயிர் பெற்ற உணர்வுடன் கைலாசநாதனை வலம்வர ஆரம்பித்தோம். (யமத்வார் = யம மகாராஜாவின் நுழைவாயில்)



கடுங்குளிரில் காலனுக்குக் கரங்கூப்பிய வணக்கம்



காலனின் கண்டாமணி

மார்கண்டேயரை சிவனார் யமனிடமிருந்து மரணத்தினின்று காப்பாற்றிய சம்பவம் எனது நினைவுகளில் ஓடிக்கொண்டிருந்தது. இந்த ஸ்தலத்தில் யமனை வழிபட்டுச் செல்லுதல் மரண பயத்தை வெட்டிவிடும் என்பது நம்பிக்கை.

நடந்துசெல்வதற்கு உடலாரோக்கியம் திருப்தியாகப்பட்டது. எனினும் அமர்த்தப்பட்ட குதிரையில் ஏற ஆவலும் மேலிட்டது.ஆரம்பத்தில் குதிரையில் ஏற ஆவலாயிருப்பினும் உள்ளூர ஒரு பயம் உறுத்திக்கொண்டேயிருந்தது. சற்று தூரம்வரை நடந்துசென்று ஒரு உயரமான கற்பாறை மீது ஏறித்தான், பின்னர் குதிரையின் மேலே – மனதிற் தோன்றிய துணிச்சலுடன் குதிரைக்காரர் "நிம்மா"வின் உதவிகொண்டு பரிமீது பாய்ந்தேறினேன். ஏறியபின், சவாரியின் சந்தோஷம் அபாரம்.

"டோன்னா"வின் வசம் முதுகிற் கொண்டுசெல்லும் சிறு சுமை கொடுக்கப்பட்டது. நல்ல அமைதியான மகள். பாஷை தெரியாவிட்டாலும், சைகைகள் மூலம் – குதிரைக்காரர் நிம்மா போல – எந்நேரமும் உதவிக்கரங்கள் கொடுக்கத் தயாராயிருந்தமை பெரும் ஆறுதல் அளித்தது.

எமக்கு வலது பக்கத்தில் ஓங்கி கம்பீரமாக வீற்றிருந்த பெருமலையில் திபெத்தியர் பூதவுடல்களை இறைவனுக்குச் சமர்ப்பிப்பதாக திறந்தபடியே விட்டுவிடுவாராம். இந்த உடல்கள் காட்டு நாய்களுக்கும் பறவைகளுக்கும் இரையாகும். எனவே, இப்பகுதியிலுள்ள நாய்கள் மனித இறைச்சிக்குப் பழகியபடியால், இவற்றை அணுகுவது ஆபத்தானது என அறிவுறுத்தப்பட்டிருந்தது.



திபெத்தியர் மனித ஆவி பிரிந்தபின் உடல்களைச் சமர்ப்பிப்பதில் பல்லாயிர வருடக்கணக்கான இந்தியப் பாரம்பரிய கலாசாரத்தை தொடர்ந்து பேணுகின்றனர்.



போகும் வழியெல்லாம் ஓங்கிவளர்ந்த மலைத்தொடர் – கண் கவர் காட்சி



கைலையின் மேற்கு தரிசனம்

"டிரப்புக் கொம்பா" (Dirapuk Gompa) மடாலயத்தை நோக்கிய மொத்தமாக ஏழு மணி நேர யாத்திரை பதினைந்து கிலோமீற்றர் தூரமானது.



லா சூ பள்ளத்தாக்கிலிருந்து
நந்தியும் கைலையின் வடமுகமும்





நாம் தரிசிப்பது வலம் ›››››  திபெத்தியர் தரிசிப்பது இடம்

எமது யாத்திரை "லா சூ" (Lha Chu) எனும் பள்ளத்தாக்கு வழியாகவே ஆரம்பிக்கும். இந்தப் பள்ளத்தாக்கில் பல்வகைக் கற்பாறைகள் இருபக்கங்களிலும் அதிகம்பீரமாக ஓங்கிநிற்கும் மலைத்தொடர்கள், அவற்றிலிருந்து கொட்டும் தெளிந்த நீர் கொண்ட அருவிகள், அனைத்தும் இயற்கை அன்னையின் பெரும் கொடைகளை எண்ணி திகைக்கவைத்தன. இம்மலைகளும் கற்பாறைகளும் பல்வேறு நிறங்களைக் கொண்டுள்ளன. அனைத்தும் பார்ப்பதற்கு அதிசயிக்கத்தகு பல வர்ணக் காட்சிகளாகும். இதன்போது நாம் பார்த்த திபெத்திய – பொன் [Bon] சமயிகள், யாத்திரீகரின் எதிர்ப்புறமாக வீதி சுற்றும் வழமை அதிசயிக்கவைத்தது. அதுதான் அவர்களது சமயாசாரப்படியுள்ள வழமையாம். நம்பிக்கைகள் பல

ஒத்திருப்பினும் வேறுபாடுகள் பல இருப்பதும் எம்பிரானின் பிரமிக்கத்தகு பெருமையன்றோ!

சூரியபகவான் பலமாக ஒளிவீசியபடி எம்மை வழியனுப்பினார். ஆனாலும் இது அதிக நேரம் நீடிக்கவில்லை. சடுதியாக வந்த பெரும் காற்றும் ஆலங்கட்டி மழையும் அனைவரையும் ஒரு உலுக்கு உலுக்கிவிட்டது. குதிரை வெருட்சிகொண்டு குதிக்கக்கூடிய சான்றுகள் தென்பட்டதால், இறங்கியே நடக்க "ஆணை" இட்டார் நிம்மா. பெய்த மழையைவிடக் கற்களையொத்த பனிக்கட்டிகள் திகிலடையச் செய்துவிட்டன. இம்மாதிரியான சடுதியான காலநிலை மாற்றங்கள் அங்குள்ளவர்களுக்குச் சர்வசாதாரணம்.

அதிர்ஷ்டவசமாக இந்த ஆலங்கட்டி மழையும் சுழற் காற்றும் பத்து நிமிடங்களுக்குமேல் நீடிக்கவில்லை. இது நல்ல சகுனத்துக்கு அறிகுறி எனவும் அறிந்தேன்.

ஐந்து கிலோமீற்றர் வந்ததும் சுகு கொம்பா (Chuku Gompa) எனும் மாடாலயம் தோன்றியது. இந்த மடாலயம் பெரும் தொன்மை வாய்ந்தது. ஞானி மிலரீபா இங்கு நிஷ்டையிலிருந்தார். வேறும் பல ஞானியரால் இந்த மடாலயம் பெருமைபெற்றது. சீனாவில் கலாசாரப் புரட்சியால் இந்த மடாலயம் பெரிதும் பாதிக்கப்பட்டது. பின்னர் சீன அரசாங்கமே கட்டடங்களைப் புதிப்பித்தது.



சுகு மடாலயம்



பிரமபுத்ரா நதி

செல்லும் வழியெல்லாம் இருபக்கங்களிலும் மலைகள், இடையே நீரோட்டங்கள் (பிரமபுத்திரா நதி உட்பட), பரந்த வானவெளி - அனைத்தையும் ரசித்தவாறே இறைவனின் படைப்புகளை மெச்சிமெச்சி யாத்திரையைத் தொடர்ந்தோம்.




கைலை வெளிவீதியில் வீற்றிருக்கும் புத்த மடாலயங்கள்



மதிய போஜன சிற்றுண்டிச்சாலை



பிரார்த்தனைக் கொடிகளுடன் "ஹயக்ரீவா கல்"

மதிய போஜனத்துக்காக இந்த மடாலயத்துக்கு அண்மையிலுள்ள சிற்றுண்டிச்சாலையில் சிறிது நேரம் தங்க நேரிட்டது. அதன்போது, பக்கத்தில் ஒரு அறிவித்தற்குறியைக் கண்டேன். அதில் எழுதப்பட்டிருந்தது "ஹயக்ரீவ கற்பலகை" – என்னே அதிசயம். ஹயக்ரிவா என்பது குதிரை முகங்கொண்ட விஷ்ணுவின் அவதாரம். இந்திய பாரம்பரியத்தில் ஹயக்ரீவர் அறிவுக்குள்ள தெய்வமாகக் கருதப்படுவார். இத்தனை

ஆயிரம் கிலோமீற்றர்களுக்கப்பால் உள்ள இக் கலாசார இணைப்பு பெருமளவு விமர்சிக்கத் தக்கதே.





கைலாசநாதனின் மேற்கு முகம் (சத்யோஜாதம்)

கைலாசநாதரின் மேற்கு முகம் (சத்யோஜாதம்) தெற்கு, வடக்கு முகங்களைப்போல அடிக்கடி தோன்றுவதில்லை. கைலையின் இந்த நிலை மிகவும் பிரமிக்கத்தக்கதொரு கண்கொள்ளாக் காட்சியாகும். "டிரபுக்" மடாலயத்தை நோக்கிய பாதையில் ஏறத்தாழ பாதித் தூரத்திலேயே இக்காட்சி தோன்றும்.





கைலாசநாதரின் வடக்கு வதனம் – வடிவழகு

தொடர்ந்து, பல்வேறு ஏற்ற இறக்கங்கள் கடந்து மாலை ஆறரை மணியளவில் டிரபுக் விடுதியை அடைந்தோம். அந்தநேரம், கைலை நாதனின் வடமுகம் முகிற்கூட்டங்கள் அங்குமிங்கும் அசைந்தாலும், தெட்டத்தெளிவாகத் தோன்றியது. அந்த அருமையான காட்சி மறக்கமுடியாததொன்றாகும். அடிக்கடி முகிற்கூட்டங்கள் தோன்றித்தோன்றி மறைவதும் கைலைநாதரின் வடமுகம் - பல்வேறு வர்ணங்களில் பிரகாசிப்பது - யாரோ ஒருவர் சினிமாத் திரையின் பின்னாலிருந்து இயக்குவது போன்றிருந்தது. சிலசமயம் பெருமானின் ஜடாமுடியிலிருக்கும் நாகமும் தோன்றக் காணலாம் (கற்பனையோ?).

எமக்குக் கிடைத்த யாத்திரீகர் (டிரபுக்) விடுதியின் பின்னால், உயரத்தில் பெரியதொரு மடாலயம். இது கடல்மட்டத்திலிருந்து 4,890 மீற்றர் உயரத்திலுள்ளது. இத்தனை ஏற்றத்தின் பின்னர் உடற் களைப்பால் யாருக்கும் அச்சமயத்தில் மேலும் ஏறி மடாலயத்தைத் தரிசிக்க இணக்கமில்லை.

எம்முடன் வந்த உதவியாளர் அனைவரும் விரைவாக எமக்கு இராப் போஜனம் தயாரிக்க ஆரம்பித்துவிட்டனர். அத்தனை விரைவில் தயாரிக்கப்பட்ட மிளகுப் பொங்கலும் ஊறுகாயும் தேவாமிர்தம் போலிருந்தது.

அறுவருக்கு ஒரு அறையாக அடுக்கப்பட்டிருந்த விடுதி அண்மையிலேதான் புதிப்பிக்கப்பட்டதாம். முன்னரில்லாதவாறு சிறியதொரு சமையலறையும் சிற்றுண்டிச்சாலையும் இருந்தன.

குளிரின் தாக்கமோ பெருமளவு, சக யாத்திரீகர் எவ்வளவு விரைவில் குளிருடைகளைச் சுருட்டி அணிந்தார்கள் என்ப திலிருந்து குளிரின் தாக்கத்தை இலகுவாகக் காணக்கூடியதா யிருந்தது.

இரவு நெருங்கியது. மின்விளக்குகள் தமது அன்றைய கடமைகளை முடித்துக் கொண்டுவிட்டன. யாவரும் ஒவ்வொருவராக, உடுத்திருந்த குளிருடைகளுடன் படுக்கைகளில் சுருண்டனர்.

## Kailash: A Spiritual Journey

## OUTER PARIKRAMA – DAY 1

On the arrival at Tarboche (23 July 2013), we saw a huge gathering of porters, Yaks, ponies with brokers to allocate for those requested relevant help. There was a continuous commotion among the Tibetan pony owners, porters and Yak owners to get their business. They were done by lottery allocation and this process took almost an hour and a half before we commenced our trek.

Our first stop was at the temple of Yama (Yamadwar) a few kilometres from the Tarboche meeting point. A prayer at Yamadwar with circumambulation of the temple gives confidence, longevity and safe trek around outer circle of Holy Kailash. It was only after this point I had to get on to the pony that was waiting with its owner and a porter.

Gigantic mountain ranges, waterfalls and small rivers all along the trek were very thrilling. No sooner had we commenced trekking, the very warm weather with chilly breeze suddenly turned into heavy rain with thunder storms and heavy sleets – that lasted only a few minutes before it reverted to warm sunny spells – a usual occurrence in Tibet. The up and down rocky trek with streams of water at intervals, was quite challenging for all those joined the Yatra.

I was very surprised to observe the number of Tibetan Bon Buddhists circumambulation in the opposite direction – prostrating regularly at each step!

We passed an important Tibetan monastery - Dirapuk Gompa – that was hugely damaged during the Chinese invasion and renovated later. The saint Mileripa was said to be meditating at this monastery.

I was fortunate to view the west face of Holy Kailash called "Sathyojatham" - a rare view because of the unpredictable changing weather conditions.

It was almost half past six when we reached our next camp Dirapuk, just behind a beautiful monastery called Dirapuk Gompa.

Every member of our group was so tired and rolled into our beds soon after having our hot dinner prepared by the efficient Sherpas.

# கைலை வலம் & வடமுகம்

## கைலையின் வடமுகம் - டிரப்புக் மடாலயம்

**ஜூலை 24:**

கூடாரத்தில் குளிரோ கடுமை. காலை எழுந்திருத்தல் அவ்வளவு சுலபமாகப்படவில்லை. கைலைநாதனின் தரிசனம் காண இந்த இடுக்கண்களெல்லாம் தூசுதானே. காலைக்கடன்கள் இயற்கை அன்னையின் மடியிற்றான். பல இடங்களில் இவ்வாறே எம்மை திருப்திப்படுத்திக் கொள்ளலாம். முகம் கழுவுதற்கு சற்று சூடாக்கப்பட்ட நீர் ஒரு குவளையில் கிடைக்கும். ஏனைய யாத்திரீகர்களின் வசதிகளை ஊகித்து உணர்ந்து அளவாகத்தான் இவ்வரிய நீரை நுகரல் அவசியம்.



**ஆவலுடன் காத்திருந்த கைலைநாதனின் வடமுக தரிசனம் கண்டேன்**

இவையெல்லாம் ஒருவாறு நிறைவுசெய்து காலை ஒன்பதரை மணியளவில் எம்பிரானின் (கைலை மலையின்) வடக்குமுக தரிசனத்துக்குப் புறப்பட்டோம்.



வட முக தரிசன ஆரம்பம்



இரு நதிகளைக் கடத்தல்



இயற்கை அன்னையின் படைப்புகள்

சூரிய பகவானின் கருணை நன்கு பூரித்திருந்தது. மலையேறும் இயல்புக்குத்தக யாவரும் சிறு சிறு குழுக்களாக – நேபாள உதவியாளர் உதவியுடன் புறப்பட்டோம். கற்பாறைகளும், சிறுசெடிகளும் நிறைந்த ஏற்றம்.

பலவகையான கற்களும் சிறு தாவரங்களும் தத்தம் அழகை அபாரமாக வழங்கிய வண்ணம் இருத்தல் – அவற்றை நாமும் இரசிக்க வைத்தல் – யாவும் கைலைநாதனின் அருட்பெரும் கருணையன்றோ!

முக்கால் வழி தூரம் சென்றதும் பிரார்த்தனைக் கொடியொன்று, அதனைச் சுற்றிலும் பெரும் பாறைக் கற்கள். பிரார்த்தனை மேடைபோன்று அதன் பக்கத்தே தோன்ற – அமர்ந்திருந்து தியானத்திலமர்ந்தேன். அந்த அமைதியான சூழல் யாருக்குமே ஒரு மன அமைதியையும் ஆனந்தத்தையும் அளிக்க வல்லது.

எமக்கு முன்னர் மலை மேலேறிய சக யாத்திரீகர்கள் திடீரென மலைமீதிருந்து கீழே இறங்கி வந்துகொண்டிருப்பதை

அவதானித்தோம். சுவாத்திய நிலை சுமுகமானதாயில்லை எனவும், மேற்கொண்டு தொடர்தல் உகந்ததல்ல எனவும் நேபாள உதவியாளர் கூறினும் எமது அவா தொடர்ந்தது.

மெல்லமெல்ல ஏறிச்செல்கையில் திடீரென முகிற்கூட்டம் சூழ்ந்தது. "வந்தனை செய்தாகிவிட்டதல்லா... இனித் திரும்பலாமே" எனக் கூறுவதுபோல வருண பகவான் தனது தோற்றத்தை அருளிச்செய்தார். எமக்கோ எதுவும் போராதே ... சற்றுப் பொறுத்திருந்து பார்ப்போம் என்றால்... இறைவனே பன்னீர் தெளித்து வாழ்த்தி வரமளிப்பதுபோன்ற பிரமை ஏற்பட்டது. ஐயனது **ஸ்வஸ்திகா குறி** நன்கு தோன்ற பரவசம் மேலிடவும் – அக்காட்சியைக் கண்ணாரக் கண்டு மனதார வணங்கி – போதவில்லையே இந்தப் பேதை மனதுக்கு – என அங்கலாயத்து – என்றாலும் உள்ளூர ஒரு திருப்தியுடன் – மலையிலிருந்து இறங்க ஆரம்பித்தோம்.

**ஸ்வஸ்திகா** எனும் சமஸ்கிருதச் சொல் இந்திய பாரம்பரியத்தில் முக்கியமானதொரு அடையாளம். நல்ல சகுனம் – நன்மைக்கு அறிகுறி – அதிர்ஷ்டம் – சௌந்தர்யம் – இத்தியாதி அர்த்தங்களைக் கொண்டது.

'சு' (மங்களகரம் என பொருள் தரும்) மற்றும் 'அஸ்தி' இருக்கும் என பொருள் தரும்) இரு சொற்களையும் இணைப்பின் மங்களகரம் உடனிருக்கும் எனப் பொருள்படும்.

இரண்டாம் உலகப்போரில் அசுர சக்தியாக விளங்கிய ஹிட்லர் பல நாடுகளுக்கும் சிம்ம சொப்பனமாக இருந்தான். அவனது கொடியில் ஸ்வஸ்திகா தவறான முறையில் பொறிக்கப்பட்டிருந்தது. முடிவில் அவன் வீழ்ச்சியையே அடைந்தான்; தற்கொலை செய்துகொண்டான்.

இந்துக்களின் நலச் சின்னமாகவும் புனித அடையாளக் குறியீடாகவும் காலமெல்லாம் விளங்கி வருவது ஸ்வஸ்திகா. கோவில்களில் தவறாமல் இடம் பெறும் சின்னமும் இதுவே. இதில் இரு வகை உண்டு. வலப்பக்க சுழற்சி உடைய ஸ்வஸ்திகா தைவிக் ஸ்வஸ்திகா என்று குறிப்பிடப்பட்டு நல்லனவற்றைத் தரும் அடையாளமாகச் சொல்லப்படுகிறது. இதையே இந்து ஆலயங்களில் காணலாம், கைலையில் தோன்றியதும் இதையொட்டியே இருக்கக் கண்டேன். ஆனால் ஜேர்மன் சர்வாதிகாரியோ (ஹிட்லர்) ஸ்வஸ்திகாவின் சுழற்சியை இடப்பக்கமாக மாற்றி அதை 45 பாகை கோணத்தில்

வேறு வளைத்து தீமையைத் தரும் ஆசுரிக் ஸ்வஸ்திகாவைத் தேர்ந்தெடுத்தான். விளைவு, அசுர வேகத்தில் முன்னேறிய அவன் அதலபாதாளத்தில் வீழ்ந்தான்




பண்டைய ரோமில் பாதாளக் கல்லறைகளிலும் இந்த ஸ்வஸ்திகா சின்னம் பொறிக்கப்பட்டிருப்பது ஒரு அதிசய செய்தி. திபெத்திய சுவடிகள், குகைகள் மற்றும் ஆலயங்களிலும் ஸ்வஸ்திகா இடம்பெற்றுள்ளது. ஸ்வஸ்திகா வரையப்பட்டிருக்கும் இடத்தில் செல்வமும், வளமையும் குடிகொண்டிருக்கும் என நம்பப்படுகிறது. சுற்றுப்புறத்தில் உள்ள எதிர்மறை ஆற்றல்களை ஸ்வஸ்திகா அழிக்கும் எனக் கூறப்படுகிறது. வாஸ்து சாஸ்திரத்தின்படி, ஸ்வஸ்திகா என்பது ஒரு வீட்டில் இருக்க வேண்டிய நல்ல சின்னமாம். அதிர்ஷ்டத்தையும், வளத்தையும் கொண்டு வரும் என்ற நம்பிக்கையுண்டு. ஜெயின் மதத்தினரும் ஸ்வஸ்திகாவை நல்ல அதிர்ஷ்டத்தை தரும் சின்னமாக கருதுகின்றனர். ஜெயின் மதத்தை சேர்ந்த 24 தீர்த்தன்கராக்களும் ஸ்வஸ்திகாவை தங்களின் சின்னமாக வைத்துள்ளனர். முக்கியத்துவம் பழங்காலத்தில் இருந்தே ஸ்வஸ்திகா என்பது வளத்தை கொண்டுவரும் சின்னமாக பார்க்கப்படுகிறது. சொல்லப்போனால் உங்கள் வீட்டில் ஏதேனும் வாஸ்து தோஷம் இருந்தால், தலைவாசல் கதவின் இரண்டு பக்கமும் இரண்டு ஸ்வஸ்திகா பிரமிட்டுகளை வைத்தால் அந்த தோஷம் நீங்குமாம். பணப்பெட்டகம் மற்றும் வணிக கணக்கு புத்தகங்களிலும் இந்த ஸ்வஸ்திகா சின்னத்தை வரைந்திருந்தால் அது அதிக பொன்னையும் பொருளையும் ஈட்டி தரும். அதனால், ஸ்வஸ்திகா என்பது இந்து மதத்தில்

மட்டுமல்லாது மற்ற பண்பாடுகளிலும் முக்கிய சின்னமாக திகழ்கிறது. (ஆதாரம்: மின் வலையம்)



**ஈசனின் வடமுகப்பில் ஸ்வஸ்திகா**

ஒன்றரை மணியளவில் விடுதிக்குத் திரும்பினோம். மதிய உணவு தயாராகியது. சிறிதளவு வயிற்றுக்கு வழங்கி இளைப்பாறினோம்.

மாலை நாலரை மணியளவில் எமது விடுதிக்குப் பின்னாலிருந்த "டிரபுக்" மடாலயத்தைத் தரிசிக்க ஏறினோம்.

"டிரபுக்" மடாலயம் கடல் மட்டத்திலிருந்து 4,890 மீற்றருக்குமேலுள்ளது. "டிர" என்பது பெண் காட்டெருமையின்



**டிரபுக் கொம்பா ... கீழே புதிய இந்திய கலாசார நிறுவனம் ஆக்கும் அகம்**

கொம்புகளையும் "புக்" என்பது குகையையும் குறிக்கும். எனவே இந்த மடாலயமும், கைலையின் வெளி பரிக்ரமா (வீதி) வில் அமைந்துள்ள ஏனைய மடாலயங்களைப் போன்று பெரும் சமய முக்கியத்துவம் வாய்ந்தது. மாபெரும் பௌத்த ஞானியர் இவ்விடங்களிலெல்லாம் தவம் புரிந்தனர் எனவும் அறியப்படுகிறது.

நாங்கள் மடாலயத்துள் சென்றபோது அகண்ட பிரார்த்தனை நடைபெற்றுக்கொண்டிருந்தது. எமக்குப் பழக்கமான இந்துக் கோவில்களில் நடைபெறும் பூஜையை ஒத்திருப்பதையும் அவதானிக்கமுடிந்தது.

பல்வேறு பௌத்த – இந்திய கலாசாரத்தையொத்த சிலைகளும் வர்ணங்கள் தீட்டிய இறைவடிவங்களும் உள்ளத்தில் பக்தியை வரவளைத்து, கண்களுக்கு அரியதொரு காட்சியும் கொடுப்பனவாயிருந்தன. மடாலயத்தின் அமைப்பு சற்றே விசித்திரமாக இருந்தது. புராதன சிற்பங்கள் நன்றாக அடுக்கப்பட்டு, பிரார்த்தனைக்கு வைக்கப்பட்டிருந்ததன. பௌத்த லாமாக்கள் (குருக்கள்) உட்கார்ந்திருந்து மந்திரங்கள் ஓதும்போது இந்திய கலாசாரப் பண்பாட்டையே பிரதிபலிப்பதாக எனக்குத் தோன்றியது.

முதிய பௌத்த குரு (லாமா) நீண்டதொரு வரிசையில் நின்றுகொண்டிருந்த பக்தர்களுக்கு ஆசீர்வாதம் கூறி பிரசாதம் வழங்கிக் கொண்டிருந்தார். நாமும் அதில் கலந்து ஆசியுரையும், அத்தோடு அவர்கள் வழமையாக வழங்கும் விசேஷ பட்டுச் சால்வையும் எமக்கு அணிவித்தார். "ஓம் நம் ப்ரேம் – மணி பத்மே ஹூம்" எனும் மணி மந்திரத்தையும் ஓதும்படி தாமும் ஓதி ஆசீர்வதித்தார். அத்தோடு இந்து வழக்கப்படி கொடுக்கப்படும் "பவித்திரம்" போன்ற தடித்த மஞ்சள் நூல் ஒன்றையும் கொடுத்தார். ஐம்பது யுவான்கள் தெக்ஷணையும் வழங்கி விடைபெற்றோம்.

கிராம மக்களுக்கு அறிவுரைகளை மட்டுமன்றி பணம் பொருள் உதவியும் புரிவார். யாவும் தாம் பெற்றுக்கொள்ளும் நன்கொடைகளின் மூலமே இவ்வுதவியை நல்குவார்.

**"ஓம் நம் ப்ரேம் மணி பத்மே ஹூம்"** என்பது பௌத்தத்தின் மிகப் புகழ்பெற்ற மந்திரங்களில் ஒன்றாகும். இதை மணி மந்திரம் எனவும் அழைப்பர். மேலும், இதன் ஆற்றலை அதிகப்படுத்துவதற்காக இந்த மந்திரத்தைத் திபெத்தியர்கள்

பாறைகளில் செதுக்கியும், பிரார்த்தனைச் சக்கரங்களில் எழுதியும் வைக்கின்றனர். ஒவ்வொருமுறை இந்தச் சக்கரத்தைச் சுழற்றும்போதும், அது மந்திரத்தை உச்சரித்ததின் பலனைத் தருகின்றதென நம்பப்படுகிறது.



டிரபுக் கும்பாவில் மிலரீபா தியானம் செய்த குகை



டிரபுக் கும்பா லாமாவுடன்



டிரபுக் (உச்சி) கும்பாவிலிருந்து கைலை வட முகம்

ஆசீர்வாதம் பெற்ற திருப்திடன் கனிஷ்ட லாமாவுடன் ஒரு புகைப்படமும் எடுத்துக்கொண்டோம்.

மிகவும் கஷ்டமுடன் ஏறியபின், திரும்பும்போது கீழே இறங்குவதும் ஒருவித சிரமந்தான். ஆனாலும் இவையெல்லாம் யாத்திரையோடு ஒன்றுகலந்து, மெய்மறக்கச்செய்து - பேரின்பத்துக்குள்ளாக்கும் வல்லமை உடையன என்பது எமது அனுபவத்திற் கண்டோம்.

வழமைபோல சாயந்தரம் வந்ததும் இரவுணவு. பசிக் குறைவினால் சிறிதளவு ரொட்டியும், ஹோர்லிக்ஸ் பானமும் அருந்தியபின், குளிர் மேலீட்டினால் யாவரும் படுக்கைகளுக்குள் பதுங்கினோம்.

## Kailash: A Spiritual Journey

## OUTER PARIKRAMA – NORTH FACE & DIRAPUK MONASTERY

The extremely cold morning of July 24, was quite demanding as all had to leave the rooms for the routine ablutions in the face of mother earth with the only provision of warm water for a face wash and brushing! The promise of the vision of the north face of Holy Kailash negated all the impediments.

We commenced our trek to the base of North face by 9.30 am with the sun shine giving a clear vision of the north face of Holy Kailash – that kept in my mind deep enough to remember to this date.

Within about 45 minutes of our rough trek over huge rocks and streams from the waterfalls, our mini group made a halt around a centre with raised colourful flags. This is presumably a centre of routine meditation for Kailash pilgrims. I had the opportunity for a few minutes of meditation at this point, facing the north face with the naturally formed Swastika that decorates the north face at all times.

The group that went ahead of us to reach the base of north face were returning and it started raining with dark clouds. In view of the changing weather, on the advice of our Sherpa, the whole group, after having a closer view of north face of Holy Kailash, the whole group had to descend to our camp / hotel (as was called!).

Following a brief resting period, I joined a small number of our group to visit the Dirapuk monastery that was at an elevation just behind the camp where we stayed.

I understood that the attractive and well maintained monastery served the local population with moral and material support in exchange for services they offer. I had the rare opportunity of getting the blessings from the Chief Lama of the monastery.

In spite of the trek and other activities during the day, my appetite level was quite low and only had small sized bread before retiring to bed.

# கைலை வலம்: டோலாமா–லா கடவை, கௌரி குண்டம்

பாத யாத்திரை, கௌரி குண்டம், ஜுதுல் புக்

ஜூலை 25:

யாத்திரை ஆரம்பமாகி பதின்மூன்றாவது நாள் இன்றைய தினமே நீண்ட தூர அதி கடுமையான ஆழ்ந்த பக்தி பரவசமிகு யாத்திரை நாளாகும்.

அதிகாலை எழுந்து தினசரி கடமைகளை முடித்ததும் யாவரும் யாத்திரைக்குத் தயாரானோம்.

தயாரான யாத்திரீகர் சிறு சிறு குழுக்களாகப் புறப்பட்டு மலை ஏற்றத்துக்குத் தயாராகிச் சென்றனர்.

காத்திருக்கும் வேளை, முகிற்கூட்டங்களால் மறைக்கப் பட்டிருந்த கைலைநாதனின் நிழலை புகைப்படக் கருவியில் பதிக்க முனைந்தேன். கைலை பாலாவின் நிழற்படக்



கருவியில் படத்ததைப் பார்த்ததும் அதிசய உருவம் – நம்பமுடியவில்லை!!!

கைலைநாதன் அடியார்களை ஆசீர்வதிப்பது போன்றவாறு தோன்றியது.

**"ஓம் நமசிவாய"** எனும் கோஷத்துடன் நடக்க ஆரம்பித்தோம். சிறிதுதூரம் சென்றதும் ஒரு சிற்றாறு அதைக் கடந்துதான் குதிரைகள் யாத்திரீகரை ஏற்றிச்செல்லப் பாதுகாப்பானது என்ற அறிவுறுத்தலின்பேரில் அவ்விடத்தில் காத்துநின்று பின்னர் யாத்திரையை. ஆரம்பித்தோம்.



ஒவ்வொருவரும் அவரவர் தகைமைக்கு உகந்தவாறு ஏற்ற இறக்கங்களில் யாத்திரையைத் தொடர்ந்தனர். பலவித அமைப்புகளுள்ள கற்கள், கற்பாறைகள் சறுக்கல்மிகு நடைபாதைகள் இத்தியாதி வழியில் குளிர்மிகு மலையேற்றம் தொடர்ந்தது. ஆங்காங்கு அதிமிகு உயரமோ அதிமிகு இறக்கமோ இருக்கும் இடத்து, எமது பாதுகாப்புக் கருதி, குதிரைகளிலிருந்து எம்மை இறக்கிவிடுவர்.



**குதிரையிலிருந்து இறங்கி நடக்கும் யாத்திரீகர்**

இக் குதிரைகள் தமக்கு உகந்தவாறு பாதை இல்லாவிடில் பலவித கோணங்களில் தமது அதிருப்தியைத் தெரிவிக்குங்கால், அதன் மீது உட்கார்ந்திருக்கும் அனுபவமற்ற யாத்திரீகருக்கு பெரும் ஆபத்து. இம்மாதிரி சக யாத்திரீகள் சிலருக்கு பல்வேறு உடற் காயங்கள்/உபாதைகள் ஏற்பட்டன. பயத்தினால் சிலர் குதிரைகளிருந்தும், கடுமையான சிரமமிகு பாதைகளிலும் பாதுகாப்பாக நடக்கவே பிரியப்பட்டனர். இறைசெயலால், எனது யாத்திரையில் அவ்வித அனர்த்தம் ஏதும் இருக்கவில்லை. உதவியாளர் டோன்னாவும் குதிரைக்காரர் நிம்மாவும் மிகவும் நல்ல உதவியாயிருந்தனர்.

நினைவில்நின்ற சம்பவம் ஒன்று: அதிமிகு இறக்கமும் சறுக்கலும் மிகுந்த இடத்தில் என்னை நடந்தே வரும்படி கூறியதால் அவ்வாறே தொடர்ந்தோம். ஆனால், பல காட்டெருமைகளும் குதிரைகளும் கண்டவாறு அங்குமிங்குமாக ஓடத்துவங்கின. அவற்றின் காப்பாளர்களுக்குப் போதும் போதுமென்றாகிவிட்டது. அரைமணி நேரத்துக்கு மேலாக நீடித்த இந்த "நாடகம்" ஒருபக்கம் விநோதமானதாயும், மறுபக்கம் பயங்கரமானதாயும் இருந்தது. குதிரைகளும் காட்டெருமைகளும் அவர்களது நடவடிக்கைகளில் வெவ்வேறுவிதமாக அசைவதும் ஓடுவதும் எமக்கெல்லாம் விநோதமானவைதான்.

போகும் வழியெல்லாம் திபெத்திய யாத்திரீகரின் பிரார்த்தனைச் சின்னங்களுக்கும், அவற்றோடு அண்டிய பிராத்தனைக் கொடிகளுக்கும் குறைவில்லை. முன்னர் குறிப்பிட்டதுபோல எதிர்ப்புறமாக திபெத்திய "பொன்" (Bon) சமயிகள் சைவமுறைப்படி அடியளப்பதுபோலவே இவர்களும் மூன்று தடவை நடந்தபின் தொடர்ந்து சாஷ்டாங்கம் செய்வர்.

இதில் சிறிதளவு வித்தியாசமுண்டு. கைகளுக்கும் முழங்கால்களுக்கும் தடித்த தோல் அல்லது தடித்த துணி கொண்ட பாதுகாப்பு உண்டு. பலர் ஒரேநாளில் தொடர்ந்து இடம் சுற்றுவர். சிலர் அடியளக்காமலே நடந்து யாத்திரையைப் பூர்த்திசெய்வர்.

கற்கள், பாறைகள், சகதிகள் அடர்ந்த மலைகள் பல ஏறி இறங்கி டொல்மா லா கடவையை அணுகினோம் .



நேரம் நடுநிசி பன்னிரண்டு மணியிருக்கும். இதுதான் எமது யாத்திரையிலேயே அதிஉயர்ந்த (கடல் மட்டத்திலிருந்து *18,600* அடி உயரம்) இடமாகும். இதன் அர்த்தம் "கருணைக் கடல்" என்றால் மிகையாகாது. இவ்விடத்திலேதான் பார்வதிதேவி சிவனை நோக்கித் தவமிருந்தாராம். வினைதீர்க்கும் கணபதிக்கு பார்வதிதேவியால் வேழமுகம் அளிக்கப்பட்டதும் இவ்விடத்திற்றான் என்ற கதையைத் தெரியாதோர் அருமை.

"டோல்மா லா" கடவையில் பிராணவாயுச் செறிமை அதிகுறைவு. எனவே, டோலாமா கடவையில் அதிக நேரம் நிற்பது உயிருக்கு ஆபத்தாயுமாகலாம்.



எமது யாத்திரை இறுதியின்போது எமக்குப் பின் வந்த (வேறொரு) இந்தியக்குழுவினரில் ஒருவர் உயிரிழந்ததாகவும் அறிந்தோம்.

குளிரோ கொடுமை. நாம் இவ்விடத்தை அடைந்தபோது பெருங்காற்றுடன் கூடிய மழையும் பனித்துகள்களும் கொட்ட ஆரம்பித்துவிட்டன.

குதிரைகளை எமக்கு முன்னரே ஓட்டிச்சென்றுவிட்டனர். உயரத்தில் ஏறும்போது ஒரு சக யாத்திரீகர் தற்செயலாக தவறிக் கீழே விழுந்துவிட்டார். முன்னெச்சரிக்கையுடன் குதிரையிலிருந்து இறங்கி நடக்காததே காரணமாயிருக்கலாம். காலில் காயமும் சதைநார்களுக்குள் சுளுக்கும் ஏற்பட்டிருந்ததுபோல் தோன்றியது. உடனடிச்சிகிச்சையின் பின்னர் அவர் நடக்க இயலும் தன்மை கொண்டார். இது போன்ற எதிர்பாராத சம்பவங்கள், தடுக்கக் கூடியவையானாலும், ஏற்படுதல் தவிர்க்க முடியாதது.




டொலாமா லா கடவை தொடர்ந்து
கௌரி குண்டம் பாதை ("கூகிள்" வரைபடம்)

மழையைக் கண்டதும் குடைகளும், மழைக் "கோட்டு"களும் தோற்றமளித்தன.

குளிருக்கு நன்கு தடித்த கையுறைகளும் தேவைப்பட்டன. இந்நிலையில் அதிமிகு இறக்கத்திலுள்ள கௌரி குண்டத்துக்கு அண்மித்தல் உசிதமில்லை என எச்சரிக்கப்பட்டோம்.



எனினும், அனுபவம் மிக்க கைலை பாலாவும் ஒருசிலரும் நேபாள ஷேர்ப்பாவும் இறங்கித் தீர்த்தம் எடுத்துக் கொண்டுவந்தனர். சிலநிமிடங்கள் அந்த ஸ்தலத்திலேயே நின்று அமைதியாகப் பிரார்த்தனை செய்தேன்.



இந்த உயரத்திலிருந்து இனிப் பெருமளவு பாரிய இறக்கந்தான். எனினும், அதிமிகு இறக்கமாதலால் மூன்று கிலோமீற்றர்வரை குதிரை இன்றியே நடந்துதான் செல்லவேண்டி யிருந்தது. இந்தப் பயணம் பாரிய இறக்கங்கள் பல மிகுந்தது.

இதனால், அடிக்கடி குதிரைகளும் பிரச்சினை கொடுத்தபடியே சென்றன.



வெய்யிலானாலும் குளிர் கடுமைதான். வழியில், பெருமளவு உறைபனி மிகுந்த பரந்த பிரதேசங்களையும் சந்திக்க நேரிட்டது. இதனால் நடக்கும் பாதை சறுக்கல்கள் மிகுந்தது. கீழ்நோக்கி நடப்பதும் அதிசிரமம். பன்னிரண்டு கிலோமீற்றார்வரை இவ்வாறே பாதை அமைந்திருந்தது

ஒருவாறாக இந்நிலைகளை சமாளித்து, பரந்த சமவெளிக்கு வந்தோம். எஞ்சிய ஐந்து கிலோமீற்றரும் ஓரளவு சமவெளிதான்.

மழை நேரம். ஒரு வெளியில் விடுதிபோன்ற கட்டடங்கள் இருந்தன. சற்றே இளைப்பாறினோம். மதிய உணவு கறிசேர்ந்த சோற்றுக் கட்டுச் சாதமும் ஊறுகாயுடன் பரிமாறினர் ஷேர்ப்பாக்கள். தொடர்ந்தோம் எமது இறுதி நாள் யாத்திரையை.

நான்கு மணியளவில் அழகானதொரு கூடாரத்தினருகே குதிரையை நிறுத்தினார் நிம்மா. அதுதான் அவரது இல்லம் என அறிந்தேன். அதுவும் நிம்மாவின் சைகையால்தான். அங்கு அவருக்கு இல்லக்கிழத்தி சூடான உணவு தயாராக வைத்திருந்தாள். எப்படியோ அவர்களுக்குள் செய்திப் பரிமாற்றம் நிகழ்ந்தது. அவர்களுக்கிடையே தோன்றும் பாசமும் அன்பும் – ஆஹா, ரசித்த வண்ணம் கவனித்திருந்தேன். அவருக்கு சுமாராகப் பதினைந்து வயதுடைய மகளும்,

பத்து வயது மதிக்கக்கூடிய மகனும் இருந்ததனர். திபெத்திய மொழியிற் போலும்... அளவளாவிக்கொண்டேயிருந்தனர். எதுவுமே புரியவில்லை. ஒருமணி நேரமளவில், உடற் களைப்புமிகுதியால், அமைதியாகவே உட்கார்ந்திருந்தேன். ஒரு போத்தல் சுத்தமான குடிக்கும் நீர் கொடுத்தனர். பயணத்தைத் தொடரும் வேளை வந்ததுபோலும். குதிரையை அணுகும்படி சைகை காட்டினார் நிம்மா. குழந்தைகளுக்கு ஆளுக்கு பத்து யுவான்கள் அன்பளிப்பாகக் கொடுத்து அவர்களது நன்றிகள் கலந்த புன்னகைகளை நோக்கியவாறே குதிரையில் ஏறினேன். இப்போதெல்லாம் இவரது குதிரை நன்கு பரிச்சயமாகிவிட்டது. நல்ல சாவகாசமாக உட்கார்ந்து சவாரியைத் தொடர்ந்தேன். நிம்மியோ எதுவித சலிப்பும் காட்டாது கூடவே நடந்தார். டோன்னாவும் அவள் வழியே நடந்தாள். யாத்திரை முழுமையாக நிறைவேறிய அதிபெரும் நிம்மதி. எல்லாம் அந்த மகாதேவன் தந்த கொடையல்லவோ!

இறுதி மூன்று மணி நேரம். முன்போலவே கலையம்சம் மிகு மலை, மடு, நதிகள் நிரம்பிய இயற்கை அன்னையின் அருளாட்சியை ரசித்தவாறே யாத்திரை தொடர்ந்தது. மன திலிருந்த மந்திரங்கள், கீதங்கள், தேவாரங்கள் முதலியவற்றை முணுமுணுத்தவாறே சவாரி, சலிப்பின்றி வளர்ந்தது.



மழையும் தணிந்துவிட்டது.

பதினெட்டுக் கிலோமீற்றர் இறக்கமான தொலைவை 8 மணி நேரத்தில் பூர்த்தியாக்கி, மாலை ஆறு மணியளவில் ஜூதுல் புக் எனும் விடுதியை அடைந்தோம். சீதோஷ்ன நிலையால், ஆவலுடன் காத்திருந்த ஜூதுல்புக் கொம்பா (மடாலய) தரிசனத்துக்குச் செல்லமுடியவில்லை. சிறிது ஏமாற்றந்தான்.

ஓரளவு தூய்மையான சுற்றாடல் இருப்பினும் கழிப்பிடங்களில் பெருமளவு முன்னேற்றம் காணவில்லை. குளித்தல் என்பது, கைலை வெளிப்பிரகார வலம் ஆரம்பமானது முதல் இதுவரை சிந்திக்காத விடயம். அது அடுத்தநாள் "தர்சன்" சிற்றூர் செல்லும்வரை பொறுத்திருக்க வேண்டியதொன்றாகும். எம்முடன் கொண்டுசென்ற ஈரமாகப்பட்ட மெல்லிழைத் தாள்கள் (wet ones) எவ்வளவு அனுகூலமாயிருந்தன என்பது வார்த்தைகளால் விபரிக்க முடியாது.

வழமைபோல மின்சாரவசதி மிகக் குறுகிய நேரத்துக்கே கிடைக்கும். முழுநாள் யாத்திரைக் களைப்பால் இரவுணவு முடிந்ததும் முடிச்சுகள்போல் முடங்கிவிட்டோம்.

## Kailash: A Spiritual Journey

## OUTER PARIKRAMA – DOLAMA LA PASS & GOURI KUND

This 13th day (July 25) of our pilgrimage the hardest, longest, highest and most wonderful spiritual journey. Early morning view of the north face was quite surprising with the clouds covering its tip revealing a strange image of a face (see photo).

Although I used the pony to start with, the journey was mostly on feet trekking as the pony could not negotiate the rough trek, and I found it quite challenging and interesting. This gave me the opportunity to enjoy the various points of landmarks with spiritual connotations (which are still ill understood).

Because of the varying degrees of altitude, and uneven and unmade rocky route, the group was dispersed into various smaller groups with people of different abilities to walk/trek.

Dolama La Pass is situated at an altitude of 5,630 metres where the concentration of oxygen in the environment could be quite low, thus making the pilgrims subject to short of breath. Keeping this caution in mind, our mini group got on with the trekking with good determination as we approached the highest altitude, below which I could view the Holy Gowri Kund (one of the holiest sites) – the lake that was quite icy, and it was almost impossible for anyone to take a dip. This lake

was supposed to be one where Goddess Parvati used to bathe. A very brief meditation session ensued.

The Sherpas advised us to avoid staying too long at this highest point of the trek because of the risk of hypoxia. From Dolama La Pass I continued the downward 12 km trail towards the next camp site (Zhutul Puk), with a stop-over for lunch.

A very important Gompa (monastery) where Milerepa meditated was quite close to this camp, but in view of the deteriorating weather conditions, this was advised to be avoided.

Understandably, almost all members of our group were quite tired and hence retired to bed soon after a very tasty dinner prepared by our expert Sherpas.

# கைலாசம் –
# வெளிப் பரிக்ரமா பூரணம்

## மானஸரோவர் ஸ்நானம், பிரியாவிடை

**ஜுலை 26:**

அதிகாலை ஆறு மணியளவில் விழித்தெழுந்து, கொடுக்கப்பட்ட ஒரு குவளை சூடான நீரில் பல்துலக்கல், முகம் கழுவல் இத்தியாதி கிரமங்களை முடித்து, எட்டு மணியளவில் புறப்பட்டு தர்போச்சே எனும் இறுதித் தரிப்பிடம் நோக்கினோம். வழி முழுதும் மிக்க கண்கவர்ச்சியான காட்சிகள்.



**கைலை யாத்திரையின் இறுதிப் பயணம்.**

சீதோஷ்னநிலை மிகவும் அனுகூலமாயிருந்தது. மதியம் பன்னிரண்டு மணியளவில் இறுதிச் சந்திப்பிடத்தை அடைந்தோம். அங்குதான் எம்மை தர்சன் விடுதிக்கு ஏற்றிச்செல்லும் வண்டிகள் காத்துநின்றன.




லண்டன் குழு - உட்கார்ந்திருப்போர்: கைலை பாலாவும் (அவர் பின் நிற்பவர் உரை ஆசிரியர்) அருகில் இருப்பவர் "ஈகோ ட்ரேக்" உரிமையாளர் கைலை பிமல்

டோன்னாவுக்கும் நிம்மாவுக்கும் சந்தோஷமாக ஆளுக்கு நூறு யுவான்கள் கொடுத்து விடைபெற்றோம். கைலை பாலாவும் நேபாள யாத்திரை ஒழுங்கினர் ஈகோ ட்ரேக் உரிமையாளர் பிமலும் எல்லா யாத்திரீகர்களுக்கும் ஆசி




கைலை பாலா உவந்தளித்த படம் - முழு யாத்திரைக் குழுவினர்

நன்றி கலந்த சிற்றுரை நிகழ்த்தினர். ஒவ்வொருவருக்கும் ஞாபகார்த்தமாக வெள்ளைச் சால்வையும் அணிவித்தனர். இந்நிகழ்ச்சி இருமணி நேரமாக நடைபெற்றது. பின்னர் எல்லா யாத்திரீகரதும் இறை அன்புகலந்த பெருமிதம் மிக்க பிரியாவிடை சம்பவம் சற்றே நீடித்தது. பிரிய மனமின்றிப் பிரிந்தோம்.

ஆரம்பத்தில், மானஸரோவர் அகண்ட ஹோமத்தில் முக்கிய பங்காற்றிய அன்பர் கைலை பரந்தாமன் ஒரு ருத்ராக்ஷம் அணிந்த ஸ்படிக லிங்கத்தை எனக்கு அன்பளிப்பாக வழங்கினார். வெளி வீதி யாத்திரை பூராவும் இந்த அருள்மிகு லிங்கம் அவர்வசமே இருந்ததாகக் கூறினார்.



ஸ்படிக லிங்கம்



சிவராத்திரியில் எனது பூஜையில் (மானசரோவர் லிங்கத்துடன்)

அத்தனை சக்தி மிகு ஸ்படிக லிங்கம் கைகளில் கிடைத்தது என்னே பாக்கியம். ஆனந்தக் கண்ணீர் மல்க அதை என் கைகளால் பெற்றுக்கொண்டபோது அந்த மஹாதேவனே முன்னின்று அருளுவது போன்ற பிரமை ஏற்பட்டது. கைலைத் தரிசனத்தின் மகிமைகளுள் இதுவும் ஒன்றோ!

அத்தனை யாத்திரீகர்களும் தத்தமது அனுபவங்களை பரிமாறிப் பிரியாவிடைபெற ஏறக்குறைய இரண்டு மணி நேரத்துக்கும் மேலாகிவிட்டது. எம்மை ஏற்றிச்செல்லவேண்டிய பேருந்துகளும் ஆயத்தமாயிருந்தன. புறப்பட்டு நல்ல கண்கவர் மலைக்காட்சிகள் நிறைந்த சாலைகள் வழியாக தர்சன்

விடுதியை அடைந்தோம். அங்கு மதிய உணவு தயாராகிப் பரிமாறப்பட்டது.



விடுதியில் நன்றியுரை – நேபாள ஷேர்ப்பாக்களுடன்

முன்னர் ஒரே டபிள் (Duffle bag) பையில் முடக்கி வைத்திருந்த உடைமைகளைச் சரிபார்த்து அவரவர் பைகளில் பிரித்து அடுக்கினோம். பின்னர் சரியானபடி இலக்கமிடப்பட்ட எமது பைகளில் அடுக்கி, மீண்டும் பயணத்தைத் தொடரும் பொதிப் பேருந்துகளில் அடுக்கிவைக்க ஏற்பாடு செய்தோம். இந்த ஒழுங்கு மேலும் இரண்டு மணி நேரம் எடுத்தது.

பின்னர், கைலை பாலா, நேபாள ஷேர்பாக்கள் உட்பட உதவியாளர் அனைவரையும் அழைத்து, யாத்திரீகர்களுடன் நிற்கவைத்து அனைவருக்கும் நன்றிப்பேருரை ஆற்றினார். அவரவர்க்குரிய பாராட்டுகளும் உரியபடி வழங்கப்பட்டன. இந்த நிகழ்ச்சியும் பெரிதும் மனம் மிக நெகிழவைக்குமாறு அமைந்திருந்தது.

கைலை பாலா, "ஏகோ ட்ரெக்" உரிமையாளர் பிமல் உட்பட, ஐந்து யாத்திரீகரும் இரு நேபாள ஷேர்ப்பாக்களும் மேலதிக யாத்திரைக்காக எம்மிடமிருந்து பிரிந்தனர்.

ஏனையோர் பிற்பகல் இரண்டு மணியளவில் பேருந்துகளில் ஏறிப் புறப்பட்டு, ஆறு மணியளவில் மானஸரோவர் விடுதியை அடைந்தோம். அனைவரும் உடற் களைப்பால் நன்கு உறங்கியவாறே பிரயாணஞ்செய்தனர்.

உரிய தங்குமிடங்களைக் கண்டுபிடித்து உடைமைகளைச் சரிபார்த்துவைக்க அரைமணி நேரத்துக்கு மேலாகிவிட்டது. தங்குமிடம் தகரக் கொட்டகைகள். ஒரு கூடாரத்துள் பத்துப் படுக்கைகள்.



நிலம் வெறுமனே மணல்தான். அண்மையில் கூடாரங்களையொட்டி இரு தேநீர்க் கடைகளும் இருந்தன.



தகரக் கூடாரத்தின் உட்பக்கம்

சுவாத்தியம் நன்றாகவே இருந்தது. நல்ல வெய்யில். குளிரில்லை. மானஸரோவர் கைலாசநாதர் பின்னணியில்

(கௌரிசங்கராக) அழகும் அமைதியும் ஒருமித்து, கருணையே வடிவாக பெருமையுடன் காண, உண்மையில் கண்கோடி வேண்டும்.



மானஸரோவர்



மந்தாதா மலை பின்னணியில் "கௌரிசங்கர்"



குர்லா (மலை) மந்தாதா

**கௌரி சங்கர்:**

"இந்தியாவிற்குச் சிகரமாயுள்ள இமயமலையின் கொடுமுடியாய்த் திகழ்வது கயிலயங்கிரி. அதற்கு அருகில் அமைந்துள்ளது மானசரோவரம் எனப்படும் தடாகம். இரண்டும் சேர்ந்து "கௌரி சங்கர்" என்று அழைக்கப்படுகின்றன. இந்த இரண்டையும் தரிசனம் செய்தவர்களுக்கு மறு பிறவி என்பது கிடையாது என்பது ஐதீகம்".

அமைதியான ஏரியிலே இமையமலைச் சாரலிலே உமையாளின் உறை விடமாம் மானஸரோவரில் மனமுருக முண்டெழ முனைந்தது மனம். குளிர் மிளிர்ந்தது. பளிச்சென்ற பகலவன் பேரொளிவீச விரைந்தேன், திண்ணமான மனதுடன் வண்ணமிகு குளக்கரை நோக்கி.

நீலவண்ணத்தில் மின்னும் இத்தடாகம் நிமிடத்திற்கு நிமிடம் வர்ணம் மாறுகிற அழகை வர்ணிக்க வார்த்தைகளே இல்லை. இரவு நேரங்களில் கோடானுகோடி நட்சத்திரங்களைத் தண்ணீரில் பிரதிபலிக்கும் அழகே அழகு.

இக்கரையில் கிடைக்கும் கல் ஒவ்வொன்றும் சிவலிங்கம் என்பது ஐதீகம். இன்றும் மானஸரோவரில் ராஜ அன்னப் பறவையைக் காண்பவர்கள் பிரம்மாவைக் காண்பதென்பர் ஆன்மீகவாதிகள்.

மானஸரோவரில் தீர்த்தமாடச் செல்வதற்கு சிறு வினாடிகளுக்கு முன்னர் ஒரு நான்கு சக்கர வண்டியில்

வந்திறங்கினர் முன்னர் பார்த்திராத ஒரு குழுவினர். அவர்களில் ஒருவர், எம்முடன் யாத்திரை ஆரம்பித்து ஸப்தரிஷி குகையில் சமாதியான சக யாத்திரீகரின் மைந்தர் எனவும், அவர் தந்தையாரின் அஸ்தியை மானஸரோவரில் அர்ப்பணிப்பதற்காகக் கொண்டுவந்திருப்பதையும் அறிந்தேன்.

இதில் பெரும் வியப்புக்குரிய செய்தி என்னவெனில், கைலை பாலாவின் துரித நடவடிக்கையால், சமாதியான யாத்திரீகரின் மனைவியும் ஒரு மைந்தனும் மலேசியாவிலிருந்து காத்மண்டுவுக்கு வந்து, அதிமிகு புண்ணியமிகு நதியாம் பாக்மதிக் கரையில் ஈமைக்கிரியைகளை ஈடேற்றி, இங்கு அஸ்தியைக் கொணர்ந்தனர். எல்லாமே கனவுபோலத் தோன்றினும் ஈஸ்வரக் கிருபை எவ்வாறு செயற்பட்டது என்பது விந்தையிலும் விந்தையே.

அஸ்தி கிடைக்கப்பெற்றதும் சகயாத்திரீகர் யாவரும் ஒன்றுகூடி மானஸரோவர் கரையிலேயே பூஜைக்குத் தயார்செய்தனர். கிரமப்படி விநாயகர் துதியுடன் ஆரம்பித்து, அதி உருக்கத்துடன் அனைவரும் ஓதிய திருவாசகத்துடன் பூர்த்திசெய்து அஸ்தியை மானஸரோவரில் கரைத்தோம்.

நல்ல வெயில். குளிர்ந்த காற்று நம்மை கீழே சாய்த்துவிடும் அளவிற்கு இருந்தது. அடித்தால் அம்மியும் நகரும் என்பார்கள், ஆனால் மானஸரோவரில் வீசும் காற்று காத்மண்டுவுக்கே நம்மைத் தூக்கிக்கொண்டு விட்டுவிடும்போலிருக்கும். அதிகபட்ச வெய்யில், குளிர்ந்த மிக வேகமாக வீசும் காற்று, இரவில் பிரமிக்க வைக்கும் நட்சத்திரக்கூட்டம், என்றும் நாம் புதுமையாக அனுபவிக்கலாம்.

இறை அன்பு பெருக, "துணிந்தபின் மனமே..." என்ற சினிமாப் பாட்டின் அடிகள் ("தேவதாஸ்" சினிமாவில்) உள்ளத்தில் ஊசலாட ... ... ... "ஓம் நமசிவாய" எனும் ஓதலுடன் .... ... ...

"காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தம்மை நன்னெறிக்கு உயிப்பது
வேதம் நான்கிலும் மெய்ப் பொருளாவது
நாதன் நாமம் நமசிவாயவே"

என்ற திருஞானசம்பந்தரின் தேவாரத்தை உள்ளத்தில் உணர்த்தியவாறே மானஸரோவர் கரையில் கால் வைத்தேன்.

எங்கிருந்துதான் உந்துதல் வந்ததோ தெரியவில்லை. முதலாவது, எனக்கொரு தலை தாழ்த்தல், இரண்டாவது, குடும்பத்தினர் நலன் கருதி ஒன்று. மூன்றாவதாக, உலக மக்கள், படைப்புகள் அனைத்துக்குமாக நலன் கருதி புண்ணிய தீர்த்தத்துள் சிரம் தாழ்த்தல், என மூன்று தடவை மானஸரோவர் சிரந்தாழ் ஸ்நானம் செய்து, இப்பிறப்புப் பாவங்கள் தீரவும் பிறப்பெனும் பிணியிலிருந்து விடுபட்டு ஈசனடி சேரும் வாய்பினை எய்தும் வரம்பெற்ற வைராக்கியம் வந்தது போன்ற உணர்வுடன் கரை ஏறினேன்.

உடன் கொண்டுவந்த குப்பிகளில் தீர்த்தத்தை நிரப்பியதுடன் கரையோரக் கற்களையும் சேகரித்துக் கொண்டேன். பற்களைத் தாளமிட வைத்த குளிர் எங்கு சென்றதோ தெரியவில்லை. என்னுடன் லண்டன் அன்பர்கள் தந்தனுப்பிய பிரார்த்தனைப் பத்திரங்களையும் குறு நூலையும், அவர்கள் கேட்டுக்கொண்டபடி மானஸரோவருக்கு அர்ப்பணித்தேன்.

மானஸரோவர் கற்கள் கைலையிலிருந்தே துண்டங்களாக விழுந்திருக்குமாகையால், ஒவ்வொரு கல்லும் சிவலிங்கம் எனவும் கருதுவர்.

• இது **சாலிக்ராம்** எனும் திருமாலின் சின்னத்தை நினைவூட்டும். சாலிக்ராம் அதிசயமான கல். நாற்புறமும் பனி படர்ந்த, கடல் காணாத, பழமையை இன்னும் மறக்காத நேபாளத்தின், முக்திநாத் எனப்படும் இடத்தில் இரண்டு மலைகளுக்கு இடையில் ஓடும் **கண்டகி** எனும் நதியில் உருவாகி, உலகை வியப்பில் ஆழ்த்தும் கல்தான் சாலிக்கிராம்.

இப்பிறப்பின் பயனை எய்திய பூரிப்பில் தகரக் கொட்டகைகளை அடைந்தோம். நேபாள ஷேர்ப்பாக்கள் (உதவியாளர்) திறந்த வெளியில் சூடான பக்ஷணங்களும் பானங்களும் தயாராக வைத்திருந்தனர். ஆஹா! என்ன அற்புதம்! எல்லாமே தேவாமிர்தமாயிருந்தன.

தகரக் கொட்டகையிலோ விசேஷமான குளிர்! சுற்றவரத் தகரமும், அடியில் மணலும் இருப்பின் குளிர் எப்படி என்பதை அன்று நன்கு உணரக்கூடியதாயிருந்தது. அடுத்த நாள் எமது யாத்திரையில் இறுதிப் பேருந்துப் பிரயாணம். நீண்ட பிரயாணம். எல்லாவற்றையும் மனதிற் கொண்டு, கைலாச யாத்திரையின் பூரணத்துவத்தை உணர்ந்து, உறக்கத்தில் ஆழ்ந்தோம்.

## Kailash: A Spiritual Journey

## OUTER PARIKRAMA – COMPLETION

With the great satisfaction of Kailai – Manasarovar – Gowri Kund viewing (Dharshan) we had a good relaxed night before we set again to the final day (July 26, 2013) of pilgrimage towards Tarchen from where we started the outer circumambulation (Parikrama).

We reached a meeting point of all pilgrims and had about two hour long send off with a vote of thanks from the organisers, a very touching one, indeed.

Furthermore, I was taken by a great surprise when Mr Paranthaman who conducted the major prayers at Manasarovar at the commencement of this pilgrimage, with a presentation of a Spatika Linga (Shiv Ling statue made of crystal) for me as a gift!

It was quite a memorable occasion when all the pilgrims exchanged their experiences during the past week and thanked each other with a feeling of satisfaction and emotion.

Each one of our group was presented with a memento of white silk shawl before our coach began the return journey to the hotel, about 2 pm. I enjoyed every bit of the natural beauty of the Himalayan range of mountains during this final leg of Manasaraovar - Kailash pilgrimage.

On reaching the hotel the group dispersed to prepare for the re-arrangement of our belongings in their own duffle bags

that were numbered for each individual member. This process took almost two hours and we had a re-union meeting with the Sherpas and other helpers for final thanks–giving session.

Kailai Bala and five other members with the senior Sherpas were leaving for a special trek of Kaialsh and the rest continued the coach journey towards the Holy Lake Manasarovar, a four hour drive. It was about 6 pm when we reached Manasarovar.

It was a strange experience when we were provided with tin built tents with ten beds in each, floored with sand! The weather was very clear and I enjoyed the view of Manasarovar Lake in the backdrop of Holy Kailash (called Gowri Shankar) – a golden opportunity to receive the Good Graces of the Almighty! The day culminated in my final dips in the ice cold Lake Mansarovar.

# மீண்டும் சீன–நேபாள நட்புப்பாலம்

பர்யாங், பிரமபுத்ரா, வனப்புமிகு வீதிகள், நட்புப்பாலம்

**ஜூலை 27:**

அதிகாலை இருள் மிகுந்த காலை ஐந்து மணிக்கெல்லாம் விழிதெழுந்து உடைமைகளையெல்லாம் பொதிப் பேருந்துகளில் சேர்ப்பித்தோம். இருட்டில் சக யாத்திரீகர்களைக் கண்டுபிடித்து பேருந்துக்களில் ஏற்றும் பணி அனைவருக்கும் பெரும்பாடாகி விட்டது. ஆறு மணிக்கெல்லாம் கைலாச யாத்திரையின் இறுதிப் பேருந்துப் பிரயாணம் ஆரம்பமாகிவிட்டது. விரைவில் கிளம்ப வேண்டியிருந்ததால் யாரும் தேநீர், காப்பிகூட அருந்தவில்லை. வழியில் காலை உணவிற்கு ஒழுங்குசெய்யப்படும் என முன்னரே தெரிவிக்கப்பட்டது.

திரும்பிப் போகையில் மானஸரோவரின் புகுமுக வாயிலில் பரிசோதனை ஏதுமிருக்கவில்லை. இயற்கைக் காட்சிகளோ ஓஹோ ஓஹோ என்றவாறு தொடர்ந்திருந்தன.

காலை ஏழரை மணியளவில் பர்யாங் எனும் இடத்தில் சிற்றுண்டிக்காகப் பேருந்து நிறுத்தப்பட்டது. மனித சஞ்சாரமே இல்லாத இடம்போன்றிருந்தது. அந்த ஊருக்குக் காலை ஏழு மணி எமது அதிகாலை நான்கு மணி போலல்லவோ? ஆனாலும் – முன்னறிவித்தல் கொடுக்கப் பட்டமையால் தேநீர்க்கடை வேலைகள் துரிதமாகவே நடைபெற்றன. பெருமளவு களைப்பிலிருந்த அனைவருக்கும் தேநீரும் இனிய சிற்றுண்டியும் பெருமளவு திருப்தியளித்தன.

சிற்றுண்டிச்சாலை முன்பாக அடுக்கப்பட்டிருந்த பெட்டிகளில், உபயோகிக்கப்பட்ட குளிர்பான தகரக் குவளைகள் புதியனபோலத் தோன்றின. அவ்வளவு






அதிகாலையில் தேநீர் சிற்றுண்டிச்சாலையில் கைலை யாத்திரையின் களைப்புத்தீர தேநீர் அருந்துவோர்

ஒழுங்காக அடுக்கி, மறு உபயோகத்திற்காகப் (மறு சுழற்சி) போலும். அந்நாட்டு மக்களின் சிக்கன வாழ்வு பெருமளவு மெச்சத்தக்கனவல்லவோ.

பேருந்துப் பிரயாணம் தொடர்ந்தது. கண்களுக்கு எட்டியதூரம்வரை பரந்த திபெத்திய பீடபூமி பல்வேறு வர்ணங்களில், நீண்டும் குறுகியும், பரந்தும் குறைந்தும் பல்வேறாகக் காட்சி தந்தது. வானளாவிய பனிபடர்ந்த மலைத்தொடர்கள் முகிற்கூட்டங்களைக் கொஞ்சிட, அவற்றுடன் இணைந்த சர்ப்பம் போன்று அமைக்கப்பட்ட பாதைகள் அங்குமிங்குமாக ஓடித்திரிவது போன்ற பாரிய காட்சிகள்... அப்பப்பா, – என்ன அழகு!



பனி மூடிய மலைத்தொடர்



திபெத் பீட பூமி

எவரெஸ்ட் மலைத்தொடர் உள்ளிட்டு, உலகிலுள்ள அதிஉயர்ந்த மலைகள் பல இருப்பது திபெத்திலேதான். இம்மலைகளிலிருந்து பெருகும் நீர் காரணமாக, திபெத் நாட்டினை ஆசியாவின் "நீர்க் கோபுரம்" (Water Tower) என அழைப்பர். பல பெருநதிகளுள், மானஸரோவரிலிருந்து புறப்படும் பிரமபுத்ரா எனும் பெரு நதி மேற்கு திபெத்தினூடாகப் பாய்கிறது.

எமது பேருந்துகள் பிரமபுத்ரா நதி பாயும் திக்கில்தான் பெரும்பாலும் பயணித்தது.

இந்த நதியின் எதிர்க்கரையில் சீனாவின் போர்ப்படைகளின் பெரும் நிலையம் உள்ளது. இம்மாதிரி நிலையங்கள் வழிவழியே காணலாம். அவற்றை நோக்கி ஏதும் புகைப்படம் எடுத்தால் பெரும் பிரச்சினைக்குள்ளாகலாம் என எச்சரிக்கப்பட்டோம். இதுபோன்ற நிலைமை அழகிய திபெத்பூராவும் நிலவுவதைக் காணக்கூடியதாயிருந்தது.

ஒரு மணி நேர இடைவேளைக்குப் பின் பயணம் தொடர்ந்தது. வருணபகவானும் தலைகாட்டத் தொடங்கினார். தூறலாயிருந்தபடியால், பேருந்தின் கண்ணாடியூடாகப் புகைப்படங்கள் ஓரளவு எடுக்கக்கூடியதாயிருந்தது.



*சீன அரசினால் அமைக்கப்பட்ட அழகாக வளைந்து வளைந்து மலைகளை வருடும் பாதைகள்*



மதிய உணவுக்காக பேருந்துகள் நிறுத்தப்பட்டன

பசுமைநீங்கிய ஒரே நீள, வளைந்துவளைந்து அமைக்கப்பட்ட பாதைகள், முகிற்கூட்டத்தை அரவணைத்த பனிபடர்ந்த பிரகாசமான மலைக்குவியல், பரந்த மண் நிறை மடு, இவை (மலையும் மடுவும்) சேர்ந்த திபெத் பீடபூமியின் அழகை எப்படித்தான் வர்ணிப்பதோ! ஆஹா! ஆஹா! ஆஹா!



கம்பீரமான பனிசொரிந்த மலைத்தொடர்கள்

இத்தனை மலைகளும் நதிகளும் இருக்குமிடத்தே பெரும்பாலும் அடிக்கடி வருடம் பூராவும் மழையை எதிர்பார்போம் அல்லவா? அதுதான் இல்லை. வருடத்தில் ஒன்பது மாதங்கள் வரை வரட்சி நிலவுமாம் திபெத்தில். "மழை நிழல்" (Rain Shadow) எனும் வானிலைச் செயற்பாட்டினால் மழை உற்பத்தி தடைப்படும்.

முக்கியமானதொரு விஷயம், இப்பாரிய மலைப்பகுதிகளில் (ஆழத்தில்) கனிப்பொருட்கள் பெருமளவு புதைந்துள்ளன. இந்தக் கனிமவளப்பெருக்கு திபெத்தின் மீதுள்ள சீன ஆதிக்கத்துக்கு ஒரு முக்கிய காரணமாயிருக்கலாம்.




"மழை நிழல்" உற்பத்தியாகும் விதம் (இணையத்தளம்)

ஆயிரக்கணக்கான மீற்றர் இறக்கத்தை ஒரு மணி நேரத்தில் கடந்தது எமது பேருந்து.

முற்றிலும் மாறுபட்ட நகருக்குள் பிரவேசிக்கிறோம். அதுதான் ஜங்மு நகரம். கடல் மட்டத்துக்கு 2,300 மீற்றர் உயரத்திலுள்ளது.

ஜங்மு குறுநகர் சீன குடிவரவு-அகல்வு பரிசோதனை நிலையத்துக்கு அண்மித்துள்ளது. இந்நகரம் இதுவரை வந்த பாதையிருந்து மாறுபட்ட இயற்கைக் காட்சிகளையுடைத்து. எங்கு பார்த்தாலும் பச்சைப்பசேலென்ற மலைகளும், அருவிகளும், ஆறுகளும் கண்களை அசையவிடாது ஆக்கிரமித்துக் கொண்டன.

மழை தொடர்ந்தது. முக்கிய பெரிய நதியான "போட்டே கோஷி" (Bhote Koshi) பாரிய வேகத்துடன் பாய்வதைக் காணலாம்.



பாரிய அருவி - கோத்தாரிப் பகுதியில்



மழையினால், பேருந்துக்குள்ளிருந்தே (படம்)

கோத்தாரி கடைத்தெருவை அண்மிக்கையில், வாகன நெருக்கடியால் பேருந்து ஆமை வேகத்திலேயே சென்றது. எனவே, இரண்டு கிலோமீற்றர் தூரத்திலுள்ள சீன பரிசோதனை நிலையத்துக்கு நடையாகவே செல்லத் தீர்மானித்து, பாதை யிலுள்ள, ஓடிக்கொண்டிருக்கும் நீர்வடிகளைக் கடந்து சீன பரிசோதனை நிலையத்தை அடைந்தோம்

நடுநிசியளவில் நாம் சீன சுங்கத் திணைக்கள நிலையத்துக்கு வந்துசேர்ந்துவிட்டோம். மழைத்தூற்றலும் விட்டுவிட்டுத் தொடர்ந்தது.

சுங்க நிலையத்துக்கு வெளியே தொடர்ந்து மக்கள் கூட்டம் நிறைந்தது. சேறும் சகதியும் நிறைந்த வெளியில் யாத்திரீகரை வரிசைக்கிரமப்படி நிற்கவும் ஏற்பாடானது. இதற்கிடையே நேபாளப் பிரசைகள், தொழில் செய்வதற்கான பிரத்தியேக அடையாள அட்டைகள் இருப்பதால் (இருக்கிறதெனக் கூறிக்கொண்டு) வரிசைக்கிரமத்தில் உட்புகாமல், ஆளையாள் இடித்துக்கொண்டே முன்னேறும் அசிங்கத்தையும் சகித்துக்கொண்டு நின்றோம். இதற்கிடையில், பணப் பரிமாற்றமும் நிகழும் போட்டி நடந்தது. நாம் முன்னர் சந்தித்த சில பாடசாலை மாணவ மாணவியர்கூட இந்த பணமாற்று வியாபாரத்தில் மும்மரமாயிருந்தனர். ஒரே சலசலப்பு.

ஈழத்து யாழ். நல்லூர்க் கந்தனின் தேர் உற்சவத்திலும் பார்க்க அதிகளவு நெருக்கடிபோலத் தோன்றியது.

எமது உட்செல்லும் நேரம் வரும்போது ஒரு மணிநேரத்துக்கு மேலாகியது. எனினும், எமது குழு யாவரும் வரும் வரை குழு "விசா"க்களைப் பரிசோதித்து அனுமதிக்கமுடியவில்லை. மேலும் அரைமணிநேரத்துக்குப் பின்னர், எம்மவர் குழு முழுமையுற்றதும், சுங்கப் பரிசோதனை முடிந்து வெளியேறினோம். மலேசிய, இந்திய, இங்கிலாந்துக் குழுக்களெல்லாம் வரும்வரை வெளியே காத்திருந்தோம்.

பின்னர், கால்நடையாகவே, நட்புப்பாலத்தைக் கடந்து, நேபாள பரிசோதனை நிலையத்தையும் தாண்டி "கோத்தாரி" நகருக்குள் வந்துசேர ஒன்றரை மணிக்கு மேலாகிவிட்டது.

இதுவரை பயணித்த சீனத் தேசியப் பெருஞ்சாலை நட்புப்பாலத்தின் பின்னர் நேபாளப்பகுதியில் அரனிக்கோ பெருஞ்சாலையாக மாறும்.

மதிய உணவு ஏற்கெனவே ஒழுங்குசெய்திருந்தபடி தயாராகிப் பரிமாறப்பட்டது. ஆனாலும், அங்கிருந்து காத்மண்டுவிற்குப் போவதற்குரிய வண்டியில்லை. மலைச் சரிவினால் பாரிய கற்குன்றொன்று நடுப்பாதையில் விழுந்து, போக்குவரத்தைத் தடைசெய்திருந்தது.

இது நேபாளத்தில் சர்வசாதாரணமான சம்பவங்களில் ஒன்று போலும். மக்கள் பெரிதாக அரற்றிக்கொண்டதாகத் தெரியவில்லை. பொதுவாகச் சேவையிலீடுபட்டிருக்கும் பேருந்துகளும் காணப்படவில்லை. ஒரு மணிநேரத்துக்குமேலாக பேருந்து வராத தாமதத்துக்கு ஏதும் காரணம் தெரியாது காத்திருந்தோம். நேபாள உதவியாளர் (ஷேர்ப்பாக்கள்) யாரும் கண்ணுக்குத் தென்படவில்லை. இதுவரை ஒழுங்காகவிருந்த யாத்திரை – இப்போது இருந்த நிலை எமக்குப் பெரும் ஏமாற்றத்தையும் கவலையையும் ஊட்டின. இதுவும் பரமனின் சோதனை போலும் – பொறுமை சூழ அமைதியாகவே நேரம் கழிந்தது.

வழியில் காத்மண்டு பெரும் பாதையில் மண் சரிவுகள் பல, என்பது பின்னர்தான் தெரியவந்தது அத்தோடு, கிராமத்தவருக்கும் ஊர்காவற்துறையினருக்கும் தகராறு



மலைச் சரிவினால் நடுத்தெருவில் விழுந்த பெரும் பாறாங்கல்

நிமித்தம், அம்மக்கள் பாதை மறியலில் ஈடுபட்டிருந்தனர். இக் காரணங்களால் போக்குவரத்து தடைபட்டிருந்தது; மழை அப்பப்போ தொடந்து தூறியவாறிருந்தது. எமக்கோ நிற்பதற்கோ உட்காரவோ தகுந்த இடங்களும் போதியதாயில்லை. யாத்திரீகர் மாறிமாறி இடங்கொடுத்து ஏதுமறியாது, அனுபவங்களைப் பரிமாறியவாறே நேரங் கழித்துக் கொண்டிருந்தனர்.

இம்மாதிரியான பாதைத்தடை சீனப்பகுதியில் நிகழ்வதற்கு சாத்தியமேயில்லை. மலைச்சரிவுகளும், மக்கள் ஆர்ப்பாட்டத்தால் பெரும்பாதை தடைப்படுவதும் சீன ராணுவ ஆட்சியில் நடைபெறும் என்பதை நினைத்துக்கூடப் பார்க்க முடியாது.

மேலும் ஒரு மணி நேரத்தின் பின்னர் ஒரு குறும்பேருந்து எமக்காக ஒழுங்குபடுத்தப்பட்டது. அதிர்ஷ்டவசமாக அடியேனுக்கு அதில் இடம் தரப்பட்டது. பல யாத்திரீகர், அதிருப்தி மேலிட, மேலும் காத்திருக்க வேண்டியதாயிற்று.

பலவாறான வாக்குவாதங்களின் பின்னர் எமது வாகனம் மூன்றரை மணியளவில் காத்மண்டு நோக்கிப் புறப்பட்டது.

## Kailash: A Spiritual Journey

## THE FRIENDSHIP BRIDGE

The morning of July 27, 2013, the final day of our journey in Tibetan soil, was a most memorable one for many reasons. Memories of the previous week were exchanged, once again, the Manasarovar / Gowri Shankar experience felt deep into me and the memorial (last rites) for a member whose body left us during this pilgrimage, in the presence of his family – conducted on the previous afternoon.

The morning was quite dark around 6 am when we were getting ready, after loading our bags and the Sherpas loading the items for cooking, camping etc. Breakfast was arranged in a hotel en-route (Hotel in Paryang).

The beauty of Tibetan planes (landsacapes) was not an easy one to describe in words. One needs to visualise the range of snow-capped mountains with massive moving clouds cuddling them at intervals, sand dunes, rivers and waterfalls and hair pin bend roads all along the way until we reached the banks of river Brahmaputra – with its origin from Lake Manasarovar. It was lunch time when we had a break in this scenic river banks.

The wealth of minerals and precious metals stored in the mountain beds was the main reason for Chinese occupation of this wonderful land, as we understood.

The coaches reached Zangmu Chinese Immigration/ customs check point by late afternoon, around 2 pm. The heavy crowd at the customs building put us off as there was quite a

long delay to get through to the Nepalese side of the Friendship Bridge ( in Kothari). With the efficient handling of our guides, our journey through the Chinese Immigration / customs was not too difficult as was thought.

Although we had a late lunch in a hotel just after the Friendship Bridge in Kothari, our travel was delayed by a gigantic rock fell in the middle of the main road suspending all vehicular passage and hence the coach that was expected to arrive did not. A long delay of over 2 hours kept us in suspense. Furthermore, earth slips blocked the smooth journey to Kathmandu and it was almost 9pm when we reached our hotel Malla.

# கைலை யாத்திரை நிறைவு

## காத்மண்டு, பசுபதிநாத், பிரியாவிடை

**ஜூலை 28:**

குறும் பேருந்து புறப்பட்டு ஒருமணி நேரத்துக்குள் பலதடவை மண்சரிவு காரணமாக மெதுவாகவே, பிரச்சினைக்குள்ளானதொரு கிராமத்தை வந்தடைந்தது. நூற்றுக்கணக்கான பேருந்துகள் கிராமத்து இளைஞர்களால் தடுத்துவைக்கப்பட்டிருந்தன. எக்காரணங்காட்டியும் எந்த வண்டியையும் நகர விடவில்லை. ஊர்காவற்றுறையினர் வாழாவிருந்ததையும் கவனிக்கக்கூடியதாயிருந்தது. ஒருவேளை அவர்களுக்கும் ஆக்கிரமிப்பாளர்களுக்கும் ஏதும் மறைமுக உடன்படிக்கையோ என்றும் சந்தேகிக்கக்கூடியதாயுமிருந்தது. எமது உதவியாளரும் வேறுபலரும் ஆக்கிரமிப்பாளருடன் வாதித்தும் பயனில்லாது போயிற்று. இளைஞர்கள் "மாவோ" கிளர்ச்சியாளரோ என்றும் சந்தேகிக்க வேண்டியிருந்தது.

பல பேச்சுவார்த்தையின் பின்னர் (சுமார் ஒருமணி நேரம் காத்திருந்தபின்) பேருந்துகள் ஆமை வேகத்தில் புறப்பட ஆரம்பித்தன.

சீன- நேபாள பகுதியிலோடும் "போட்டே கோஷி" (Bhote Kosi) நதியின் அழகே அதிஉன்னதமானது.

போட்டே கோஷி என்பதன் அர்த்தம், திபெத்தில் உருவாகும் நதி என்பர். (போட்டே = திபெத், கோஷி = நதி).

சீனப் பகுதியிலும் நேபாளப் பகுதியிலும் இந் நதியின் அழகை வியந்தவாறே பயணித்தோம். நேபாளப் பகுதியில் இந்நதி திபேத் பகுதியிலிருந்து பாயும் இன்னொரு நதியான "ஸன் கோஷி" நதியுடன் இணைந்து தொடரும். (Sun Kosi ஸன் = தங்கம், கோஷி = நதி)



போட்டே கோஷி (Bhote Kosi) – **அதி நீண்ட நதி**

கோஷி என்பது ஏழு நதிகளின் ஒரு தொடரான தொகுப்பாகும். இத்தொகுப்பை ஸப்த (ஏழு) கோஷி என்றும் கூறுவார்.

இந்த நதிகள்மேலாக அமைக்கப்பட்டிருக்கும் அழகான பாலங்கள் நாளடைவில் கவனக் குறைவினால் (அரசியற் காரணமாயிருக்கலாம்) பொலிவிழந்து காணப்படுவதையும் காணலாம்.



*லார்ச்சா பாலம், அன்று (இணையத்தளப் படம்)*




லார்ச்சா பாலம், இன்று (இணையத்தளப் படம்)

இது போன்றவற்றுள் (போட்டே கோஷி நதியின் மேலாகவுள்ள) புல்பிங் (Phulping) பாலமும் ஒன்று. புல்பிங் என்பதும் இதை அண்மித்துள்ள கிராமத்தின் பெயர்.

ஐந்து கிலோமீற்றரும் வந்திராது ஒரு வளைவில் – இடம்விட்டு இடம் கொடுக்கும்போது, எமது பேருந்தும் இன்னொரு சிறு மோட்டார் வண்டியும் உரசிக்கொண்டன. அதில் தவறு யாருடையது என்பதில் வாக்குவாதம். பெரும் பாதை தடைப்பட்டது. மேலும் பேச்சுவார்த்தைகள், கோபதாபங்கள் (இலங்கை – இந்தியாவில் நடைபெறுவதுபோல) இத்தியாதி நேரங்கடத்தும் தந்திரோபாயம் தொடர்ந்தது. இறுதியாக, ஊர்காவற்றுறை வாகனத்தில் சில அதிகாரிகள் வந்து மேலும் பல பேச்சுவார்த்தைகளின் பின்னர் (ஏதோ பணமாற்று நடைபெற்றதுபோல) பயணம் தொடர்ந்தது.

காலநிலை மந்தமாகவே இருந்தது. மழையும் வெயிலும் மாறிமாறித் தோன்றின. இருள் சூழ ஆரம்பித்தது. எல்லோருக்கும் களைப்பின்மேல் களைப்பு. ஒருவாறு ஒன்பதரை மணியளவில் "மல்லா" விடுதியை அடைந்தோம். தொடர்ந்து ஏனைய யாத்திரீகரும் வந்து சேர்ந்தனர். பெருமூச்செறிய சிறிது இளைப்பறினோம். பெருந்திருப்தியுடன் நல்ல குளிப்பு. பின்னர்



"புல்பிங்" பாலம் அன்று (இணையத்தளப் படம்)




"புல்பிங்" பாலம் இன்று

இரவுணவு தயாரானது. தாமதியாது சென்று சுவைமிகு கறிகளுடனான (விதவிதமான கறிகளுடன்) திருப்தியாக அக்கடமையை நிறைவுசெய்தோம்.

முன்னர் விட்டுச்சென்ற பயணப் பெட்டிகள் கிடைக்கப் பெற்றோம். உடைமைகள் உரியவாறு தத்தம் இடங்களைப் பிடித்துக்கொண்டன. புதிதாகச் சேகரித்த ருத்ராக்ஷங்களும்

புண்ணிய தீர்த்தப் பிரசாதங்களும் தத்தமக்குரிய விசேஷ இடங்களில் இடங்கொண்டன.

யாத்திரீக அன்பர் சிலர் அதிகாலை ஐந்து மணியளவில் பசுபதிநாத் கோவில் தரிசனம் செய்ய ஆவல் கொண்டனர். எனக்கு பன்மடங்கு சந்தோஷம். கோவிலுக்குப் போகும்போது கொண்டுசெல்ல வேண்டியவற்றை ஆயத்தப் படுத்தியதோடு நிம்மதியான ஒரு பெருமூச்சு.

நீண்ட இடைவெளிக்குப் பின்னர், இங்கிலாந்து உறவுகளுடன் தொலைபேசித் தொடர்பு, தொடர்ந்து நிம்மதியான உறக்கம்.

**ஜூலை 28:**

அதிகாலை எழுந்து காலைக்கடன்கள் முடித்து குளித்துவிட்டு பசுபதிநாதர் தரிசனத்துக்கு, நால்வருடனும் செல்ல ஆயத்தமானேன். சமையலறையில் சூடான காப்பி தயார் என்ற கூவல் கேட்டதும், அதையும் அருந்தி அவனருள் வேண்டி ஆலயம் செல்லப் புறப்பட்டோம்.



பாரிய பசுபதிநாத் ஆலய வளாகம்

பாஷைப் பிரச்சினை. கோவிலுக்குப் போகும் வழியை சரியாகத் தெரியாது. வசதியாக வாடகை வண்டியில் (taxi) செல்லத் திட்டமிட்டுச் செயற்படுத்தினோம்.

எங்கு பார்த்தாலும் காவி உடையில் பக்தர்கள் ஒழுங்காக வரிசையில் சேர்ந்து மெல்லமெல்ல நடந்தவாறே இருந்தனர்.

காலணிகள், புகைப்படக் கருவிகள் முதலானவற்றைப் பிரத்தியேகக் குடில் ஒன்றில் பாதுகாப்பாக வைப்பதற்கு சாரணர் இயக்கம் பெரிதும் உதவிபுரிந்தவாறே இருந்தனர்.



பசுபதிநாதரின் தங்கக் கோபுரம்



பக்தர் வரிசை

எங்கு போவது என்பதறியாமல், ஏதோ ஒரு வரிசையில் நாமும் சேர்ந்துகொண்டோம். பள்ளிச் சிறுவர்கள் (சிறுவர் சாரணப் பிரிவினர்) அன்புகலந்த மரியாதையுடன் பக்தர்களை ஒழுங்காக வரிசையில் அனுப்புவதும், பக்தர்கள் நன்கு அனுசரித்து கிரமமாக ஆலயத்தை நோக்கிச் செல்வதும் அழகாகவும் மெச்சத்தக்கனவாயும் இருந்தன.

அதிர்ஷ்டவசமாக நாங்கள் சென்ற வரிசை விரைவாகவே மூலவர் பசுபதிநாத் சந்நிதியை அடைந்தது. பல்வேறு திக்குகளிலிருந்தும் பக்தர் கூட்டம் வரிசைவரிசையாக வந்தவண்ணமே இருந்தது.



பசுபதிநாத் கோவில் முன்புறம் – நந்தி

அன்றைய தினம் திங்கட்கிழமை. திங்கட்கிழமை எல்லாமே பசுபதிநாத் ஆலயத்துக்கு பெருமளவு கூட்டம் கூடுமாம். ஆனால், அன்றைய தினம், நேபாள நாட்காட்டியின்படி அதிவிசேஷ நாள் என்பதை "ஒருவகையான" சம்பாஷனை மூலம் அறிந்துகொண்டோம். எங்கள் அதிர்ஷ்டமும் பேரதிஷ்டந்தான்.

தங்கத்தாலான கோபுரத்தைத் தரிசித்தோம். கோவிலின் முன்னுள்ள நந்தி விசேஷமானது. நல்ல தரிசனம் கிடைத்தது.

கோவிற் பாதுகாப்பாளர் ஏராளமாகக் கடமையிலிருந்தனர். புகைப்படக் கருவிகள் எதுவும் கோவிற் பிரகாரத்தினுள்ளே

எடுத்துச்செல்லமுடியாது. இதில் அவர்கள் மெத்தக் கண்டிப்பா யிருந்தனர்.




பக்தர் நடனம்

பல்வேறு பக்தர் குழுக்கள் நடனம் ஆடியவாறே ஆலயத்தை நோக்கிச் சென்றவண்ணமிருந்தனர்.

பசுபதிநாத் மூலஸ்தானத்தை அடைந்ததும் விரைவாகவே தரிசனம்செய்து நகர வேண்டும். இல்லையெனில் தொண்டர்கள், பக்தர்களை நகர்த்தியவண்ணமே இருந்தனர். நீண்ட வரிசையில் சென்று, ஒருமணி நேரத்தின் பின்னர் தரிசனம் முடிந்ததும் நந்திக்கு முன்பாக உள்ள தீர்த்தத் தொட்டி யிலிருந்து தீர்த்தத்தை பக்தர்களுக்கு ப்ரோக்ஷணம் (மாதிரி ஸ்நானம்) செய்தவாறே இருந்தனர்.

தரிசனம் கிடைத்த மாபெரும் நிம்மதியுடன், எட்டு மணியளவில் கூலி மோட்டார் மூலம் "மல்லா" விடுதிக்குத் திரும்பினோம்.

அடுத்து இரண்டு மணியளவில் லண்டன் திரும்ப விமான நிலையம் புறப்பட வேண்டும். ஏற்கெனவே மோட்டார் ஒழுங்கு செய்திருந்தோம்.

இருக்கும் சில மணி நேரத்தில், மதிய உணவின் பின்னர், பேரக் குழந்தைகளுக்கு ஏதாகினும் கொண்டுசெல்ல வேண்டும் என்ற அவா எனக்கும் நண்பர் சுவாமிக்கும் மனம் உந்தியது. சீதோஷ்ணநிலை சீராயிருந்தமையால், வேஷ்டியோடு

நடந்து யாத்திரீகருக்கு பரிச்சயமான "தாமேல்" என்ற நகரக் கடைத்தெருப் பகுதியை நோக்கி நடந்தோம்.

பொருட்கள் வாங்குதற்கு இலகுவானது நேபாள ரூபாய்கள்தான் என்பதால் பரவலாக இருக்கும் பணமாற்றுக் கடை ஒன்றில் அவற்றை முதலில் பெற்றுக்கொண்டோம்.

ஆச்சரியமென்னவேனில், எமது குழுவைச்சேர்ந்த இதே நோக்கோடு வந்த ஏனைய யாத்திரீக நண்பர் பலரையும் சந்தித்தோம். நினைவுச்சின்னங்களாக எம்முடன் எடுத்துச் செல்ல பலரும் பலவகையான பொருட்களை வாங்கி வைத்திருந்தனர். கைலைநாதரின் தரிசனமே வாழ்நாள் பூராவும் நிலைத்துநிற்கக்கூடிய சின்னமல்லவா? வேறேதும் தேவையென எனக்குத் தோன்றவில்லை. தியானதுக்கு உபயோகமான, நெடுநாட்களாக எண்ணியிருந்த ஒரு கருவி, நேபாள இசைக்கும் கிண்ணம் உடனடியாக நினைவுக்கு வந்தது. அதுவும் காத்மண்டுவில் பிரபலமானதொன்றாகும்.



***இன்னிசை (கிண்ண) மணி*** (Ringing bowl)

இதை இயக்குதற்கு ஓரளவு பயிற்சி தேவைதான். விற்பனையாளர் சிலர் பொறுமையாக கற்றுத்தர முன்வைந்தனர். இன்னிசையைக் கேட்ட எனக்கு ஒரு மணியை வாங்குவதில் ஊக்கம் மிகுந்தது. நேபாள முன்னூறு ரூபாவுக்கு எம்மவரில் மூவர் மூன்று மணிகள் வாங்கித் திருப்திப்படுத்திக்கொண்டோம். நண்பர்களுக்குக் கொடுப்பதற்காக பசுபதிநாத் சதுர்முக லிங்கங்கள் இரண்டும் வாங்கிவைத்துக்கொண்டோம்.

அடுத்து, எமது அனுபவமற்ற விடயம், புடவைக் கடைகள் பலவற்றைத் தரிசித்தோம். எம்மிருவருக்கும் ஒரே நோக்கு, குழந்தைகளுக்குப் பிடித்தமான உடுப்பு வாங்குவதே. பல்வேறு தெரிவுகள் – பாஷைப் பிரச்சினைகளைத் தாண்டி, ஆளுக்கொரு உருப்படி வாங்கினோம். இது நல்ல அனுபவமே!

கைலைத் தரிசனத்துக்கு முன்னர் பார்த்த கடைத்தெருக்களையும் தாண்டி, மேலும் சில காட்சிகளைக் கண்டுகழித்த பின்னர் விடுதி வந்தடைந்தோம். மதிய போசனத்தின் பின்னர், பொதிகளைச் சரிபார்த்து விமான நிலையத்துக்குப் போக ஆயத்தமானோம்.

யாத்திரீகர் யாவரும் இணைந்து இன்முகங்கள் நிறைந்த நேபாள ஷேர்ப்பாக்களுக்கு சந்தோஷமாக அமெரிக்க டொலர்களை அன்பளித்து, புகைப்படங்களும் எடுத்துக் கொண்டோம்.



முதற் குழு விமான நிலையத்துக்குப் புறப்படமுன்னர்

குறிப்பிட்ட நேரத்துக்கு மோட்டார் வந்ததும், யாவரிடமிருந்தும் பிரியாவிடை பெற்றபின் புறப்பட்டு விமான நிலையத்தை அடைந்தோம்.

வழமையான விதிமுறைப்படி வெளியேறும் கிரமங்களைப் பூர்த்திசெய்து இரண்டு மணி நேரத்தின் பின்னர் (மாலை

ஐந்து மணிளவில்) விமானம் புறப்பாடு செய்யும் நிலையத்தை நோக்கி உட்செல்வதற்கு ஆயத்தமானோம்.

இதில், எனது நினைவில் இருப்பது, காத்மண்டு திரிபுவன் விமான நிலைய வெளியகல்வு அதிகாரி எனது "பாஸ்போர்ட்"டைப் பார்த்ததும், ஆச்சரியமாக என்னை நோக்கி, ஆவல் மேலிட்டவராய் கைலத் தரிசன அனுபவம் பற்றி விசாரிக்க ஆரம்பித்தார். சுருக்கமாக எனது அனுபவங்களைக் கூறும்போதுதான் அவர் ஏன் அப்படி விசாரித்தார் என்பதை ஊகித்தேன். அது என் முதிய வயதாயிருக்கலாம்!

எனக்கோ, அடுத்த தரிசனம் எப்போ என்ற ஆவலும் உள்ளூர ஆரம்பித்துவிட்டது. அந்த ஏக்கத்திலேயே விமானத்தினுள்ளே பிரவேசித்தேன். எனது சிந்தனைகள் மீளாய்வுக்குட்பட்டது. "எடிஹாட்" விமானம் புறப்பட்டு "அபுதாபி"யில் தரிக்கும் வரை (உணவு இடைவேளைகள் உட்பட) இச் சிந்தனை ஓட்டம் தொடர்ந்தது.

"அபுதாபி"யில் போதிய நேரம் இருந்ததால், நல்லதொரு ஸ்நானம் செய்து இளைப்பாற அவகாசம் கிடைத்தது.

பின்னர் தொடர்ந்த பிரயாணம் சுமுகமாகவே இருந்தது.



ஒலிம்பிக் மைதானம் (விமானத்திலிருந்து)

அடுத்த நாள் காலை சூரியோதயத்தின்போது (ஏழரை மணி) லண்டன் விமான நிலையத்தில் இறங்கப்போவதை விமான அறிவிப்பாளர் கூறியதும் எட்டிப்பார்த்தேன். ஆஹா... புலம்பெயர்ந்த நாட்டின் நளினத்தை விபரிக்க முடியுமா? ஒலிம்பிக் மைதானம் தோன்றியதும் ஒரே பூரிப்பு.

விமானம் இறங்கியதும், நாட்டின் உட்புகு விதிமுறைகளை வழமைபோல நிறைவுசெய்து, நண்பர்களிடமிருந்து பிரியாவிடை பெற்ற பின்னர் – கைலாசம் கண்ட மாபெரும் வாழ்நாட் திருப்தியுடன் இன்பமாக இல்லம் சேர்ந்து குடும்பத்திருடன் இணைந்தேன்.

"ஓம் நமசிவாய"

## Kailash: A Spiritual Journey

## KAILASH PILGRIMAGE – THE FINALE

On our way back to Kathmandu from Kodari (Friendship Bridge) we met a few road traffic blocks, some due to earth slips, a minor accident (causing damage to the body of the two vehicles involved) and another one with an hour long stoppage following a quarrel between a vehicle driver and local youths, in spite of police interference! The weather had been quite bad with intermittent wind and rain.

Along the main road towards Kathmandu, the river called Bhote Kosi, bridges and waterfalls. This huge river joins another river from Tibet, Sun Kosi and continues towards central Nepal. Maintenance over these rivers in Nepal was very poor and the differences were obvious when I compared the photos (old and new).

With these impediments, we reached the hotel Malla by 9 pm. Our dinners, with refreshing tasty vegetable curries, were ready. I got the suitcases and rearranged my belongings as we planned to visit Pasupathinath temple on the following morning.

About 5am on the morning of July 28, 2013, I joined a small group of four to hire taxi for the Dharshan of Pasupathnath, as it was the time least crowded for a good view of the ancient Shiva lingam (Pasupathinath) of historical importance.

We followed the routines to enter the temple with no cameras etc. as the security was very tight inside the temple. Because Monday had been auspicious, there was a very long

que before entering the sanctum sanctorum. The crowd was very well managed with volunteers from local schools. The final Dharshan was very enchanting we all were quite satisfied, in spite of the long wait.

The final programme for the day was to purchase some gifts for family members and grandchildren and this was quite easy as the main shopping area (Thamel) was a walking distance from the hotel.

Following an early lunch, we left for the Kathmandu airport (Tribhuvan) after paying tributes to our Sherpas and other helpers. The return flight was quite uneventful and I reached home (London) safe on the following morning (July 29, 2013).

# மீண்டும் கைலை தரிசனம்

சற்குரு உருவாக்கிய "ஈஷா"வுடன் யாத்திரை – நீண்டகால அவா

நோக்கம், லண்டன் – காத்மண்டு, லாசா, கைலை (வடமுக) தரிசனம், "சத்சங்"

## மீண்டும் யாத்திரை ஏன்:

*28 ஜூலை – 12 ஆகஸ்ட் 2017*. அடியேன் உள்ளத்தில் ஆரம்பத்திலிருந்தே ஊற்றெடுத்த அவா கைலை தரிசனம். அதுவும் அதைத் தூண்டிய குருநாதர் சற்குருவுடன் (ஜாக்கி வாசுதேவ்) கூட அறிவும் ஆன்மீக திருப்தியும் பெருகத்தகு குழுவுடன் யாத்திரை செல்வது பெரும் பாக்கியமே. அது நிறைவேறியது 2017இல் குறையும் தீர்ந்தது. மறையோர் மனங்களில் எழுந்த கைலைத் தரிசனம் மீண்டும் பரிணமித்தது.

### ஆயத்தங்கள்

2017 ஜனவரியில் ஈஷா இணையத்தளத்தில் கைலை தரிசனம் பற்றிய விபரங்கள் இணையத்தளத்தில் கண்ணுற்றதும் ஆரம்பித்ததே இந்த இரண்டாவது முயற்சி.

ஈஷா யாத்திரைக் குழுக்கள் ஏழு அல்லது எட்டு பிரிவுகளைக் கொண்டன. மூன்று பிரிவுகளில் இந்தியாவிலிருந்து வருவோரும் அடுத்த நான்கு பிரிவுகளும் பிற நாட்டவர்க்குரியன. குறிப்பிட்ட சில பிரிவுகளுடன் சற்குரு ஒரு தடவையாதல் ஒரு சத்சங்கத்துக்கு தரிசனம் புரிவார். அவரது சொற்பொழிவுகளும் வினா/விடை நிகழ்ச்சிகளும் என்றென்றும் உற்சாகமூட்டக்கூடியன. அதுவும் சற்குருவின் ஆசி பெறுதல் என்பனவையும் ஈஷா குழுவுடன் யாத்திரை செல்வது எனது முக்கிய காரணம்.

ஈஷா குழுவுடன் கைலை யாத்திரை செல்லவிரும்பும் அன்பர்கள் முழு விபரங்களையும் அவர்களது இணையத்தளத்தில் (https://www.sacredwalks.org) பெற்றுக்கொள்ளலாம்.

ஆரம்ப விண்ணப்பம் புகைப்படப் பிரதிகள் ஆதியனவுடன், முன்னர் எதிர்பார்த்ததுபோலவே அவர்களது விண்ணப்பப் படிவத்தில் விடுக்கப்பட்ட நிபந்தனைகள் நிறைவேற்றப்படுதல் மிகமிக முக்கியம். அவற்றுள் முக்கியமாயிருந்தவைகள் இரண்டு – ஒன்று வயதும் (75) உடல்நிலையுடன் குறிப்பிட்ட உடற்செயற்பாட்டுக்குறைகள் – முன்னைய ஏனைய நோய்கள் இருப்பின், யாவும் தீர்க்கப்பட்டு கைலை யாத்திரைக்கு உகந்ததாயுள்ளேனா என்பதை நிரூபித்தல்.

இரத்த அழுத்தம் மற்றும் உடற்செயற்பாடுகள் (இன்சுலின் குறைபாடு) நல்ல நிலையிலுள்ளனவா என்பவற்றை நிரூபிக்க மருத்துவரின் அத்தாட்சிப்பத்திரமும் இரத்தப் பரிசோதனைகளின் பெறுபேறுகளின் பதிவுகளும் சமர்ப்பிக்கப்படல் வேண்டும். மற்றும் முன்னைய (புற்றுநோய்) சத்திரசிகிச்சையின் பெறுபேறுகள் அத்துடன் அதன் நிமித்தம் தற்போதைய உடல்நிலை திருப்தியானதெனவும் அத்தாட்சிப்படுத்தல் வேண்டும்.

எல்லாவற்றிற்கும் மேலாக, மலை ஏற்றத்துக்கு உகந்த காப்புறுதி மற்றும் எதிர்பாரா விளைவுகளால் ஏற்படக்கூடிய தடைகளை நிவர்த்திசெய்து புறப்பட்ட நாட்டுக்குத் திரும்பிவரவும் காப்புறுதி பெற்று அவற்றின் பிரதிகளை யாத்திரை பொறுப்புனருக்குக் கிடைக்கச்செய்தல் வேண்டும்.

இத்தனையும் திருப்தியாகப்பட்டாலே ஒருவர் யாத்திரைக்கு ஏற்கப்படுவார். இத்தனை கவனமாக முன்னோடியான தேவைகளைப் பூர்த்திசெய்தற்கு உரிய காரணங்கள் உள. சீன அரசாங்கத்தின் குடிவரவுத் தேவைகளும் யாத்திரைக்குழுவுடன் கூடவரும் மருத்துவரின் கவனமும் நன்கு உணரப்படக்கூடியன.

இவை அனைத்தும் திருப்திப்பட்டாலே ஒருவர் யாத்திரைக்கு ஏற்கப்படுவார். அதன் பின்னரே பிரயாண ஒழுங்குகள் முற்பணம் ஆதியன ஆரம்பிக்கும். வதியும் நாட்டிலிருந்து நேபாள தலைநகரம் காத்மண்டு செல்லும் பிரயாணம் யாத்திரீகரின் பொறுப்பாகும். ஈஷாவின் கைலை யாத்திரைக் கட்டணம் காத்மண்டுவிலிருந்து கைலை

சென்று திரும்பும்வரை செல்லுபடியாகும். கட்டணம் மூன்று தவணைகளில் அனுப்பிவைத்தல் வேண்டும்.

யாத்திரைக்கு ஏற்றுக்கொள்ளபட்ட பின் தொடர்ந்து மாதாந்தம் இரண்டு மூன்று தடவை மின்னஞ்சல் செய்திப் பத்திரிகைகள் (ஆங்கிலத்தில்) அனுப்பிவைக்கப்படும். இவற்றில் பல யாத்திரீகர்களுக்கு பயிற்சிகள், கொண்டுசெல்ல வேண்டிய பணம், உடைகள், காலநிலை இணக்கத்துக்குரிய அறிவுறுத்தல்கள், யாத்திரைக்கு முன்னரே உட்கொள்ள வேண்டிய மாத்திரைகள் இத்தியாதி உபயோகமான விடயங்கள் பல உள. அத்தோடு முன்னைய யாத்திரீகர் பலரின் ஊக்கமூட்டக்கூடிய அனுபவங்களும் இப்பத்திரிகைகளில் தோன்றும்.

மாதிரி செய்தித்தாளொன்று இப்பத்தியில் இணைக்கப் பட்டுள்ளது.

**காத்மண்டு பிரயாணம்:**

*27 ஜூலை 2017:*

இலண்டனிலிருந்து காத்மண்டுப் பயணம். அடுத்த நாள் (28 ஜூலை) பிற்பகல் அரைமணி நேர தாமதத்தில் காத்மண்டு நேரம் (நேபாள நேரம்) இரண்டு மணியளவில் திரிபுவனம் விமானநிலையத்தில் இறங்கினோம். நான் பயணஞ் செய்த எயர் இந்திய விமானத்தில் நால்வர் மட்டுமே ஈஷா யாத்திரீகராவர். யாருமே முன்னர் சந்தித்திராதவர்.

28 ஜூலை 2017 மதியம் இரண்டு மணியளவில் திரிபுவனம் (காத்மண்டு) விமானநிலையத்தை அடைந்தோம்.

சரியாக பதிநான்கு நாட்கள்தான் நேபாள மண்ணில் தங்கியிருப்போம். எனினும் எதிர்பாராத தாமதங்கள் ஏற்படுதல் சர்வசாதாரணம் என்பதனால், முப்பது நாட்கள் தங்கியிருக்குமளவு நாற்பது அமெரிக்க டொலர்கள் செலுத்தி குடிநுழைவு அனுமதி ("விசா") பெற்றோம்.

எதிர்பார்த்ததுபோல ஈஷா பதாகையுடன் கைலை மேலாடை பதித்த தன்னார்வ இளைஞர் இன்முகம் மலர ஈஷா பட்டுமாலை அணிவித்து வரவேற்றனர். வெவ்வேறு விமானங்களிலிருந்து ஈஷா யாத்திரீகர் வரவேண்டியிருந்ததால் சற்றே தாமதிக்க வேண்டியிருந்தது. அரை மணி நேரத்தில் ஈஷா கைலை யாத்திரீகர் தங்கவுள்ள "ராடிசன்" (Radisson) விடுதியை அடைந்தோம்.

"ராடிசன்" விடுதியை அடைந்ததும் மேலும் தன்னார்வ இளைஞர் எமது உடைமைகளை (சூட் கேஸ் முதலான) பக்குவமாக வைத்து அடையாள அட்டைகளையும் இணைத்தனர். மேலும் நான்கு அடையாள அட்டைகள், யாத்திரையின்போது உபயோகத்திற்காகக் கொடுத்தனர். தங்கும் அறை சாவியுடன், கைலை யாத்திரையின்போது எமது உடைமைகளைக் கொண்டுசெல்லவுள்ள (ஒவ்வொருவருக்குமான பிரத்தியேக இலக்கம் அச்சிடப்பட்ட) "டபிள் பைகள்" (Duffle bags), குளிர் மேலாடை, ஈஷா கைலை பதித்த "டீ ஷேர்ட்" நபருக்கொன்று கொடுக்கப்பட்டன.

மேலும் ஆச்சரியம் தரும் வண்ணம் என்னுடன் லண்டனில் ஈஷா அமைப்பில் தன்னார்வத் தொண்டராகவிருந்த டாக்டர் ஸ்ரீதேவியைக் கண்டதும் பேருவகை அடைந்தேன். பின்னர் விடுதி அறைக்குச் சென்று உடைமைகளைப் பாதுகாப்பாக வைத்துவிட்டு ஈஷா தன்னார்வத் தொண்டர்களை நாடி மேற்கொண்ட நிகழ்ச்சிகளை அறிய ஆவலுடன் விடுதியின் இளைப்பாறும் ஸ்தலம் நோக்கினேன்.

தொடர்ந்து ஓய்வுபெற்றபின்னர், சுவைமிகு இரவு உணவு. பற்பல புதிய ஈஷா அன்பர்களை சந்தித்து அளவளாவிய பின்னர் ஓய்வுபெற கொடுக்கப்பட்ட விடுதி அறைக்குப் போனபோது மேலுமொரு இன்பமான ஆச்சரியம் காத்திருந்தது. அமெரிக்காவிலிருந்து வந்த யாத்திரீகர் என முன்னர் அறிந்திருந்தாலும் அவர் எத்தகைய புதுமையானவர் என்பது உடன் புலப்படவில்லை. அவர்தான் அதிமிகு நுண்ணிய இலத்திரோன்களை ஆயும் பேராசிரியர் ராம்நாத் – தொடர்ந்து நல்லதொரு நெருங்கிய நண்பராகிவிட்டார். இதை ஏன் இங்கு குறிப்பிடுகிறேன் என்றால், இது போன்ற யாத்திரைகளில் எதிர்பாராதவிதமாக பல்வேறு திறைமை மிக்க நண்பர்கள் தொடர்பு ஏற்படுதல் சுற்றுலாக்களிலிருந்து பெறும் பாக்கியம் எனலாம்.

29ஆம் திகதி சனியன்று காத்மண்டு பசுபதிநாத் கோவில் (முன்னர் விபரிக்கப்பட்டது), பதான் (Patan) அரசமாளிகை, கிருஷ்ணர் கோவில் ஆகியவற்றைத் தரிசித்தோம். அன்று எதிர்பாராத மழை காரணமாக போக்குவரத்துச் சிரமங்கள் ஏற்பட்டன. அன்று மாலை யாத்திரீகர்களுக்கு முதலாவது மருத்துவ பரிசோதனை நடைபெற்றது. அதற்கு உதவும்

பாக்கியமும் கிடைத்தது. இம்மாதிரியான பரிசோதனைகள் தினமும் நடைபெற ஒழுங்குகள் செய்யப்பட்டிருந்தன.

முதல் நாள் சிவனடியார்கள் பெருந்திரளாக இருந்தமையால் பசுபதிநாத் தரிசனம் திருப்தியாயிருக்கவில்லை. எனவே, அடுத்தநாள் (ஜூலை *30*) மூன்று சக யாத்திரீகருடன் அதிகாலை *5* மணிக்கே புறப்பட்டு பசுபதிநாத் தேவஸ்தானம் சென்று மிகத்திருப்தியாக தரிசனம் செய்தோம். அதன் பின்னர் இன்னொரு விஷ்ணு கோவில், அம்மன் கோவில் ஆதியனவற்றையும் தரிசித்தோம்.

*31*ஆம் திகதி அதிகாலை யாத்திரீகர்களுக்கு பிரத்தியேகமாகக் கொடுக்கப்பட்ட கோணிப்பைகளை



பசுபதிநாத் கோவில்



கிருஷ்ணர் கோவில்

(duffle bags) பேருந்தில் ஏற்றுவதற்கு உகந்தவாறு ஒழுங்குசெய்த பின்னர் குருபூஜை நடைபெற்றது. யாவருக்கும் இறைபக்தியுடன் காப்புநூலும் (ரக்ஷாபந்தனம்) அணிவிக்கப்பட்டது. காலை *9* மணியளவில் திபெத் தலைநகரான லாசாவுக்கு செல்லும்பொருட்டு காத்மண்டு விமான நிலையம் நோக்கிப் பேருந்து புறப்பட்டது.

திரிபுவனம் விமானநிலையத்தில் கெடுபிடிகள் ஏதுமின்றி ஈஷா தொண்டர்களால் உரிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. "ஸிச்சுவான் எயர்" லைன்ஸ் என்ற சீன விமானம் மூலம் திபெத்திய தலைநகரான லாசா எனும் நகரை அடைந்தோம். இதுவே திபெத்தின் பிரமிக்கத்தகு தலைநகரம்.

அங்கிருந்து பேருந்துமூலம் கைலாஷ் மானசரோவர் எனும் நவீன வசதிகளுடன்கூடிய விடுதியை அடைந்தோம். அன்றும் வழமையான ஆயத்தங்கள் முடிந்தபின்னர் மாலையில் யாத்திரீகர் அனைவருக்கும் மருத்துவ பரிசோதனை அளிக்கப்பட்டது.

*01* ஆகஸ்ட், காலைக்கடன்கள் முடிந்தபின்னர் சத்சங். தொடர்ந்து லாசா சுற்றுலா போவதற்கு ஒழுங்கு




லாஸா மானஸரோவர் விடுதியில்

செய்யப்பட்டிருந்தது. முக்கியமாக திபெத்தின் சரித்திரப் புகழ்பெற்ற கோகாங் (Kokhang) மாபெரும் கோவில். நல்லதொரு வழிகாட்டியுடன் சென்று பார்த்தோம். மாலை சத்சங், சற்குருவின் திபெத் பற்றிய நல்லத்தொரு வீடியோ காண்பிக்கபட்டு, அன்றைய பொழுது முடிவுற்றது.

அடுத்த நாள் (ஆகஸ்ட் 02) அதிகாலை சத்சங் (பிரார்த்தனைக் கூட்டம் + குருபூஜை) முடிந்த பின்னர் சைகட்சு (Saigatsu) நோக்கிப் புறப்பட்டோம். வழியில் அவ்வப்போது கைலை மலையேறும்போது ஏற்படக்கூடிய விபாதகளைத் தடுக்கும்முகமாக பல பயிற்சிகள் கொடுக்கப்பட்டன. அன்று மாலை ஏறத்தாழ 4,000 மீற்றர் உயரத்தில் அமைந்த கேசர் (Hotel Gesar) விடுதியை அடைந்தோம்.அன்று இரவு மட்டுமே அவ்விடுதியில் தங்கினோம். அடுத்த நாட்காலை (ஆகஸ்ட் 03) யாத்திரை தொடர்ந்தது. மழையும் காற்றும் பிரயாணத்தை அசௌகரியப்படுத்தினும் பேருந்தில் உள்ளோரின் ஆடல் பாடல்களினால் எல்லாவற்றையும் மறந்து சுமுகமாகச் சென்றது. இடையே, வனாந்தரம் போன்றதொரு பகுதியில், பேருந்தின் சக்கரம் காற்றிழந்துபோனதும் அதை சரிபார்த்து மீண்டும் யாத்திரையைத் தொடர நீண்ட நேரம் சென்றது. வெகு தாமதத்தின் பின்னர் நள்ளிரவு ஸாகா (Saga) விடுதியை அடைத்தோம். இரவு உறக்கத்தின் பின்னர்,

(ஆகஸ்ட் 04) அதிகாலையே சத்சங் (பிரார்த்தனை ஒன்றுகூடல்) முடிந்ததும் யாத்திரை தொடர்ந்து மாலையே தார்சன் நகரிலுள்ள ஹிமாலயன் கைலாஷ் (Himalayan Kailash Hotel) விடுதியை அடைந்தோம். சிற்றுண்டி அருந்திய பின்னர் சற்றே இளைப்பாறினோம். மாலை சத்சங், தொடர்ந்து சத்குருவின் கைலை யாத்திரை பற்றிய விபரமான வீடியோ காண்பிக்கப்பட்டது.



ஹிமாலயன் கைலாஷ் விடுதி

அடுத்த நாள் (ஆகஸ்ட் 05), அதிகாலை ஆறு மணியளவில் யாத்திரை ஆரம்பமாகும் இடத்துக்குப் (யமத்வார்) போக பேருந்து தயாரானது.

பத்து மணியளவில் அவ்விடம் சேர்ந்தோம். யாத்திரீகர் அனைவரும் தத்தமக்கு அன்றைய பொழுதுக்கு



யமத்வாரில்

வேண்டிய சிற்றுணவு, குடிநீர், சுவாத்தியத்துக்கு ஏற்ற உடைகள் ஆதியனவற்றுடன் பாத யாத்திரை ஆரம்பித்தோம். தேவையானோர் குதிரைகளை வாடகைக்கு அமர்த்தினர். எனது வல்லமையின் நம்பிக்கையில் கால்நடையாகவே திருக்கைலை மலை ஏறும் எண்ணம் தூண்டியது. ஒரு உதவியாளரைமட்டும் வாடகைக்கு அமர்த்திக்கொண்டேன்.

வழியே கைலையின் பேரழகை (முன்னர் விபரிக்கப்பட்டதுபோல) ரசித்துக்கொண்டே சென்றோம்.



எனது உதவியாளருக்கு ஓரளவு ஆங்கிலம் தெரிந்தமையால் நடைப்பயணம் சற்றே சுலபமாயிருந்தது. கைலையின் பேரழகை உவகைக்கண்ணீர் பெருக அன்று மதிய போசனத்துக்கே வடமுனைக்குச் சென்றுவிட்டோம்.

இந்த அருமையான சூழலிலேயே எமக்கு தங்கும் விடுதி அமைந்திருந்தது. சென்ற யாத்திரையிலும் பார்க்க இது மேலும் சௌகரியமாயிருந்தது குறிப்பிடத்தக்கது.

அடுத்தநாள் (ஆகஸ்ட் 06) காலை கைலையை நோக்கிய திடல் ஒன்றில் சற்குருவின் உருவப்படத்துடன் விசேஷ நீண்ட ஆராதனைக் கூட்டம் நடைபெற்றது. யாத்திரீகர்




பலர் பேரானந்தத்தில் மூழ்கி, கண்ணீர் மல்க கைலைப் பெருமானை வீழ்ந்து வீழ்ந்து வணங்கினர்.

அன்று மாலையே விடுதிக்கு மீள்யாத்திரை புறப்பட்டுவிட்டோம். மாலை ஏழு மணியளவில், பேருந்து மூலம் அருள்மிகு மானஸரோவர் தடாக அண்மையிலுள்ள விசேஷ விடுதியை அடைந்தோம். யாத்திரீகர் பலர் நாட்பூராவும் நடந்த களைப்புமிக ஈஷா பஜனைகளுடன் ஆனந்தத் தாண்டவத்தில் ஈடுபட்டனர்.

அடுத்தநாள் மானஸரோவருக்கு அருகாமையில், பிரத்தியேகமாகத் தயாரிக்கப்பட்ட இடத்தில் விசேஷ மகா ஆராதனையும் தொடர்ந்து அருட் தடாக ஸ்நானமும் நடைபெற்றது. பனிக்கட்டியை ஒத்த குளிரிலும் அதிமிக




கைலையின் வடமுக அழகு



உருக்கமான பக்தி மேலிட யாவரும் மானஸரோவரில் மூழ்கி எழுந்தது கண்கொள்ளாக் காட்சிதான். அடியேன் முன்னர்போல மூன்று தடவை புனித மானஸரோவரில் மூழ்கமுடிந்ததை நானே இன்றும் ஆச்சரியத்துடன் மீள எண்ணுகிறேன்.

புனித யாத்திரையை மீள்நினைவுகூர்ந்து பலர் ஆடியும் பாடியும் அன்றைய பொழுதைக் கழித்தனர்

அடுத்தநாள் (ஆகஸ்ட் 08), அதிகாலை குருபூஜை முடிந்ததும் "ஸாகா" நகர் நோக்கிப் புறப்பட்டோம். பெருமழையும் காற்றும் எமது பயணத்தை இடர்பட வைத்தாலும், கூடவந்த யாத்திரீகரின் உற்சாகம்கூடிய ஆடல்களும் பாடல்களும் எல்லாவற்றையும் மறந்து இன்பமான பிரயாணமாக்கியது.

"சாகா"வில் முன்னர் தங்கிய விடுதியிலேயே இரவு தங்கினோம். அடுத்த நாள் அதிகாலை நான்கு மணிக்கே எழுந்து காலைக்கடன்கள் முடித்து குளித்து ஆறுமணிக்கு குரு பூஜை முடிந்ததும் "சைகட்சு" நகருக்குப் புறப்பட்டோம். பெருமழையும் காற்றும் சக யாத்திரீகரின் ஆடல்பாடல்கள் பயணத்தை மிருதுவாக்கியது. இடையிடையே சற்குரு ஏற்கெனவே வந்து இந்தியா திரும்பிவிட்டதாக ஏமாற்றத்துக்குரிய செய்திகளையும் கேட்கமுடிந்தது. அடுத்த நாள் (ஆகஸ்ட் 10) யாத்திரை லாசா நகர் நோக்கி ஆரம்பித்து அன்று மாலை நாலரை மணியளவில் விடுதியை அடைந்தோம். அன்று மாலை லாசா பேருந்து வண்டியில் நகர்ப்புற கடைகளுக்குச் செல்லும் வாய்ப்புக் கிட்டியது.

அடுத்த நாள் காலை குரு பூஜைக்குப் பின்னர் லாஸா விமானநிலையம் நோக்கிப் புறப்பட்டோம். அங்கு வழமையான – சீனாவுக்கே உரித்தான கெடுபிடிகளையெல்லாம் கடந்து சீன விமான உட்செல்லும் இடத்துக்கு விரைந்தோம் அங்கே கடமையிலிருந்த பெண்மணிக்கோ சீன/திபெத்திய பாஷை மட்டுமே பேசமுடிந்தது. நல்ல வேளையாக எமது சக யாத்திரீகர் ஒருவர் சிங்கப்பூர் சீனர், அவரது பெருங்கருணை யினால் பெண்மணியுடன் தொடர்புகொண்டபோது, பற்பல தேடுதல்களின் பின்னர் எமது சிலரின் பெயர்கள் அவரது பயணியர் பட்டியலில் இல்லை. பெரும் சிரமத்தின் பின்னர் அத்தவறின் நிமித்தம் எம்மவர் 35 பேருக்கு அன்று பயணம் செய்யும் வாய்ப்புத் தவறிவிட்டது யாவருக்கும் பெருத்த ஏமாற்றமாகவே இருந்தது. இதனால் பயணிகள் (அமெரிக்கா, இங்கிலாந்து, சிங்கப்பூர் இத்தியாதி பயணிகள் சொந்த ஊர்களுக்குத் திரும்பும் (முன்னரே ஒழுங்குசெய்திருந்த) விமானங்களில் செல்லமுடியாத நிலை ஏற்பட்டது.

மீண்டும் லாஸா விமானநிலையத்திலிருந்து, பலத்த ஏமாற்றத்துடனும் காத்மண்டு திரும்பும் வாய்ப்பு எப்படி /எப்போ கிடைக்குமோ என்ற நிலைப்பாடுகள் எதுவுமே தெரியாதும், முன்னிருந்த விடுத்திக்கு அருகாமையிலுள்ள இன்னொரு விடுதிக்கு (பிரம்மபுத்ரா ஹோட்டல்) கூட்டிச் செல்லப்பட்டோம். மேற்கொண்டு என்ன செய்வதுபற்றி ஈஷா யாத்திரைத் தொடர்பாளர்களும் பலவாறு முயற்சிகளைத் தொடர்ந்த வண்ணம் இருப்பதாகவும் அறிதோம்.

அடுத்து இரண்டு நாட்களும் பல்வேறு மன ஓட்டங்களுடன் லாஸாவின் விடுதியில் தங்க வேண்டிய நிர்பந்தத்துக்குள்ளானோம். எமது யாத்திரீக அங்கத்தினர் பெரும்பான்மையோர் மிகவும் தெய்வசிந்தனையும், திறந்த மனப்பான்மையையும் கொண்டிதிருந்தமை எல்லோருக்கும் மனத்திடத்தைக் கொடுக்கப் பக்கபலமாக அமைத்தது. மேலும், அழகான லாஸா நகரைச் சுற்றிப்பார்க்கவும் நல்லதொரு சந்தர்ப்பம் கிடைத்தது.

மூன்றாவது நாளே காத்மண்டு திரும்பும் விமான வசதி கிடைத்து. முன்னர் தங்கிய ராடிஸன் விடுதிக்கே வந்து சேர்ந்தோம்.

அந்த விடுதியில் பல்வேறு குழுக்களைச் சேர்ந்த ஈஷா யாத்திரீகர் தங்கள் தங்கள் அனுபவங்களைப் பரஸ்பரம் பரிமாறிக்கொண்டனர். சக யாத்திரீகர் பலர் நினைவுப் பரிசில்கள் வாங்கிச் சேர்க்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர்.

தொடர்ந்து, அடுத்தநாள் (ஆகஸ்ட் 13) சற்குரு காத்மண்டு "கோகர்ணம்" எனப்படும் விடுமுறை ஓய்விடதில் எமது குழுவுடன் "சத்சங்" நடத்தப்போவதாக அறிந்து அளவற்ற ஆறுதலடைந்தோம். **அனைவரும் பேருவகையுடன் பெரும் சிரமங்கள்கூடிய பேருந்துப் பயணம் மேற்கொண்டோம்.**

கோகர்ண விடுமுறை ஓய்வு மையத்தைப் பற்றிய சிறியதொரு அறிமுகம்: இவ் விடுமுறை ஓய்விடம் காத்மண்டு நகரின் எல்லைப்புறம் (பத்து மைல்களுக்கப்பால்) உள்ள பாதுகாக்கப்பட்ட வன வலையமாகும். முற்காலத்தில் இவ்வனம் மன்னர்கள் வேட்டையாடும் வனமாக இருந்ததாம். பின்னர் நாநூற்றெழுபது ஏக்கரில் அமைந்த அழகான வசதிபடைத்த விடுமுறை ஓய்வுமையமாக்கப்பட்டது.



கோகர்ண விடுமுறை ஓய்வு மையம்

செல்லும் பாதைகள் முந்திய வருடம் நிகழ்ந்த பூகம்பத்தினால் இன்னும் திருத்தப்படாத நிலையிலிருந்தன. தொடர் மழையும் காற்றும் பிரயாணத்தை இரட்டித்த இடர்களுக்குள்ளாக்கின. சற்குருவின் தரிசனம் கிடைக்கப்போகின்ற பேராவல் இந்த மோசமான இயற்கை சார்ந்த இன்னல்களைப் பொருட்படுத்தவேயில்லை.



சற்குருவுடன் எமது குழுவின் ஒரு பகுதியினர்

ஏறத்தாழ இரண்டு மணிநேரப் பிராயாணத்தின்பின்னர் கோகர்ணம் விடுமுறை ஓய்விடத்தை அடைந்தோம். அங்கும் ஒரு மணித்தியால தாமதத்தின் பின்னர்தான் சற்குருவின் தரிசனம் கிடைத்தது. பிரயாண தாமதம் சற்குருவுக்கு மட்டுமல்லவே!

அரும்பெரும் கருத்துரைகள் நிறைந்த சத்சங் பூர்த்தியானதும், எமது வேண்டுகோளை ஏற்று சற்குரு குழுவுடன் புகைப்படம் ஒன்றையும் எடுத்துக்கொண்டோம்.

வாழ்வில் பெரியதொரு சாதனை படைத்த மனத் தூய்மையுடன் விடுதி திரும்பினோம்.

மேற்கொண்டு, பேராவலுடன் மேற்கொண்ட கைலை யாத்திரை அதிதிருப்தியாக நிறைவேற உறுதுணையாயிருந்த ஈஸ்வரனைப் பிரார்த்தித்தபடி ஊர்திரும்பும் பிரயாணம் இனிதே பூர்த்தியானது.

"ஓம் நமசிவாய"

## Kailash: A Spiritual Journey

## KAILASH PILGRIMAGE – REVISIT

This additional chapter could be essentially a repeat of the pilgrimage and therefore I mention a few features that could be of interest to the reader.

My thirst for the Holy Kailash view with Isha organisation under Sadhguru Jaggi Vasudev's guidance and advice was accomplished in 2017 and that was only after several considerations due to my age (75) as a main factor.

It was very indecisive few days before I was confirmed of my joining the Isha group as I had to produce my GP's certificate of my fitness for this trekking, investigation reports etc. as per the request from the organisers. However, the pilgrimage with Isha groups was quite well organised and disciplined, throughout the journey, in spite of some hick ups when we were in Chinese territory.

Our initial starting point, as with most organisations, was from Kathmandu (Nepal). The route to Holy Kailash was different as our journey from Kathmandu was by flight to Lhasa (the capital city of Tibet) from where it was a coach travel up to Tarboche – from where the trek commenced. The trek from the Yamadwar to North Face of Holy Kailash, without using pony was quite satisfying and I should be very grateful for the caring Nepalese porter.

The highlights of my second pilgrimage were:

1. Regular updates with news-letters almost weekly until the commencement of the flight from London (a sample of news-letter is annexed)

2. the daily Satsang (brief meeting with information and prayers) in the mornings,

3. daily health check for each of the seventy members of our group with emergency help whenever needed, proper exercises to help with high altitudes and trek, suitable balanced diet

4. proper travel arrangements and

5. Most importantly, entertainments at intervals, involving the members of the group.

Final Satsang with Sadhguru was very rewarding, with a group photograph with him, at the end of the session, in Kathmandu (Gokarna Forest Resort)!

இணைப்பு: 1

## "ஈஷா"வின் முதலாவது செய்திப் பத்திரம் (உதாரணம்)

(திருத்தி குறுக்கி அமைக்கப்பட்டது)

*Namaskaram,*
*A journey that begins before too long,*
*a desire to reach, overwhelmingly strong.*
*A journey to this sacred shrine*
*a pilgrimage of a lifetime.*
*A journey to the most beautiful place, may we all experience this Grace.*



***"Kailash is a space of enormous Grace. If you allow yourself to feel its power and its Grace, you having been born becomes worthwhile."***

-Sadhguru

## MOUNT KAILASH

To see the grandeur of a mountain, one must keep one's distance; to understand its form, one must move around it; to experience its moods, one must see it at sunrise and at sunset. But to truly know it, one must journey the mountain with a Master, an Enlightened Being.

Kailash sits amongst a picturesque landscape in the mountains of the Nagri region of western Tibet. There is a small area inhabited by a few nomadic tribes, but the rest is mostly virgin landscape with no vegetation. A captivating sight to say the least!

The mountain is described in the ancient texts as a fantastic "Pillar of Light", with its roots in the lowest hell and its peak touching the heavens.

Tibetans have aptly named this mighty rock as "The Precious Jewel of the Snow". Mount Kailash is regarded as the spiritual centre of the universe, revered by Hindus, Buddhists, Jains and Bonpos alike.

Hindus, see Kailash as the abode of the supreme God, Lord Shiva; Shiva is said to reside on top of this wondrous peak in an eternal state of meditation, creating the sustaining force that holds the universe together.

The ancient religion of Bon refers to the mountain as "Water's Flower".

Buddhists see the mountain as the "Navel of the Universe".

Jains revere Kailash because it is where their first leader attained enlightenment. Mount Kailash is a profoundly sacred place with many descriptive names, but words simply cannot do it justice.

We will experience this for ourselves soon. Standing at an impressive height of 6718 meters (over 22,000 feet), Kailash has a distinct pyramid-like shape, with four sheer faces marking North, South, East and West.

It may be unlikely that we spot any of these beautiful creatures; however, we thought you might be interested to know a little about the wild life unique to the Himalayas.

Depending on the elevation, hundreds of bird species, and the Golden Langur Monkey inhabits the lower regions.

As the elevation rises, Musk Deer, Red Pandas and Takins (a goat-antelope) roam the hilly, forested environments.

The endangered snow leopard is found higher up, as they prefer steep, rugged terrain, as do the Himalayan Tahr (large, goat-like animal) and the Himalayan Pika (a cute little mammal, like a tiny rabbit). The native wildlife also includes many threatened species such as tigers and Asian elephants. May we be blessed with some sightings of these magnificent creatures in their natural habitat.

**PREPARATION TIPS** a few days before heading out the door!

We ask that you review your preparation checklists very carefully, one by one, a few days in advance to make sure you have everything.

Stay hydrated by drinking 3 - 4 litres of water per day and avoiding dehydrating food and drinks such as alcohol, coffee and spicy foods.

Keep up the daily walk and sadhana. Please keep in mind that the purpose of Sacred Walks Sojourns is to bring you to sacred places where you have the opportunity to imbibe the beauty and the energy of the surroundings. Therefore, it is important to keep your focus on the journey. It is essential that you organize your responsibilities in advance so that you can minimize outside communication, which will simply be a distraction.

To travel the parikrama around Kailash, is considered most auspicious, and devotees have been circumambulating this holy mountain for centuries. Pilgrims of several religions

